மத்தியப் பிரதேசத்தில் ஆளும் கட்சியாகத் தொடர்ந்து கொண்டிருக்கும் காங்கிரஸ், இந்த முறை பெரும் சவாலைச் சந்திக்க வேண்டியுள்ளது. 'இன்கம்பன்ஸி ஃபேக்டர்' என்ற ஆளும் கட்சிக்கு எதிரான அலைக்குப் பயந்து, பல தலைகள் தொகுதி மாற்றி வேறு தொகுதிகளில் போட்டியிட மனு கொடுத்திருக்கின்றன. மாதவ்ராவ் சிந்தியா குனாவிலிருந்து போட்டியிட விரும்புகிறாரென்றால், அர்ஜுன் சிங், சத்னா தொகுதியைக் கேட்டிருக்கிறார். அதைப் போலவே அஜீத் ஜோகி ராய்கட் தொகுதியை விட்டுவிட்டு, ஜஞ்கிர் அல்லது ஷடோல் தொகுதியிலிருந்து நிற்கக் கோரிக்கை வைத்திருக்கிறார். மற்றொரு ம.பி. பெருந்தலையான வி.ஸி.ஷுக்லா, ராய்பூர் தொகுதியிலிருந்து விலகி மஹாஸமுண்ட் தொகுதியிலிருந்தும், மோதிலால் வோரா தமது ராஜ்நந்த் நகர் தொகுதியை விட்டு விலகி துர்க் தொகுதியிலிருந்தும் போட்டியிடப் போகிறார்கள். சத்திஸ்கர் பகுதியில் முன்னேற்றம் என்பது தலைவர்களின் குடும்பத்தினரின் முன்னேற்றமாகவே போய்விட்ட நிலையில், இந்தப் பகுதியிலிருந்து நிற்கவே பல பெருந்தலைகள் அஞ்சுகின்றன! ஆக ம.பி. காங்கிரஸுக்கு சிம்மசொப்பனமாகப் போய்க் கொண்டிருக்கிறது. இதில் ஆச்சரியம் என்னவெனில், இவர்கள் அனைவருமே பெருந்தலைகள், மக்களிடையே செல்வாக்குப் பெற்றதாகக் கூறப்படுகிறவர்கள். பல காலம் அமைச்சர்களாக, முதல்வர்களாகப் பல பதவிகளில் இருந்தவர்கள். இவர்கள் அனைவரும் அடுத்த தேர்தலில் தமது தொகுதிகளிலிருந்து போட்டியிட வேண்டாமென ஓடுவது விசித்திரமான உண்மை!

# வாஜ்பேயியை எதிர்த்துப் போவது



இவருக்காக யக்ஞம்!

வாஜ்பேயியை எதிர்த்து லக்னோவில் நிறுத்த 'சூட்டபிள் பாய்' ஒருவரைத் தேடிக் கொண்டிருக்கிறார் சமாஜ்வாதிக் கட்சித் தலைவர் முலாயம் சிங் யாதவ். இந்திப் படத் தயாரிப்பாளர் முஸாஃபர் அலி தொடர்ச்சியாக இரண்டாவது முறை பிரதமரை எதிர்த்து நிற்க மறுத்து விட்டதாகத் தெரிகிறது. அலிக்கு ராஜ்ய சபை பதவி தருவதாகச் சென்ற முறை ஆசை காட்டப்பட்டது. ஆனால் கொடுக்கப்படவில்லை. நடிகர் ராஜ் பப்பரை வாஜ்பேயியை எதிர்த்து நிற்க வைத்து, அவர் தோற்ற பிறகு ராஜ்ய சபா தானம் வழங்கப்பட்டது. அதற்கு முன் வாஜ்பேயியிடம் தோற்ற முனவ்வர் அலி ராஜ்ய சபா உறுப்பினராக்கப்பட்டார். ஆக வஞ்சிக்கப்பட்டதாக வருந்திக் கொண்டிருக்கும் முஸாஃபர் அலி இனி முலாயமின் மூஞ்சியில் கூட முழிக்க மாட்டேன் என்று சபதமெடுத்து விட்டார். இந் நிலையில் ஹிந்தித் திரைப்பட உலக லட்சிய நாயகி ஷபானா ஆஸ்மியை வாஜ்பேயியை எதிர்த்து நிறுத்தத் தன்னால் ஆன முயற்சிகளை எடுக்கிறார், முலாயம். சோனியா கட்சி, சுனில் தத், வாஜ்பேயியை எதிர்க்க வேண்டுமென விரும்புகிறது. ஆக, லக்னோ தொகுதியில் போட்டி, இம்முறை நட்சத்திரப் போட்டியாக இருக்கப் போவது போல் தெரிகிறது.

தேர்தல் நெருங்க நெருங்க, யாக யக்ஞங்கள் வேள்விகள் என்று ஆங்காங்கே நிறைய நடக்க ஆரம்பித்திருக்கின்றன. காசி

விஸ்வநாதர் கோவிலில் சோனியா ஜெயிக்க ஒரு வார யக்ஞம் நடத்தப்பட்டது. ம.பி. முதல்வர் திக் விஜய் சிங் சென்ற இடமெல்லாம் சிறப்பித்திருக்கிறதோ இல்லையோ, யாக யக்ஞங்கள் நடக்கின்றன. இப்போது பஞ்சாப் மாநிலம் ஹோஷியார்பூர் தொகுதியைக் கேட்டுக் கொண்டிருக்கும் (சோனியா கட்சி) அம்பிகா சோனி, ஒரு ஆரம்ப டூர் அடித்தார். அப்போது ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கோவில் உள்ள பகுதி வழியாக அவர் போக நேர்ந்தது. உடனே அங்குள்ள பூசாரிகளை வைத்து ஒரு யாகம் செய்தார். ஆனால் ஞாபகமாகக் கையுடன் கொண்டு சென்றிருந்த கணிப்பொறிக்குள் தொகுதி பற்றிய பல விவரங்களை அடக்கிக் கொண்டும் சென்றார்!

**பி**ரதமரின் உத்தரவின் பேரில் சமர்ப்பிக்கப்பட்ட ஒரு புலனாய்வு அறிக்கை, கார்கில் நடவடிக்கை குளிர்காலம் வரை தொடரும் என்று கூறுகிறதாம். அதற்குள் பாகிஸ்தானே ஆக்கிரமிப்பாளர்களை அகற்றினால்தான் உண்டு என்று கூறும் இவ்வறிக்கை, சில நாட்களுக்கு முன் பிரதமரிடம் சமர்ப்பிக்கப்பட்டதாம். இப்போது ராணுவத்தினர் வேண்டுவது குளிர்காலத்திற்குத் தேவையான உடைகள், பிற பொருள்கள். பிரச்னை ஆரம்பிப்பதற்குச் சில நாட்களுக்கு முன்னர்தான், குளிர்கால உடைகள் தேவையில்லை, ராணுவம்

# யார்?

கீழ் முகாம்களுக்கு வந்து விடலாம் என்று தீர்மானிக்கப்பட்டதாம். ஆனால் இப்போது அதே உடைகளை அவசர அவசரமாக என்ன விலையானாலும் வாங்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கிறது.

**ரா**ம் ஜெத்மலானி சட்டத் துறைக்குச் சென்றவுடன் ஒரு நூதனமான காரியத்தைச் செய்தார். தம்மைத் தொடர்ந்து நகர் வள மேம்பாட்டுத் துறை அமைச்சராகி விட்ட



• யுத்தம் எதுவரை?

ஜக்மோஹனைத் தொடர்பு கொண்டு, தமது முன்னாள் அதிகாரிகளையே- (சர்ச்சைக்குரிய ஐ.ஏ.எஸ். அதிகாரி கே. ஜே. அல்ஃபோன்ஸ் உட்பட) ஜக்மோஹன் வைத்துக் கொள்ள வேண்டுமென்றாராம். ஜக்மோஹனின் பதில் :

"நான் விரும்பும் அதிகாரிகள் என் துறைக்கு என்னைத் தொடர்ந்து என்னோடு வந்து விடுவார்கள். என்னால் இந்தக் கோரிக்கையை ஏற்க முடியாது."

**பா.**ஜ.க. தனது சார்புப் பத்திரிகை ஆசிரியர்களை அழைத்து இரு நாள் கூட்டம் நடத்தியது. தேர்தல் சமயத்தில் எப்படிச் செயல்பட வேண்டுமென்று லெக்சர் எடுத்தவர் சுதர்ஷன். ஆர்.எஸ்.எஸ். தமிழ்ப் பத்திரிகையான விஜய பாரதம் ஆசிரியர் சுந்தர ஜோதி இந்த முகாமில் கலந்து கொண்டார். பயிற்சிப் பாடம் முழுக்க ஹிந்தியில் எடுக்கப்பட, திண்டாடியவர்கள் கேரளா, தமிழ் மற்றும் ஓரிரு கிழக்கு, வட-கிழக்கு மாநில சங்கப் பத்திரிகையாளர்கள்!



• எதிர்க்கப் போவது யார்?

— இந்திரப்ரஸ்தன்




சுசித்ரா (கிருஷ்ணமூர்த்தி); மாடல், பாடகி, நடிகை. தவிர, இன்னொரு பிரபல முகமும் உண்டு. அதுதான் திருமதி சேகர் கபூர். குரலில் இனிமை ஊஞ்சலாடுகிறது. வாய் நிறைய புன்னகை. இவரது லேட்டஸ்ட் இசை ஆல்பம்: ஸிந்தகி (வாழ்க்கை என்று அர்த்தம்).

விற்பனை பிக் அப் ஆகி விட்டது. இன்னமும் அதிகரிக்கும் நோக்கத்தில், ஆல்பம் வெளியிட்டிருக்கும் ஹெச்.எம்.வி. நிறுவனம், சுசித்ராவை சென்னைக்கு வரவழைத்திருந்தது. லேண்ட் மார்க், உள்பட மூன்று இடங்களில், இசை ரசிகர்களைச் சந்தித்துப் பேசவும், ஆட்டோகிராப் போட்டு, ஆல்பம் விற்கவும் ஏற்பாடு.

உபரியாக, 'நான் அறிந்த சுசித்ரா' என்று ஒரு போட்டி. அதில் அதிர்ஷ்டசாலியைத் தேர்ந்தெடுத்து, இரவு சுசித்ராவுடன் டின்னர் சாப்பிடும் வாய்ப்பும் தரப்பட்டது.

லேண்ட் மார்க் புத்தக விற்பனை நிலையத்திற்கு சுசித்ரா வந்திருந்தபோது நாமும் ஆஜர். ரசிகர்களிடம், "வெறுமனே ஆட்டோகிராப் புத்தகத்தை நீட்டினால் ஆட்டோகிராப் போட மாட்டேன்; கேஸட் அல்லது சி.டி. வாங்கினால் அதில் போட்டுத் தருவேன்" என்று கண்டிப்பாய்க் கூறிவிட்டார். சுசித்ரா பற்றி கேள்விகள் கேட்டு, சரியான பதில் சொன்னவர்களுக்கு, கேஸட் பரிசளிக்கப்பட்டது. இதில் தமாஷ் என்னவெனில் பரிசு பெற்றவர்களில் முக்காலே மூணுவீசம் பேர், ஏற்கெனவே காசு கொடுத்து கேஸட் வாங்கினவர்கள். பரிசு உபரிதான்!

கேள்வி - பதில் சொல்லாத ஒருவருக்குக் கூட பரிசு கிடைத்தது. ஆமாம்! தமது பிறந்த நாள் நவம்பர் 27 என்று சுசித்ரா சொல்ல, "ஓ! என்னுடையதும் அஃதே!" என்றார் ஒரு பெண்மணி. "நிஜமா? நிஜமா? நிஜமா? நிஜமா?" என்று நாலு தடவை கேட்டு உறுதிப்படுத்திக் கொண்ட பின், தமது ஆட்டோகிராப் போட்ட கேஸட் ஒன்றைப் பிறந்த நாள் பரிசாக, பிறக்காத நாளில் பரிசளித்தார்.

ரசிகர்கள் சந்திப்பு முடிந்ததும் "ஒரே பசி!" என்ற சுசித்ராவுக்கு, உடனடியாய் 'கோக்'கும் சாண்ட்விச்சும் வரவழைக்கப்



• ரசிகர்களுக்கு ஆட்டோகிராஃப்

# சென்னைக்கு வந்த சங்கீதப் புயல்!

பட்டன. தமது வயிற்றுக்கு உணவிட்ட படியே நமது கேள்விகளுக்கும் பதில்களைப் பறிமாறினார்.

''பாடகி, மாடல், நடிகை. இந்த மூன்றில் உங்களுக்குப் பிடித்த 'அவதாரம்' எது?''

''மூன்றுமே பிடித்திருக்கிறது.''

''உங்களுக்கு ரொம்பப் பிடித்தது?''

''மாடலிங், இசை, நடிப்பு.''

''போதும், கடுப்படிக்காதீங்க. இவற்றுள் ஏதாவது ஒன்றைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றால், எந்த விஷயத்தைத் தேர்ந்தெடுப்பீர்கள்?''

''இசையைத்தான்!''

''நீங்கள் முறையாக இசை பயின்றவரா?''

''ஆமாம்! ஆறு வருடங்கள் ஹிந்துஸ்தானி இசை கற்றேன்!''

''கிளாசிகல் இசையில் தொடராமல், மாடர்ன் பாப்பிற்கு வந்தது ஏன்?''

''கிளாசிகல் ரொம்ப சிரமமான விஷயம். இது எனக்குச் சுலபமாக இருக்கிறது.''

''உங்களுடைய இசையார்வத்துக்கு இன்ஸ்பிரேஷன் என்று யாரைச் சொல்லுவீர்கள்?''

''ஓ! பெரிய பட்டியலே போடலாம். எம்.எஸ், எம்.எல்.வியில் ஆரம்பித்து ரொம்ப நீளமாகப் போகும் அந்தப் பட்டியல்!''

''பிற்காலத்தில் பாடகியாக வேண்டும்; நடிகையாக வேண்டும் என்பதெல்லாம் உங்களுடைய இளமைக் காலக் கனவா?''

''வளர்ந்து, பெரியவளானதும் பெரும் புகழும் பெற்று விளங்க வேண்டும் என்று ஆசை இருந்தது. இசைத் துறையில் அல்லது சினிமாவில் என்றெல்லாம் குறிப்பிட்டுக் கனவு காணவில்லை.''

''உங்கள் குடும்பம் சினிமாப் பின்னணி கொண்ட ஒன்றா?''

''ஆம்! என் கணவர் சினிமா டைரக்டர் தானே!''

''உங்கள் பெற்றோர்?''

''என் அப்பா இன்கம் டாக்ஸ் கமிஷனர். உடன் பிறந்த மற்றவர்கள் எல்லாரும் நன்றாகப் படித்து பொறுப்பான பதவிகளில், பிசினஸில் இருக்கிறார்கள். எனக்குத்தான் படிக்கிற நாளில், மாடலிங் செய்ய ஆர்வம் ஏற்பட்டது. மாடலிங் வாய்ப்புகள் வந்த போது, பெற்றோருக்கு அது துளியும் பிடிக்கவில்லை. நான் வீட்டை விட்டு வெளியேறினேன். தனியே வேறு ஒரு வீட்டில், 'பேயிங் கெஸ்ட்' ஆகத் தங்கினேன். கட்டுக்கோப்

பான குடும்பத்தில் பாதுகாப்பான சூழ்நிலையில், சௌகரியமாக வளர்ந்து விட்ட எனக்கு, புதிய வாழ்க்கை, சவால்கள் நிறைந்த ஒன்றாக இருந்தது. உலகம் என்பது என்ன? வாழ்க்கை என்பது என்ன? என்றெல்லாம் நான் புரிந்து கொள்ள நல்லதொரு சந்தர்ப்பமாக அமைந்தது. எனக்கு தன்னம்பிக்கை ஏற்படுத்திய அஸ்திவாரம் அந்த வாழ்க்கை தான் என்றால் மிகையில்லை."

"இந்தி, கன்னடம், மலையாளம் என்று மூன்று மொழிகளில் நடித்திருக்கிறீர்கள். நடிப்புக்கு மொழி ஒரு தடையா?"

"என் அப்பா, அம்மா பல வருடங்கள் சென்னையில் இருந்திருக்கிறார்கள். என் தாய்மொழி தெலுங்கு. பிறந்து வளர்ந்தது எல்லாம் மும்பையில். இசைக்கு மொழி ஒரு பிரச்னையில்லை என்பது என் கருத்து. நடிப்பு என்பது ஒரு பாடகிக்குக் கிடைக்கிற எக்ஸ்டென்ஷன் என்றுதான் நினைக்கிறேன்."



"மாடலிங், பாட்டு, சினிமா, இதில் எந்த முதல் வாய்ப்பு மறக்க முடியாத ஒன்று?"

"மாடலிங் வாய்ப்புத்தான். நான் போயிருந்தபோது, ஏராளமான இளம் பெண்கள் வந்திருந்தனர். எல்லோரும் புரொபஷனல் போட்டோகிராபர்களைக் கொண்டு, பிரத்யேக லைட்டிங்கில் எடுக்கப்பட்ட அழகான போட்டோக்களை கொண்டு வந்திருந்தனர். என்னைக் கேட்டபோது கல்லூரி அடையாள அட்டையில் ஒட்டுவதற்காக எடுக்கப்பட்டிருந்த சிறிய போட்டோவைத் தான் கொடுத்தேன். நமக்கு எங்கே மாடலிங் வாய்ப்பு கிடைக்கப் போகிறது என்ற எண்ணம்தான் எனக்குள்ளே மேலோங்கியிருந்தது. ஆனாலும், நான் தேர்வு செய்யப்பட்டதில் எனக்கு இனிய ஆச்சர்யம்! இன்றைக்கும் அதை நினைத்துப் பார்த்தால் மனசு குறுகுறுக்கும்."

"சேகர் கபூரின் சமீபத்திய 'எலிசபெத்' படத்துக்கு எதிர்பார்த்த அளவுக்கு ஆஸ்கார் விருதுகள் கிடைக்கவில்லை என்பதில் உங்களுக்கு வருத்தம் உண்டா?"

"இல்லை. ஒரு இந்தியருக்கு, இந்தியாவுக்கு வெளியில் எடுத்த ஒரு படத்துக்கு ஒரு விருதாவது கிடைத்திருக்கிறதே என்று நான் சந்தோஷப்படுகிறேன். இது ஒரு நல்ல துவக்கம் என்றும் நினைக்கிறேன்."

"முந்தைய படமான பாண்டிட் குவீனின் நிஜ கதாநாயகியான பூலான் தேவியை சந்தித்திருக்கிறீர்களா?"

"படத்தில் ரசித்தேனேயொழிய, நேரில் பூலானை சந்தித்ததில்லை."

"உங்கள் கணவரின் படத்தில் நடிக்க வாய்ப்பு வந்தால் நடிப்பீர்களா?"

"அது சாத்தியமே இல்லை. நாங்கள் கணவன், மனைவி என்பதை மறந்து, என்னை நடிகையாக நினைத்துக் கொண்டு, அவரை டைரக்டராகப் பார்க்க என்னால் முடியவில்லை. கொஞ்ச காலம் முன்பு, என் வீடியோ (இசை) ஆல்பம் ஒன்றை இயக்கும் வாய்ப்பு அவருக்கு வந்தது. அப்போது எனக்கு அவர் போட்ட முதல் கண்டிஷனே 'நான் டைரக்டர். நான் சொல்கிறபடி கேட்காவிட்டால், எனக்கு கெட்ட கோபம் வந்து விடும். டைரக்ட் செய்யாமல் செட்டை விட்டு வெளியேறி விடுவேன்!' என்பதுதான். கடைசியில் அதை அவர் டைரக்ட் செய்யவில்லை. எங்களைப் பற்றி எங்களுக்கு நன்றாகத் தெரியும். எனவே, அவர் என்னை நடிக்கச் சொல்ல மாட்டார். அப்படியே சொன்னாலும் நான் அதற்கு ஒப்புக் கொள்ள மாட்டேன்!"

"உங்கள் ஹாபி?"

"சமைப்பது... எனக்கு ரொம்ப பிடிக்கும். விதம் விதமாய்ச் சமைப்பேன். வெஜிடேரியன் ஐட்டங்கள்தான். சீஸ் கேக் பண்ணுவேன். ரொம்ப ருசியாக இருக்கும். அப்புறம் என் நாய் டூட்ஸியுடன் கொஞ்சுவது..."

"அது என்ன பேர் டூட்ஸி?"

"பெயர் சூட்டியது நான் இல்லை. இதற்கு முன்னால் அதை வைத்திருந்தவர் சூட்டின பெயர் அது. எனவே, வேறு பெயர் மாற்றினால் அது சரிப்படாது. நானும் டூட்ஸி என்றே கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன்."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **ஸ்ரீஹரி**




தமிழ் வாசகர்களுக்கு மிகவும் அறிமுகமான சுவாரசியமான கேரக்டர்கள் கணேஷ் – வசந்த். இவர்கள் சின்னத் திரைக்கு வருகிறார்கள். உபயம் : மெட்ராஸ் டாக்கீஸ் டெலிவிஷன். 'கணேஷ் – வசந்த்' என்ற தலைப்பில், சுஜாதா எழுதிய மர்ம நாவல்கள்

**சன் டீ.விக்காக எடுக்கப்படுகின்றன. கணேஷாக நடிப்பவர் (பழைய) நடிகர் சுரேஷ். வசந்தாக விஜய் ஆதிராஜ். இயக்கம்: புதிய இருவர் கூட்டணியான சுஹாசினி – பிரியா. இருவரையும் சந்தித்துப் பேசியபோது...**

"சுஹாசினி! சினிமா, சின்னத்திரை சீரியல் என்று இரண்டையும் இயக்கியவர். இரண்டுக்கும் என்ன வித்தியாசம் காண்கிறீர்கள்?"

"பெரிய அளவில் வித்தியாசம் இருப்பதாக நான் நினைக்கவில்லை. கதை, ஸ்கிரிப்ட், ஆக்டிங், டைரக்ஷன் இவற்றுக்கான உழைப்பு இரண்டிலுமே சமமாகத்தான் இருக்கிறது. இரண்டிலும் ஒரே அளவு ஈடுபாட்டுடன் தான் உழைக்க வேண்டியுள்ளது. சொல்லப் போனால், டெலிவிஷன் தொடர் அதிகமாகவே உழைப்பை எடுத்துக் கொள்ளுகிறது. ஸ்கிரிப்ட் தயாரிப்பது, ஷூட்டிங், அதன் பின்னான வேலைகள் என்று எல்லாவற்றுக்குமாய்க் கணக்குப் போட்டால், ஏழு நாளுக்கு ஒருதரம் ஒளிபரப்புகிற அரை மணி நேர எபிஸோட், ஏழுரை நாள் உழைப்பை விழுங்குகிறது.

"அதேசமயம் சினிமாவில் எடுத்துக் கொள்ளத் தயங்குகிற சில சப்ஜெக்ட்களைக்கூட, தைரியமாய் எடுத்துச் செய்வதற்கு டெலிவிஷனில் முடிகிறது. சினிமா போல ஏ,பி,சி சென்டர் வித்தியாசம் இதில் இல்லை. ஒரு தொடர் அவர்களுக்குப் பிடித்துவிட்டது என்றால், மற்ற வேலைகளை ஒதுக்கி வைத்துவிட்டு, தவறாமல் பார்க்கிறார்கள் என்பது இன்னும் ஒரு அனுகூலம்.

"ஆனால், டெக்னிகலான ஆழம் சினிமாவில்தான் இருக்கிறது. டீ.வி திரையில் நாம் பார்ப்பது இயற்கையான



## "என் தாய்ஸ் லவ் சப்ஜெக்ட்தான்!"

வாய்நிறையச் சிரித்தாலும், கொஞ்சமாய் பேசும் பிரியா பிறந்து, வளர்ந்தது சென்னையில். சினிமாப் பின்னணி ஏதும் கிடையாது. ஆனால் சிறு வயது முதலே நாடகங்களில் ஆர்வம் கொண்டவர்.

மகளிர் கிறிஸ்தவக் கல்லூரியில் படித்த சமயம் சுஹாசினி இயக்கிய 'பெண்' தொடரில் ஒரு காட்சியில் வந்து போயிருக்கிறார். அப்போது ஏற்பட்ட சுஹாசினியுடனான அறிமுகம்தான் அப்புறம் சினிமா மீது ஆர்வம் ஏற்படக் காரணமானது.

பிலிம் இன்ஸ்டிடியூட்டில் சேர்ந்து, டைரக்ஷன் கோர்ஸ் முடித்தார். படிக்கிறபோதே, சுஹாசினி, இந்திரா படம் எடுத்த போது, உதவி இயக்குனரானார்.

இன்ஸ்டிடியூட் படிப்பை முடித்தபின், மணிரத்னத்திடம் அசிஸ்டென்ட் ஆகச் சேர்ந்தார். இருவர், தில்ஸே (உயிரே) இரண்டு படங்களில் பணியாற்றிவிட்டு, இப்போது சுஹாசினியுடன் சேர்ந்து டீ.வி. தொடர் இயக்குகிறார்.

"மணிரத்னத்தின் அஸிஸ்டென்ட் ஆக பணியாற்றிய அனுபவம் எப்படி?"

"ஓ! அத்தனை டெடிகேஷன் கொண்ட இன்னொரு மனிதரைப் பார்க்க முடியாது. அவர் ஒரு பர்பக்ஷனிஸ்ட். சின்னச் சின்ன விஷயங்களில் கூட காம்ப்ரமைஸ் செய்து கொள்ள மாட்டார். சலிக்காத உழைப்பாளி."

"கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன் இதில் எது உங்களுடைய பலம்?"

"திரைக்கதைதான்."

"சினிமா இயக்குனராக வேண்டும் என்பது லட்சியமா? இல்லை டீ.வி. சீரியல்கள் போதும் என்று எண்ணமா?"

"சினிமாவை இயக்குவதுதான் என் லட்சியம். எப்போது என்பது இப்போது தெரியாது. ஆனாலும் எனது முதல் படம் நிச்சயம் லவ் சப்ஜெக்ட்தான்!"

சந்திப்பு : கௌதம்

படம் : யோகா

"உங்க ஆபீஸ் கட்டடம் அரதப் பழசுதானே, வாசல்ல எதுக்கு திருஷ்டி பொம்மை?"

"இந்த ஆபீசுல ரொம்பவும் பண வரவுன்னு பக்கத்து ஆபீசுல பூரா கண் போடுறாங்க!"

— அம்பை தேவா



நடிக்க வைக்கலாம் என்று யோசித்த போது, நான் என்ன எதிர்பார்க்கிறேன் என்று அடுத்தவருக்கு விளக்கி, நடிக்க வைப்பதைவிட நானே நடித்து விடுவது சுலபம் என்று நினைத்துத்தான் நானே நடிக்க முடிவு செய்தேன்."

"தயாரிப்பு, டைரக்ஷன், ஸ்கிரிப்ட், நடிப்பு என்று எல்லாவற்றையும் உங்கள் தலைமேல் போட்டுக் கொண்டால் கஷ்டமாக இருக்குமே!"

"நடிப்பைப் பொறுத்தவரை, நிருபமா சம்பந்தப்பட்ட காட்சிகள் எடுத்து முடிக்கப்பட்டு விட்டன. தயாரிப்பு சம்பந்தப்பட்ட பணிகளை, கவனிக்க ஆட்கள் இருக்கிறார்கள். மேலோட்டமாய் அவ்வப்போது கேட்டுக் கொண்டால் போதும். டைரக்ஷனைப் பொறுத்தவரை இப்போதைக்கு நானும், பிரியாவும் இணைந்து ஒர்க் பண்ணுகிறோம். விரைவிலேயே, பிரியா முழுமையாகத் தாமே தனியாக டைரக்ஷனில் இறங்கி விடுவார். எனவே நானே எல்லா பொறுப்புகளையும் தலையில் போட்டுக்கொண்டு சுமக்கவில்லை."

வண்ணங்கள் இல்லையே! எலக்டிரானிக் புள்ளிகளின் கலவை. எனவே, அது ஒரு மாற்று குறைவுதான் என்பது என் திடமான கருத்து.

"வர்த்தக ரீதியில் பார்த்தாலும் சினிமா என்றால் வெகு சாதாரணமான ஒருவர் எடுத்த படம் விற்கப்படும் ரேட்டுக்கும், ஒரு சூப்பர் ஹிட் டைரக்டரின் படத்தின் ரேட்டுக்கும் மிகப் பெரிய வித்தியாசம் இருக்கும். ஆனால், டீ.வி. தொடர்களைப் பொறுத்தவரை, சாதாரண தொடரானாலும் சரி, பிரபலமானவர் இயக்கும் தொடரானாலும் சரி, பத்து விநாடி விளம்பர ஸ்லாட்டின் ரேட்டில் பெரிய வித்தியாசம் இல்லை!"

"இந்த கணேஷ் – வசந்த் தொடரில் நீங்களும் நடிக்கிறீர்கள் போல இருக்கிறதே?"

"ஆமாம்! இதில் வருகிற நிருபமா பாத்திரத்தில் நான் நடிக்கிறேன். நிருபமா கேரக்டர் ஒரு விதத்தில் பார்த்தால் புத்திசாலி. கணேஷ் வசந்த்துடன் சேர்ந்து துப்பறியும் பணியில் ஈடுபடுகிறாள். இன்னொரு விதத்தில் பார்த்தால் ஒரு வெகுளி. ரொம்ப எமோஷனல் டைப்பும்கூட. ஒரு பெண் செத்துக் கிடக்கும் இடத்துக்கு வருவாள். பிணத்தைப் பார்த்து ரொம்ப உணர்ச்சி வசப்பட்டு, பரிதாபமாக, போலீஸ்காரரிடம் போய், 'பாவம்! இவங்க செத்துட்டாங்களே! எப்படி செத்தாங்க?' என்பாள். போலீஸ் ஸ்டேஷனில், லாக் அப்பில் இருக்கும் பெண்ணிடம் போய், 'நீ ஏதாவது தப்புப் பண்ணினாயா?' என்று அப்பாவித்தனமாய்க் கேட்பாள். அந்தக் கேரக்டர் எப்படி திரையில் வர வேண்டும் என்று நான் ஆழமான கற்பனை செய்து வைத்திருந்தேன். யாரை

"சுஜாதாவின் நாவல்களைத் தேர்ந்தெடுத்தது எப்படி?"

"தனிப்பட்ட முறையில் எனக்கு சிறுகதைகளைத்தான் எடுக்க ஆசை. ஆனால், இன்றைக்குச் சிறுகதைகளைத் தொடர்ந்து ஒளிபரப்பும் சீரியல்களை வியாபார ரீதியில் விளம்பரதாரர்கள் விரும்புவதில்லை. எனவே நாவல்களை எடுக்க முன் வந்தேன். சுஜாதாவின் நாவல்கள், இந்த மீடியத்துக்கு ஏற்றவை. அதுவுமில்லாமல், குடும்ப உறவுகளை மையமாக வைத்து சோகத்தைப் பிழியும் நெடும் தொடர்கள் மலிந்து விட்ட இன்றைய சூழ்நிலையில், கொஞ்சம் புத்திசாலித்தனமான – ஏற்கெனவே அறிமுகமான கணேஷ் – வசந்த்தை, புதிய மீடியத்தில் கொடுத்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்துத்தான் சுஜாதாவின் எழுத்துக்களை படம் பிடிக்க முடிவு செய்தோம்."

"கணேஷ் – வசந்த் பாத்திரங்களுக்கு சுரேஷ் – விஜய் ஆதிராஜ் இருவரையும் தேர்ந்தெடுத்ததன் பின்னணி என்ன?"

"கணேஷ் ரோலுக்கு சுஜாதாவின் சாய்ஸ் மட்டுமில்லை என்னுடைய முதல் சாய்ஸ் கூட, பிரகாஷ் ராஜ்தான். ஆனால், அவர் நடிக்க முடியாத சூழ்நிலை. எனவே, வேறு யார்? என்ற யோசனையில் இருந்தபோது, ஒரு தெலுங்குப் படத்தில் சுரேஷைப் பார்த்தேன். முன்பு தமிழில் பார்த்ததற்கும், இப்போதைக்கும் நல்ல மெச்சூரிட்டி. அவரைக் கேட்டபோது ஒப்புக் கொண்டார். வசந்த், பாத்திரத்தில் விஜய் ஆதிராஜை நடிக்க வைத்ததற்கு முக்கிய காரணம் எதுவுமில்லை. இவரை நடிக்க வைத்தால் என்ன என்று தோன்றியது. நடிக்க வைத்து விட்டோம். அவரும் பொருத்தமாக இருப்பது போலத்தான் எங்களுக்குத் தெரிகிறது."

"புதுமுகங்கள் யாரையும் முயற்சி செய்யவில்லையா?"

"இல்லை. ஒரு எபிஸோடை இரண்டு அல்லது இரண்டரை நாளில் எடுத்து முடிக்க வேண்டிய கட்டாயம். எனவே, அனுபவம் உள்ள சினிமா நடிகர்களையே பயன்படுத்திக் கொண்டால் வேலை சீக்கிரம் முடியும். பல முறை ஒத்திகை, மறுபடியும் மறுபடியும் டேக் என்ற பிரச்னையெல்லாம் இல்லை. முழு திருப்தியுடனும், சீக்கிரமாகவும் ஷூட்டிங் முடிகிறது."

"சுஜாதாவின் கதைகள்தான் அடுத்தடுத்து வரப் போகிறதா?"

"'எதையும் ஒருமுறை' என்ற கதைதான் முதலில் ஒளிபரப்பாகிறது. ஒரு பெண், மர்மமான முறையில் மறைந்து போகிறாள். அவள் உடல் கண்டு பிடிக்கப்படுகிறது. இந்த கிரைம் திரில்லரை அடுத்து, மறுபடியும் கணேஷ், கணவன், மனைவி பிரச்னை, மரணம், துப்புத் துலக்குதல் எல்லாம் வரும். அடுத்தது ஒரு பெண் மர்மமாக மறைந்து போகிற விபரீதம். அடுத்தபடியாக, பிரதானமாக பெண்ணே இல்லாத தொல்பொருள் ஆய்வு + மர்மம். பெயர் ராஜராஜன் கிணறு. இவை எல்லாமே, சுமார் பத்துப் பதினைந்து வருடங்களுக்கு முன்னால் சுஜாதா எழுதியவை. எனவே சுஜாதா ஒரு புதுத் திட்டம் வைத்திருக்கிறார். கணேஷ் - வசந்த் இரண்டு கேரக்டர்களுக்கும் வேலை கொடுக்கும்படியாக உங்களிடம் கதை (அல்லது) ஒரு மர்மமுடிச்சு இருந்தால் சொல்லுங்கள் என்று நேயர்களிடமே கேட்டு வாங்கி, திரைக் கதை அமைத்துத் தருவதாகச் சொல்லியிருக்கிறார். அதைச் செயல்படுத்தும் ஐடியா இருக்கிறது!"

— **எஸ். சந்திரமௌலி**

அட்டை மற்றும் படங்கள்: **யோகா**

## டீ.வி.யில் பார்த்தவை!

● 'ஸ்டார் ஷோ'வில் இயக்குனர் ரவிகுமாரை பெப்ஸி உமா பேட்டி கண்டார். பார்க்க வந்த ரசிகர்களையும் ஒப்புக்கு ஒரு சில கேள்விகளைக் கேட்க அனுமதித்தார் உமா. வெளிப்படையான பதில்கள். திரைப் படத்தின் மூலம் அறிவுரை சொல்வதில் தமக்கு நம்பிக்கை இல்லை என்றார் இயக்குனர். ஆனால் அபிமானக் கதாநாயகன் புகை விடுவதை திரையில் கண்டு ரசித்துப் பின்பற்றும் மடமக்கள் இருப்பதை மறக்கலாமா?



– டாக்டர் **ஜெயவேலன், தலைமை மருத்துவ அதிகாரி, இ.ஐ.டி. மருத்துவமனை, சென்னை**

● அல்டிமேட் மெஷின் என்ற டிஸ்கவரி சானல் நிகழ்ச்சி நவீன ஏவுகணைகள் அணுகுண்டு பற்றியது. இரண்டு கிலோமீட்டர் உயரப் புகை, அதிர்வு மண்டலம், பன்னிரண்டு கிலோ மீட்டர் சுற்றளவில் உள்ள அனைத்தையும் எரிக்கும் நெருப்பு மண்டலம் என்று அழிவுக்குத் துணை போகும் விஞ்ஞானத்தை விவரித்தார்கள். சின்ன ஆறுதல் – இவற்றின் இலக்கு ராணுவத் தளங்களே; அப்பாவி மக்கள் அல்ல என்பது (?)

● தினசரி காலை ஐந்து மணிக்கே எழுந்து சாதகம் செய்வதுதான் தங்கள் புகழுக்குக் காரணம் என்றார்கள் மூத்த நாதசுரக் கலைஞர்கள் சேதுராமனும், பொன்னுசாமியும். காலை அவசரத்திலும் கவனத்தை ஈர்த்த உரையாடல்.

● பி.பி.சி வோர்ல்ட் சானலில் ஒரு பிரபல பத்திரிகையின் விளம்பரம். சச்சின் ஆடுகளத்தில் தயார் நிலையில் இருக்க, அவரை இழுத்துச் சென்று பற்பசை விளம்பரத்தில் நடிக்க வைக்கிறார்கள். பிறகு அவர் ஆட வரும்போதெல்லாம் குளிர் பான, டயர் நிறுவனங்கள் விளம்பரத்திற்கு அழைத்துச் சென்று விடுகின்றன. ஒருவழியாக சச்சின் ஆடத் தொடங்கும்போது அவருக்கு முதுகு பிடித்துக் கொள்கிறது!

— **ஜி.எஸ்.எஸ்.**




# மதுரையில் கண்டெடுத்த ஜெராக்ஸ் காபி!

**கா**லை பத்தரை மணியிலிருந்து இரவு எட்டேமுக்கால் மணி வரை எல்லோரின் சிந்தனையும் ஒன்றாகவே இருந்தது என்றார் பேராசிரியர் தா.கு. சுப்பிரமணியம். வேறென்ன? 'கல்கி' சிந்தனைதான்! 'கல்கி' என்ற வரலாற்று நாயகரை 360 டிகிரி கோணத்திலிருந்தும் பார்த்து, அவரது பன்முகத் தோற்றங்களை விவரித்தார்கள் பேச்சாளர்கள்.

ஸ்ரீமந் நாயகியார் வித்யா மந்திர் மெட்ரிகுலேஷன் பள்ளியினர் மதுரையில் கல்கி நூற்றாண்டு விழாவை நடத்தும் பொறுப்பை எடுத்துக் கொண்டனர். விழாக் குழு அமைத்து (ஆர்.எஸ். சாந்தாராம், ந. மணிமொழியன், பிரான்சிஸ் பாஸ்டின், எஸ். முருகன்) நாள் முழுவதும் நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

விழா நடந்த அரங்கின் பெயர்: ஸ்ரீ நடன கோபால் நாயகி சுவாமிகள் சங்கீத மகால். சுவாமிகள், சௌராஷ்டிர சமூகத்து கிருஷ்ண பக்தர். நாயகி பாவத்துடன் கீர்த்தனைகள் பாடி பெரும் புகழ் பெற்றவர். அவர் பெயர் கொண்ட மண்டபத்தில், இசைப் பிரியரான 'கல்கி'யின் விழா நடந்தது அழகான பொருத்தம்.

• சபாநாயகர் தலைமையில் மாலை நிகழ்ச்சிகள்...

அன்றைய நாளின் முதல் நிகழ்ச்சியாக நடன கோபால் நாயகி சுவாமிகளின் கீர்த்தனைகளில் ஒன்றான "சீதா ராமா; சீதா நேமா" என்ற சௌராஷ்டிர மொழிப் பாடலை கடவுள் வாழ்த்தாகப் பாடினார் பேராசிரியை நிர்மலா தாமோதரன். தொடர்ந்து கல்கி அவர்களின் புதல்வியார் ஆனந்தி ராமச்சந்திரன் குத்து விளக்கேற்ற, நடனகோபால் நாயகி வித்யா மந்திர் தலைவர் டி.கே. ஆத்மாராம் எல்லோரையும் வரவேற்றார். வியர்க்க விறுவிறுக்க வாழ்த்துரை வழங்க வந்தார் மதுரைப் பல்கலைக்கழக துணை வேந்தர் பேராசிரியர் மு. சாலிகு. ஹாலில் மின்சப்ளை இல்லாததால் எல்லோரும் உஸ் புஸ்ஸென்று கையில் கிடைத்த காகிதத்தை விசிறியாக்கி காற்றை வரவழைக்க, சாலிகு

அவர்கள் கொஞ்சம் கூட சலித்துக் கொள்ளாமல், கல்கி அவர்களின் எழுத்துப் பணியைப் பற்றியும் அது சமுதாயத்தில் விளைவித்த விழிப்புணர்வைப் பற்றியும் விரிவாக எடுத்துரைத்தார். "கல்கியின் எழுத்துக் களை ஏதோ பொழுது போக்காக நினைத்து, படித்து, தூக்கிப் போட்டு விடக்கூடாது. அவர் சொல்லி விட்டுப் போனவற்றை வாழ்க்கையிலும் கடைப்பிடிக்க வேண்டும்" என்றார் சாலிகு.

**க**ருத்தரங்கத் தலைப்பு : 'கல்கி ஒரு பாலம்'. தலைவர் : முனைவர் தி. இராசகோபாலன். மைக் இல்லாமல் பேசியது அவரது உற்சாகத்தை எந்த விதத்திலும் குறைத்து விடவில்லை. "எழுத்துத் தவம் செய்தவர் கல்கி. அவரை அமரர் கல்கி என்று குறிப்பிடுவதற்குக் காரணம் அமரத்தன்மை வாய்ந்த எழுத்துக்களை அவர் படைத்தார் என்பதே!" என்றார்.

"தந்தை பெரியார் காங்கிரஸ் தலைவராக இருந்தபோது அவர் பேசிய கூட்டங்களில் எழுச்சியுரை நிகழ்த்தி, கதர்த் துணியையும் ஏராளமாக விற்கும் திறமை கொண்டிருந்த கல்கி அவர்களை வாய் நிறைய பாராட்டியிருக்கிறார் பெரியார். அவரிடம் பாராட்டு பெறுவது என்பது உச்ச நீதி மன்ற சான்றிதழ் பெறுவது போல" என்று சொன்னபோது சிரிப்பலை.



• கருத்தரங்கத்துக்குத் தலைமை வகித்த இராசகோபாலனுக்குப் பாராட்டு

"எதற்கும் எதற்கும் பாலமாக இருந்தார் கல்கி? பழமைக்கும் – புதுமைக்கும், தேச பக்திக்கும் – சமயப் பற்றுக்கும் பாலமாக இருந்தவர் அவர்'' என்று முத்தாய்ப்பாகச் சொல்லிவிட்டு, முதல் பேச்சாளராக முனைவர் பூவண்ணனை அழைத்தார் இராசகோபாலன்.

'வரலாறும் கற்பனையும்' என்ற தலைப்பு அவருக்கு. பூவண்ணன் கல்கியின் எழுத்துக்களைக் கரைத்துக் குடித்து டாக்டர் பட்டம் பெற்றவர் ஆயிற்றே! பழக்க தோஷத்தில் முதலில் மைக் முன்னால் நின்றவர், பவர் கட் நினைவு வர மேடையின் முன் பகுதிக்கு வந்து நின்று பேச வேண்டியதாயிற்று.

"இந்தக் காலத்தில் ஓர் ஊரின் பெயரை மாற்றுவது என்பது எவ்வளவு கடினம் என்பது உங்களுக்குத் தெரியும். சிவகாமியின் சபதம் நாவலில் மகாபலிபுரத்தை மாமல்லபுரம் என்று திருத்தமாக எழுதியதால் எந்த வித சிரமமுமில்லாமல் அவ்வூர் மாமல்லபுரம் ஆகிவிட்டது. இது கல்கி அவர்களின் சாதனை அல்லவா?'' என்று கேட்டார் பூவண்ணன்.

"சமூக நாவல் எழுதுவதை விட வரலாற்று நாவல் எழுதுவது என்பது மிகக் கடினம்'' எனக் குறிப்பிட்ட பூவண்ணன், தங்கத்தில் செம்பு கலந்திருப்பது



• திவ்யா பிரபுவுக்கு பாராட்டு...

• பட்டிமன்றம் தொடங்குகிறது

போல. காப்பியில் டிகாக்ஷன் போல வரலாற்று நாவலில் வரலாறும் கற்பனையும் சரியான விகிதத்தில் கலந்திருக்க வேண்டும். அந்தத் திறமை கல்கி அவர்களுக்கு இருந்தது" என்றும் சொன்னார். வாணர் குலத்தைப் பற்றிய ஒரு பழந்தமிழ்ப் பாடல் எவ்வாறு பொன்னியின் செல்வன் என்ற பிரும்மாண்ட கற்பனைக் காவியத்துக்கு ஆதாரமாக அமைந்தது என்பதையும் அஜந்தா ஓவியங்களின் வண்ணக் கலவை குறித்த வரலாற்று உண்மை எவ்வாறு சிவகாமியின் சபதம் என்கிற அமர காவியத்துக்கு மையவித்தாயிற்று என்பதையும் அவர் சுட்டிக் காட்டியபோது வியப்பு மேலிட்டது. அஜந்தாவுக்குத் தாம் சென்றபோது அங்கிருந்த வழிகாட்டி (guide) அவ்விடம் வருகிற தமிழர்களெல்லாம் சிவகாமி என்ற பெயரையும் கல்கி என்ற பெயரையும் குறிப்பிடுவதாகச் சொன்னார் என்று பூவண்ணன் தமது அனுபவத்தை விவரிக்க கேட்டபோது வியப்போடு சிலிர்ப்பும் ஏற்பட்டது!

அடுத்து 'காலமும் கருத்தும்' என்ற தலைப்பில் பேச வந்தார் முனைவர் வெங்கட்ராமன். வெங்கட்ராமன் அவர்கள் ரொம்பவும் பிரமித்துச் சொன்னது, 60, 70 ஆண்டுகளுக்கு முன்பே பெண்ணியத்துக்கு ஆதரவாக, துணிகரமான கருத்துகளை கல்கி அவர்கள் வெளிப்படுத்தியிருப்பதைப் பற்றித்தான்.

"இவனுடன் என்னால் வாழ முடியாது... வேண்டுமானால் ஜீவனாம்சம் தருகிறேன்" என்று பெண் பாத்திரம் பேசுவது எவ்வளவு முற்போக்கான கருத்து! மதத்தின் பெயரால் பெண்கள் பொட்டுக் கட்டும் இழி நிலைக்கு ஆட்படுவதைக் கண்டு வெகுண்டு "மதமே... உன் பெயரால் எத்தனை எத்தனை கொடுமைகள் இங்கே!" என்று கல்கி கேட்டதை எழுச்சியுடன் எடுத்துச் சொன்னார் வெங்கட்ராமன்.

முனைவர் ராமசாமிக்கு 'மரபும் புதுமையும்' என்ற தலைப்பு. "தேசியத்துக்கும் திராவிடத்துக்கும் பாலமாக இருந்தார் கல்கி என்றார் ராமசாமி. "உலகில் தமிழர்கள் இருக்கும் இடத்திலெல்லாம் வாழ்கின்றார் கல்கி" என்ற அவர், 'வீடு தேடும் படலம்' கதையைக் கொஞ்சம் விஸ்தாரமாகவே சொல்லி அவையில் கலகலப்பூட்டினார். கடைசியாக கல்கியின் நகைச்சுவை குறித்துப் பேச வந்தார் பேராசிரியை புனிதா ஏகாம்பரம். "எனக்கு முன்னால் பேசியவர்கள் என் தலைப்பில் குறுக்கிட்டுப் பேசி கைத்தட்டு வாங்கி விட்டார்கள்.. நான் என்ன பேசுவது?" என்று அப்பாவித்தனமாகக் கேட்டார். ஆனால் கல்கி அவரைக் கைவிட்டு விடவில்லை. சிறையில் சங்கிலியால் பிணைக்கப் பட்டு, கைகளில் காப்புகள் மாட்டப்பட்டு இருக்கும் கல்கியைப் பாட்டி பார்க்க வருகிறார். அந்த இறுக்கமான சூழலையும் கல்கி அவர்கள் எப்படித் தமது நகைச்சுவை உணர்வால் கலகலப்பாக மாற்றுகிறார் என்பதை விளக்கினார் புனிதா. "எனக்கு தங்கச் சங்கிலி, தங்க காப்பு மாட்டலயே என்று வருத்தப்பட்டியே பாட்டி.. இப்போ திருப்திதானே!" என்று பாட்டியிடம் கேட்கிறார் கல்கி. இந்தக் காட்சியை புனிதா விவரித்தபோது நகைச்சுவையையும் மீறி உள்ளே இருக்கும் உருக்கம் பார்வையாளர்களைத் தாக்கியது.

இறுதியாக மீண்டும் பேச வந்தார் முனைவர் இராசகோபாலன். "கல்கி நினைத்திருந்தால் அமைச்சராகக் கூட ஆகியிருக்கலாம். ஆனால் பத்திரிகை ஆசிரியர் என்பது எல்லா பதவிகளையும் விட உயர்ந்த பதவியாக அவர் கருதினார். ஏதாவது ஒரு பல்கலைக் கழகத்தில் அவர் பெயரில் ஓர் "இருக்கை" ஏற்படுத்த வேண்டும்" என்று சொல்லி முடித்து வைத்தார் அவர்.

உணவு இடைவேளையில் வரவேற்புக் குழுவினர் அன்புடன் உபசரித்து அத்தனை பார்வையாளர்களையும் கவனித்துக் கொண்டனர்.

பிற்பகல் நிகழ்ச்சிகளில் முதல் நிகழ்ச்சியாக முனைவர் மோகன் நடுவராக வீற்றிருக்க பட்டி மன்றம்! "முக்கனிகளான மா, பலா, வாழையில் எது சிறப்பானது?" - இப்படி ஒரு கேள்வி கேட்கப்பட்டால் என்ன பதில் சொல்வீர்கள்? அது போலத்தான் பட்டி மன்றத் தலைப்பும். அமரர் கல்கியின் நிலைத்த புகழுக்குக் காரணமாக விளங்குவது அலை ஓசையா? சிவகாமியின் சபதமா? பொன்னியின் செல்வனா? "அலை ஓசையே அவரை அடையாளம் காட்டியது" என்றார்கள் ராஜேந்திர பாபுவும் காந்திமதியும். "மற்ற இரண்டு நாவல்களில் அவர் பல பாத்திரங்களை உருவாக்கினார். ஆனால் அலை ஓசையில் அவரே பாத்திரமாக மாறி விட்டார். ஆம்! சூர்யா பாத்திரம் வேறு யாருமல்ல; கல்கிதான்" என்றார் ராஜேந்திர பாபு. வந்தியத் தேவன், குந்தவை, வானதி, அருள்மொழி வர்மன், நந்தினி, பழுவேட்டரையர் ஆகியோரை அலசி எடுத்தார்கள் நிர்மலா

மோகனும், அரி. ராமநாதனும். "சிவகாமியின் சபதத்துக்கு ஈடு இணையே கிடையாது" என்று வாதிட்டார்கள் சங்கரலிங்கமும் வேல் முருகனும். நடுவர் மோகன் பாடு திண் டாட்டமாகப் போய்விட்டது. "ஜெ.வை வைத்துக் கொண்டு அமைச்சரவை கூட அமைத்து ஆட்சி நடத்தி விடுவேன்! ஐயா இது ரொம்ப கடினமான பணியாக இருக் கிறதே" என்று சொல்லாத குறைதான். பட்டி மன்றத் தலைவராயிற்றே... நழுவ முடியுமா? "பொன்னியின் செல்வனும் அலை ஓசையும் இரு கண்கள் என்றால் சிவகாமியின் சபதம் நெற்றிக் கண்" என்று போட்டாரய்யா ஒரு போடு!

ஒரு சூடான டீக்குப் பிறகு கல்கி இன் னிசை! இசைப் பாடல்களைப் பாடினார் இராமநாதபுரம் வி.என். நாகராஜன். "இத் தனை நாளான பின்னும் ஏழை நெஞ்சே ஏன் துயரம்? எத்தனை நீ அழுதாலும் உத்தமர்தான் வருவாரோ" என்ற காந்தியின் மறைவைப் பற்றிய 'கல்கி'யின் பாடலை நாகராஜன் அவர்கள் பாடியபோது அப்படி யொரு உருக்கம்! நாகராஜன் குழுவினர் ஓம் சக்தி... ஓம்சக்தி என்று ஹாலின் உள்ளே ஓங் கார நாதம் கொடுக்க வெளியே சோவென மழை!

பாடல்களைத் தொடர்ந்து திவ்யா பிரபு, 'கல்கியின் வாழ்வும் வாக்கும்' என்ற தலைப் பில் பேசினார். அடேங்கப்பா! கைகளை அப்படியும் இப்படியும் மேஜிக்காரர் போல் ஆட்டிக் கொண்டு, நயாகராவாக வார்த்தை களைக் கொட்டி எல்லோரையும் ஆச்சர்யப் படுத்தினார் அந்தச் சிறுமி. அடுத்த நூற் றாண்டு ஒரு சிறந்த பெண் பேச்சாளரை எதிர் கொள்ளப் போகிறது!



• கல்கி இன்னிசை : வி.என். நாகராஜன் குழுவினர்

முனைவர் மோகன் வரவேற்புடன் மாலை சிறப்பு நிகழ்ச்சிகள் துவங்கின. மேடையில் நடுநாயகமாக சபாநாயகர் பி.டி.ஆர். பழனிவேல் ராஜன். தமிழக சட்ட சபைக்குக் கிடைக்கும் கண்ணியம் மதுரை நாயகி சுவாமிகள் சங்கீத மகாலுக்கும் கிடைத்து விட்டதோ என்று பெருமைப்படும் விதத்தில் அவரது தலைமை. "தமிழ் என்பது மூன்றெழுத்து. அந்தத் தமிழ் மொழியில் பல அழியாக் காவியங்களை உருவாக்கிய கல்கி மூன்றெழுத்து. அந்த 'கல்கி' விழாவுக்குத் தலைமையேற்க வந்துள்ள பி.டி.ஆர். மூன் றெழுத்து" என்று வரவேற்றார் மூன்றெழுத் துக்காரரான மோகன்.

தலைமை உரையில் பி.டி.ஆர். ஒரு சுவாரஸ்யமான செய்தியைச் சொன்னார். அவரது தந்தை முருக பக்தர். எப் போதும் வேல் ஒன்று வைத்திருப்பாராம். "எனக்கு பழனிவேல் ராஜன் என்று பெயர் வைக்க அதுவும் ஒரு காரணமாக இருந் திருக்கலாம்" என்றார் பேர வைத் தலைவர். தரத்தில் கல்கிக் குத்தான் முதலிடம் என்றார் சபா நாயகர். அமரர் கல்கி வகுத்துத் தந்த பாதையில் இன்னும் கல்கி இதழ் தொடர்வதை அவர் சுட்டிக் காட்டிப் பாராட்டிய போது கூட்டம் உற்சாகமாகக் கர வொலி யெழுப்பியது.

அடுத்துப் பேச வந்த மணி வாசகர் நூலகம் மெய்யப்பன், "700 புத்தகங்களுக்கு மேல் போட்டி ருக்கிறேன். ஆனால் சமீபத்தில் 'கல்கி'யின் புத்தகங்களைப் போட்டேன். அவற்றின் விற்பனை வேகம் என்னை பிரமிக்க வைத்து விட்டது. தமிழர்களின் உள்ளங்களில் கல்கி வாழ்வது பளிச்சென விளங்குகிறது" என்றார்.

இன்றைக்கு எழுத்துலகில் மிகவும் பிஸி யாக இருக்கும் மண்ணின் மைந்தர் இந்திரா சௌந்தர்ராஜன் சபாநாயகரால் அன்று வெளியிடப்பட்ட 'அலை ஓசை', கல்கி கதை கள் (மணிவாசகர் பதிப்பக வெளியீடு) ஆகிய வற்றுக்கு மதிப்புரை ஆற்றிப் பேசினார். "கல்கி கதைகளுக்கு மதிப்புரை கொடுப்ப தென்பது நெல்லைக்கே அல்வா கொடுப்பது போல' என்றார் இ.சௌ. "தங்கமே, வைரமே இன்னும் பளபளப்பாக இரு என்று சொல் வதைப் போன்ற அனர்த்தம் அது" என்றார்.

அடுத்துப் பேசிய தமிழ்ப் பல்கலைக்

கழகத் துணை வேந்தர் கதிர் மகாதேவன் "புதினங்கள் புதுக்கவிதைகள் ஆகியவற்றைப் பாடமாக வைப்பதா?" என்ற பரிகாசம் மாறி, அவற்றுக்கு முக்கியத்துவம் தரும் நிலை இன்று பல்கலைக் கழகங்களில் தோன்றியிருக்கிறது எனில், அதற்கு கல்கி போன்ற இலக்கியத்தரமான எழுத்தாளர் போட்ட அஸ்திவாரமே காரணம் என்று போற்றினார்.

சிறப்புப் பேருரையாளர் பெரியார் தாசனுக்கு முன்பாக ஏற்புரை வழங்கினார், கல்கி நிறுவன பத்திரிகைகள் பதிப்பாளர் கி.ரா. நறுக்கென மூன்று பாயிண்டுகளை மட்டும் சொன்னார்:

– மதுரை எம்.எஸ். சுப்புலட்சுமியின் சொந்த ஊர். ஆண் வேடம் ஏற்று நடிப்பதில்லை என்று தீர்மானமாக இருந்த எம்.எஸ்.




அவர்கள், கணவர் சதாசிவத்தின் வேண்டுகோளுக்கிணங்க சாவித்திரி படத்தில் நாரதர் வேடத்தில் நடிக்க ஒப்புக் கொண்டார். மதுரையின் புதல்வி தந்த அந்த மூலதனத்தில் தான் கல்கி இதழ் தொடங்கப்பட்டது.

– அமரர் கல்கி அவர்கள் மறைவதற்குச் சில மாதங்களுக்கு முன் (1954) திருவி.க மணி மண்டபத்துக்கு அடிக்கல் நாட்ட அழைக்கப்பட்டவர் சபாநாயகரின் தந்தை ஸர். பி.டி. ராஜன்.

– பள்ளி இறுதி வகுப்புக்கு மேல் படிக்காத அமரர் கல்கிக்கு ஏகப்பட்ட முனைவர்கள் ஒன்று கூடி விழா எடுத்தது, ஒரு பல்கலைக் கழகமே விழா எடுத்தது போல் அமைந்து விட்டது.

கல்கி நூற்றாண்டு விழா குழு சார்பில் விழா அமைப்பாளர்களுக்குச் சால்வை போர்த்தி கௌரவித்தார் கி.ரா.

**பெ**ரியார் தாசன் களத்தில் இறங்கினார். "எதற்காக என்னை அழைத்தார்கள்? என்று இந்த நிமிடம் வரை யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று துவங்கி முக்கால் மணி நேரம் கல்கியின் சமுதாய சீர்திருத்த எழுத்துக்களில் மூழ்கி மூழ்கிக் குளித்தார். "கம்பராமாயணத்தில், பாற்கடலை பார்த்து பிரமித்து கரையில் நிற்கும் பூனையைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பூனையைப் போல் நான் நிற்கிறேன். அவரைப் போன்று துணிகரமான கருத்துக்களை 50, 60 ஆண்டுகளுக்கு முன்னால் சொல்வது எவ்வளவு கடினம் என்பது எல்லோருக்கும் தெரியும். சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களைச் சொல்வதில் கல்கி அவர்கள் பெரியாரின் ஜெராக்ஸ் காப்பியாக வாழ்ந்தார் என்று துணிந்து சொல்ல முடியும். அழுக்காறு அவா, வெகுளி, இன்னாச் சொல் என்ற நான்கை விலக்கி அற வாழ்வு வாழ்ந்தார். இப்போதைய எழுத்தாளர்களெல்லாம் தங்களைத் தவிர வேறு இரு எழுத்தாளர்களைத்தான் ஒப்புக் கொள்வார்கள். அந்த இரு எழுத்தாளர்கள் யார் என்று கேட்டால் ஒருவர் இன்னும் பிறக்கவில்லை, மற்றவர் மறைந்து விட்டார் என்பார்கள். ஆனால் கல்கி சக எழுத்தாளர்களை கௌரவப்படுத்தியும், உதவி செய்தும் வாழ்ந்திருக்கிறார். அவரிடம் இரட்டை வேடமே கிடையாது. பௌத்த மதத்தில் சொல்லியுள்ள பஞ்சசீலங்கள் படி வாழ்ந்து காட்டியவர் கல்கி" என்று முடித்தார் பெரியார்தாசன்.

கருத்தோடு கலந்து வந்த நகைச்சுவை மின்னல்களும் நையாண்டி இடிகளும் அந்தப் பேருரையை அழகான ஆவேசப் புயலாகவே மாற்றி விட்டன! நகைச்சுவை மன்னரான கல்கிக்கு, புதிய சமுதாயம் படைக்க வேண்டும் என்ற வேகத்தில் அந்த புனைபெயரை மேற்கொண்ட கிருஷ்ண மூர்த்திக்கு, பெரியார்தாசன் என்கிற சித்தார்த்தன் சூட்டிய புகழாரம் ஒரு பக்கம் இருக்கட்டும்... கல்கி அவர்கள் வளர்த்த மேடைப் பேச்சுக் கலைக்கு பெரியார் தாசனின் உரை ஒரு முத்தாய்ப்பான உதாரணமாகவும் திகழ்ந்தது.

தாமோதரன் நன்றியுரை வழங்க, சங்கம் வளர்த்த மதுரையில், தமிழ் வளர்த்த கல்கியின் விழா நிறைந்தது.

— ப்ரியன்

டேய்! டேய்!
பக்கத்து வீட்டு மேல
கல்லடிக்கக் கூடாது, இந்தா
உண்டி வில்லை வச்சுக்கோ...

போர் விமான
தயாரிப்புக்கு
உதவி

இந்தியா

பிரான்ஸ்

போர் விமான
விற்பனை

1999 ஜூலை 11
பிரமாதி ஆனி 27
மலர் : 57
இதழ் : 50

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

## அபாயகரமான நிரந்தரத் தீர்வு!

**கா**ர்கில் போர் நீண்டுகொண்டே போகிறது. தேர்தலோ நெருங்கி வருகிறது. பாகிஸ்தான் பின்வாங்க வேண்டும் என்ற இந்தியாவின் உறுதியும் அது இயலாது என்ற பாகிஸ்தானின் பிடிவாதமும் நீடிக்கின்றன. இந்நிலையில் எல்லைப் பிரச்னைக்கு 'நிரந்தரத் தீர்வை'த் தாம் விரும்புவதாக பிரதமர் கூறியிருப்பது விவரமறிந்த வட்டாரங்களில் கவலையை ஏற்படுத்தியுள்ளது.

'நிரந்தரத் தீர்வு' என்று பிரதமர் குறிப்பிடுவது கட்டுப்பாட்டுக் கோட்டையே சர்வதேச எல்லையாக மாற்றிவிடும் நடவடிக்கையைத்தான் என்று நம்புவதற்கு இடமிருக்கிறது. ஏனெனில், 'கட்டுப்பாட்டுக் கோட்டைத் தாண்டமாட்டோம்' என்று அறிவித்த கையோடு நிரந்தரத் தீர்வு பற்றியும் பேசியுள்ளார்.

பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு காஷ்மீரில் ஒரு பகுதியை பாகிஸ்தான் ராணுவம் கைப்பற்றியபோது, ஐ.நா சபையின் உதவியை நாடி யுத்தம் தவிர்க்கச் செயல்பட்டார் அப்போதைய பிரதமர் நேரு. அந்த சந்தர்ப்பத்தில் உருவானதுதான் 'பாகிஸ்தான் ஆக்கிரமித்துள்ள காஷ்மீர்' என்று இன்று அழைக்கப்படும் பகுதி. இந்தியாவிடமிருந்து பாகிஸ்தான் முறைகேடாகக் கைப்பற்றிய பகுதியே இவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

பாகிஸ்தான் ஆக்கிரமித்த இந்தப் பகுதியை அந்நாட்டுக்கு நாம் விட்டுக் கொடுத்துவிடவில்லை. அமைதி ஒப்பந்தப்படி இப்பகுதியின் எல்லைக் கோட்டை கட்டுப்பாட்டுக் கோடாக







ஏற்றோம்-அவ்வளவே.

ஐம்பதாண்டுகளுக்கும் மேலாக நீடித்த இந்த ஏற்பாட்டை ரத்து செய்யும் விதமாக யோசிப்பதுகூட அபாயகரமானது.

கட்டுப்பாட்டுக் கோட்டையே சர்வதேச எல்லையாக ஏற்பதன் மூலம், பாகிஸ்தான் ஆக்கிரமித்த காஷ்மீரை நாம் விட்டுக் கொடுப்பவர்களாகிவிடுவோம். அதுவும் என்ன காரணத்துக்காக...? அந்தக் கோட்டையும் தாண்டி நம் நாட்டிற்குள் வந்து பாகிஸ்தான் வாலாட்டியதற்காக!

காஷ்மீரின் ஒரு பகுதியை இவ்வாறு விட்டுக் கொடுத்த பிறகும் பாகிஸ்தான் அமைதி காக்கும் என்பது உறுதியில்லை.

காஷ்மீரின் இதயப் பகுதியை, சுற்றுலா வளங்கள் நிறைந்த இடங்களை பாகிஸ்தான் மேலும் மேலும் ஊடுருவி, கைப்பற்றவே முயற்சி செய்யும்.

பாகிஸ்தான் ஆக்கிரமித்துள்ள காஷ்மீர்ப் பகுதி தற்போது நமக்கு நல்ல பாதுகாப்பு அரணாகவே அமைந்திருக்கிறது. அப் பகுதி பாகிஸ்தானுக்குச் சொந்தமானது அல்ல என்பதால் இந்திய ராணுவம் அங்கு துணிந்து தாக்குதல்கள் நடத்தலாம். வேற்று நாட்டைத் தாக்கியதாக உலகம் குறை கூற இடமின்றிச் செயல்படலாம்.

பாதுகாப்பு ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்த இப்பகுதியை பாகிஸ்தானிடம் விட்டுக் கொடுப்பதென்பது அந்நாட்டிடம் சரணடைவதுமில்லாமல் புதிய ஆக்கிரமிப்புகளுக்கும் அழைப்பு விடுப்பதைப் போலாகும்.

இந்திய அரசு துணிந்து செயல்பட்டு, கட்டுப்பாட்டுக் கோட்டுக்கப்பால் உள்ள பாகிஸ்தானிய ஆயுதக் கிடங்குகளைத் தாக்கி, சப்ளை லைன்களைத் துண்டிக்க வேண்டும். அனைத்துக் கட்சிகளிடமும் எடுத்துச் சொல்லி, இதற்கு ஆதரவு பெற்று வாஜ்பேயி அரசு இயங்கலாம். கார்கில் போரை விரைவில் முடிவுக்குக் கொண்டுவர இதுவே வழி. பாகிஸ்தான் பகிரங்கமாகத் தவறிழைத்து, அதர்மயுத்தம் நடத்திவருவதால் நாம் கட்டுபாட்டுக் கோட்டைக் கடந்து போய் எடுக்கும் தற்காப்பு நடவடிக்கைக்கு சர்வதேச அளவில் எதிர்ப்பு இராது.







# ஜெயலலிதா நிபந்தனை நாடகம்!

பி.ஜே.பி-தி.மு.க. கூட்டணிக் கட்சிகள் நாடாளுமன்றத் தேர்தலில் தொகுதிப் பங்கீடு குறித்து ஆரோக்கியமான பேச்சுவார்த்தைகள் நடத்திவரும் வேளையில், ஜெயலலிதா தமது நிபந்தனை நாடகத்தால் காங்கிரஸைத் திணறடித்துக் கொண்டிருக்கிறார். தேர்தல் கூட்டணிக்கு ஆட்சிக் கூட்டணியை அச்சாரமாகக் கேட்பதுடன் காங்கிரசுக்கு ஐந்தாறு தொகுதிகளே ஒதுக்க முடியும் என்றும் பேரம் பேசுகிறார்.

சோனியாவிடமிருந்து ஜெயலலிதாவுக்கு தூதனுப்பப்படும் தலைவர்கள், அ.தி.மு.க. தலைவியிடம் செமத்தியாக வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியிருக்கிறது. 'டெல்லியிலிருந்து வந்து வந்து போகிறீர்களேயொழிய, நான் சொல்லும் வழிக்கு வரமாட்டேனென்கிறீர்களே!' என அவர்களை ஜெ கடிந்து கொண்டதாகச் சொல்லப்படுகிறது.

இந்த அவமானத்தைத் தாங்கிக் கொண்டு, காங்கிரஸ் தொடர்ந்து அ.தி.மு.க. கூட்டுக்கு முயற்சி செய்வது ஏன் என்பது சோனியாவுக்கே வெளிச்சம்!

அ.தி.மு.கவை மட்டும் விலக்கினால், த.மா.கா. காங்கிரஸுடன் சேர்ந்து அதன் வெற்றிக்கு உயிரைக் கொடுத்துப் பாடுபடத் தயார். சோனியா இந்த நேசக்கரத்தைப் புறக்கணித்து அ.தி.மு.க. உறவை நாடுவதில் பல அபாயங்கள். அவற்றுள் முக்கியமானவை இரண்டு:

- அமைச்சரவையில் இடம் பெற்றே தீருவோம் என்று இப்போதே வாதாடும் 'ஜெ', கூட்டணி ஆட்சிக்கு வரின், தமது பேரிலுள்ள வழக்குகளுக்கு வேக வேகமாக சமாதி கட்ட முயற்சி மேற்கொள்வார்.
- 'ஆதரவு வாபஸ்' என்ற அவரது அணு ஆயுதத்தைக் காட்டி, சதா சர்வ காலமும் பிளாக்மெயில் அரசியல் நடத்துவார்.

இவை இரண்டுமே சமீபத்திய சரித்திரமாக இன்னும் பசுமையாயிருக்கும்போது, காங்கிரஸ் தலைவர்கள் இன்னமும் போயஸ் தோட்டத்துக்கு தூது அனுப்பப்படுவது மிகக் கேவலம்.

**சீன பிரதமர் ஜூ ரோங்ஜியைச் சந்தித்த பிறகும் போதிய ஆதரவு கிடைக்காத பாக் பிரதமர் நவாஸ் ஷரீப், க்ளின்டனைச் சந்தித்து ஆதரவு கேட்கப் போகிறாராம். சாட்சிக்காரன் காலில் விழுவதை விட, சண்டைக்காரன் காலில் விழுவது மேல் என்று கடைசியாக ஷரீஃப் வாஜ்பாயைச் சந்திக்க வந்தால், இருவரும் என்ன பேசிக் கொள்ளுவார்கள்? நம் கற்பனை இதோ :**

# "எதிர்க்கட்சிகளை எல்லைப்போருக்கு அனுப்புங்க!"

## — வாஜ்பாய்க்கு நவாஸ் ஷரீஃபின் ஆலோசனை!

**வாஜ்பாய்** : சலாம் ஆலேகும் நவாஸ் பாய்!

**நவாஸ்** : அசலைகும் சலாம்! உங்களைப் பார்த்தா எனக்குப் பொறாமையா இருக்கு. பார்லிமென்ட் இல்லே. கேள்வி கேட்பார் யாரும் இல்லே. ஆர்மி, ஏர்ஃபோர்ஸ் எல்லாம் நீங்க கிழிச்ச கோட்டைத் தாண்டறது இல்லே. உங்க பாடு பரவால்லே. எதிர்க்கட்சிங்க கூட சப்போர்ட் பண்ணுது உங்களை!

**வாஜ்பாய்** : சப்போர்ட்டா? அது ஆர்மிக்கு. அரசாங்கத்துக்கு இல்லே! நீங்க லாகூர்ல என் கையைக் குலுக்கினீங்களே, அப்பவே உங்க ஆளுங்க கார்கில்ல வந்து உக்காந்துட்டாங்களாமே? இப்படிப் பண்ணலாமா நீங்க?

**நவாஸ்** : ஆமா, உங்க இன்டெலிஜென்ஸ் ஆளுங்க என்ன, கண்ணை மூடிட்டுத்தான் வேலை பார்ப்பாங்களா? எங்க ஆளுங்க பங்கர் தோண்டி, பீரங்கி எல்லாம் கொண்டு வந்து சேர்க்கறது வரை என்ன பண்ணிட்டிருந்தாங்க? ஆனா, உங்க பாதுகாப்பு அமைச்சர் இருக்காரே, அவருக்குத்தான் எம் மேல என்ன அன்பு, என்ன பாசம்! நானும், ஐ.எஸ்.ஐ.யும் அப்பாவின்னுட்டாரே அந்தப் பாவி மனுஷன். பெர்னாண்டசுக்கு என்னோட நன்றியச் சொல்லுங்க.

**வாஜ்பாய்** : நாங்க ஆட்சிக் கவிழ்ப்புப் பிரச்னையிலே மூழ்கி இருந்தோம். எங்க கவர்ன்மெண்டையே கீழே இறக்கிட்டாங்களே! நாங்க கவர்ன்மெண்டப் பார்க்கறதா, கார்கில்லைப் பார்க்கறதா?

**நவாஸ்** : நீங்க எதிர்க்கட்சிங்ககிட்ட ரொம்பவே பயப்படறீங்க. நான் இல்லே? பேநசீர் என்ன கூச்சல் போட்டாலும், என்ன ஸ்டேட்மெண்ட் உட்டாலும் கண்டுக்கறேனா, இல்லியே?

**வாஜ்பாய்** : உங்களுக்காவது ஒரு பேநசீர்தான். எனக்கு இங்க தில்லிலே சோனியா. சென்னைல ஜெயலலிதா. ஆல் பார்ட்டி மீட்டிங்குக்குக் கூப்புட்டா வர இல்லே. கூப்புடாட்டா ஏன் கூப்புடலேன்னு ஒரே கூச்சல்... கார்கில்ல உங்க ஆளுங்க மூணு மாசத்துக்கு முன்னாடி வந்து உக்காந்துகிட்டதுக்கு நான்தான் காரணமாம்!

**நவாஸ்** : கொஞ்சம் உட்டா, நீங்கதான் தீவிரவாதிங்க எல்லாரையும் கார்கிலுக்கு அனுப்பி வைக்கச் சொன்னீங்கன்னு கூடச் சொல்லிடுவாங்க போல! ஒரு ஐடியா சொல்லவா?

**வாஜ்பாய்** : சொல்லுங்க.

**நவாஸ்** : பேசாம உங்க ஆர்மி-ஏர்ஃபோர்ஸ் ஆளுங்களை கார்கில், டிராஸ், பட்டாலிக் பகுதியிலேருந்து விலக்கிக்குங்க.



**வாஜ்பாய் :** நல்லா இருக்கே நீங்க சொல்றது! ஏற்கெனவே திட்டும் குட்டும் வாங்கிட்டிருக்கேன். நீங்க சொல்றதைச் செஞ்சா, நான், எங்க கட்சி எல்லாம் அதோகதிதான்.

**நவாஸ் :** நான் முடிக்கவே இன்னும்...

**வாஜ்பாய் :** பாதியே இவ்வளவு பயமுறுத்தினா, முழுசும் கேட்டா மூச்சே போயிடும். சொல்லித் தொலைங்க.

**நவாஸ் :** பேசாம உங்க எதிர்க்கட்சி ஆளுங்களை மூணாப் பிரிச்சு, கார்கில்ல ஒரு பகுதி, டிராஸ்ல ஒரு பகுதி, பட்டாலிக்ல ஒரு பகுதின்னு நிறுத்தி வச்சுடுங்க. உங்க பார்லிமென்ட்ல இருக்கற மாதிரி நினைச்சுக்கச் சொல்லுங்க. அவங்க பேசற ஆவேசத்துல, ஒருவேளை எங்க தீவிரவாதிங்க, ஆர்மி ஆளுங்க எல்லாம் ஓட்டம் பிடிச்சுடுவாங்க!

**வாஜ்பாய் :** எங்களுக்குத்தான் தலையெழுத்து. பாவம், உங்க ஆளுங்களுக்கு என்ன வந்துது! எங்க நாட்டுல இருக்கற முஸ்லிம் லீக் தலைவருங்க எல்லாம் ஒரு வார்த்தை உங்களைக் கண்டிச்சுப் பேசலே. என்னைத்தான், எங்க கட்சியத்தான் பழிச்சுப் பேசறாங்க. வேணும்னா எலெக்ஷன் டயத்துல பாருங்க. இவங்களும், இவங்க கூடக் கூட்டுச் சேர்ந்திருக்கற கட்சிங்களுமா உங்களை உட்டுடுவாங்க. நான்தான் கார்கில் பிரச்னையையே தேர்தல் ஆதாயத்துக்காக ஆரம்பிச்சேன்னு ஒரேயடியாப் போட்டுடுவாங்க!

**நவாஸ் :** அண்ணாச்சி, எவ்வளவு சந்தோஷமான சமாச்சாரம்!

**வாஜ்பாய் :** ஐயோ, நான் என்ன இதயம் நல்லெண்ணெயைப் பத்தியா சொல்றேன்?

**நவாஸ் :** இல்லேங்க! நான் தப்பிச்சேன். ரெண்டு மாசம் உங்க எலெக்ஷன் பிரசாரம் எல்லாம் நடக்காதா? அதை எல்லாம் அமெரிக்காவும், சீனாவும், ஜி-எட்டு நாடுகளும் கேட்டு, 'ஓகோ, அன்னிக்கு நவாஸ் ஷரீப் சொன்னது கரெக்ட்டுதான் போலிருக்கு'ன்னு சொல்ல ஆரம்பிச்சுடுவாங்க. ஆகா, உங்க எதிர்க்கட்சித் தலைவருங்க, முஸ்லிம் தலைவருங்க எல்லாருக்கும் ரொம்ப நன்றிங்க.

**வாஜ்பாய் :** அது மட்டும் இல்லே. இத்தனையும் பேசி தெனம் தெனம் எல்லா பேப்பர்லயும் வரது போறாதுன்னு, கார்கில் போர் முடியட்டும்; அப்புறம் எப்படி உங்க ஆளுங்க எங்களுக்குத் தெரியாம அங்க வந்து உக்காந்தாங்கன்னு கொடஞ்சு கொடஞ்சு கேக்கப் போறாங்களாம். ஏதோ, எங்களக் கேட்டுத்தான் உங்க தீவிரவாதிங்களும் ஆர்மியும் அங்க வந்த மாதிரி!

**நவாஸ் :** ஆகா, ஆகா. கராச்சி அல்வா

சாப்ட்ட மாதிரி இருக்கு! நீங்க உங்க எதிர்க் கட்சி ஆளுங்க கூடச் சண்டை போட்டுச் சமாளிப்பீங்களா, கார்கில்ல எங்க ஆளுங் களைச் சமாளிப்பீங்களா! ஆகா, பிரமாதம்!

**வாஜ்பாய்** : ஆமா, நீங்க என் கூடச் சமாதானம் பேச வந்திங்களா, இல்லே இதை எல்லாம் கேட்டுச் சந்தோஷப்பட வந்திங் களா?

**நவாஸ்** : அப்பப்ப உங்ககிட்ட டெலி போன்ல கேட்டுக்கிட்டேன். இப்ப, பழைய மந்திரி நியாஸ் நாயக்கிட்ட லெட்டர் கொடுத்து அனுப்பிச்சேன். நீங்க என்ன டான்னா ரொம்ப அடமன்ட்டா இருக் கீங்க. எங்க படைங்க எல்லாம் ரொம்ப அடி வாங்கி, பல இடங்களில் பின்வாங்கறாங்க. தீவிரவாதிங்களும், ஆர்மி ஆளுங்களும் கொத்துக் கொத்தாச் செத்துட்டிருக்காங்க. எப்படியாவது சண்டையை நிறுத்தினீங் கன்னா அவங்களை மெல்லமா திரும்பிடச் சொல்றேன்னு கேட்டுக்கத்தான் நேர்ல வந்தேன். நீங்க சொல்றதைக் கேக்கக் கேக்க எம் மனசே மாறிட்டுது.

**வாஜ்பாய்** : அப்போ?

**நவாஸ்** : நாங்க ஏன் எல்லைக்கோட்டுல இருந்து திரும்பணும்? உங்க படைங்க கார் கில்ல, டிராஸ்ல, பட்டாலிக்ல எல்லாம் சண்டை போடட்டும். நீங்க உங்க எதிர்க் கட்சிக்காரங்க, முஸ்லிம்லீக் ஆளுங்க எல் லார்கிட்டயும் நல்லா வாங்கிக் கட்டிக்குங்க.

**வாஜ்பாய்** : ஏங்க, நீங்க இங்க வர்றதுக்கு முன்னாடி பாருக் அப்துல்லாவப் பார்த் துட்டு வந்திங்களா?

**நவாஸ்** : இல்லியே, ஏன்?

**வாஜ்பாய்** : அவர் வேற, இந்த கார்கில் பிரச்னை முடியட்டும். அப்புறம் சென்ட் டரை ஒரு பிடி பிடிக்கப் போறேன், உண்டு - இல்லைன்னு பண்ணிடப் போறேன்னு சொல்லியிருக்காரே?

**நவாஸ்** : அப்ப, கார்கில் பிரச்னை ஒஞ்சு போச்சுன்னா உங்களுக்குத்தான், பிராப்ளம். இல்லியா? எங்க பர்வேஸ் முஷ்ராஃப் கிட்டே சொல்லி, எப்படியாவது கார்கில்ல தீவிரவாதிங்களை எங்க ஆர்மி சப்போர்ட் செய்யறதைத் தொடர்ந்தா நல்லதுன்னு சொல்லிடறேன். கரெக்டா? பிரச்னை தீர்ந் திட்டா உங்களுக்கு ப்ராப்ளம் அதிகமா யிருக்கும்தானே?

**வாஜ்பாய்** : ஐயோ, எங்க ஜனாதிபதி கிட்ட பேசற மாதிரி எல்லாத்தையும் உளறிக் கொட்டிட்டேன் போலிருக்கு. நீங்க தயவுசெஞ்சு சீக்கிரம் இஸ்லாமாபாத் போய்ச் சேருங்க. இல்லேன்னா இன்னும் என்னென்னவோ உளறிக்கிட்டே இருப் பேன். இந்தக் கதவுகிட்ட அத்வானி, கோவிந்தாசார்யா எல்லாம் நம்ம பேச்சை ஒட்டுக் கேட்கறாங்க. அந்தக் கதவுகிட்ட பிரணாப் முகர்ஜி, மன்மோகன்சிங் எல் லாரும் நிக்கறாங்க.

**நவாஸ்** : அப்போ ஹர்கிஷன் சிங்?

**வாஜ்பாய்** : நல்லவேளை, அவர் உடம்பு சரியில்லேன்னு பெய்ஜிங் போய்ட்டார் ட்ரீட்மென்ட்டுக்கு. அதுதான் கொஞ்சம் ரிலீஃப் எனக்கு! நீங்க போய்ட்டு வாங்க.

கற்பனை : **சாருகேசி**

## காலேஜ் கார்னர் - 1

### புது மாணவர்களோடு அனுபவம் எப்படி?



கிறிஸ்துவக் கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர் ஜார்ஜிடம், "போன வருடம் வந்த புது மாணவர்களுக்கும், இந்த வருடம் வந்திருக்கும் புது மாணவர்களுக்கும் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா?" என்றோம்.

"வருகிற எல்லா மாணவர்களுமே பள்ளியில் மனப்பாடம் பண்ணியதைப் பரீட்சையில் எழுதி பாஸானவர்கள். கல்லூரிக் கல்வி முறை, பள்ளியிலிருந்து வித்தியாசப்படுவது என்பதை அவர்களுக்கு முதலில் உணர்த்துவோம். புது மாணவர்களை நல்லாத் தெரிஞ்சுக்கவே ஒரு வருஷத்துக்கு மேலாகும். அதனால் எனக்கு வித்தியாசம் எதுவும் சொல்ல முடியவில்லை!"

# உங்கள் பின்னால் இந்தத் தேசம்

தேசவிளிம்பில்
விழிப்புப் பிழம்புகளாய்த்
திகழும் வீரர்களே!
உங்களைக்
கோடி கோடி உதடுகளால்
நாடு
முத்தமிடுகிறது.

அரபி, வங்கக் கடல்
அலைகள்
உங்கள் கைகளில்
ஆயுதங்களாக வர
அவசரப் படுகின்றன.

இமயம் தொட்டுக்
குமரி மட்டும்
காற்றின் சொற்கள் உங்களைக்
கர்வத்தோடு
உச்சரிக்கின்றன.

கங்கைக் கரையிலும்
காவேரிக் கரையிலும்
உங்கள்
நாட்டுப் பற்றுக்குப்
பாட்டுப் புனையப்படுகிறது

உங்கள்
தூங்காத இரவுகளை
நட்சத்திரங்களோடு சேர்ந்து
நாங்களும் போற்றுகிறோம்.

அடவிகளில்
ஆஸ்ரமங்களில், தபோவனங்களில்
செய்யப்படும்
எந்த யாகமும்
உங்கள் மறவேள்விக்கு
மாற்றாக முடியாது.

துப்பாக்கிகளை
உயர்த்திப் பிடியுங்கள்
உங்கள்
கரங்களில் எங்கள்
கரங்களும் உயர்கின்றன.

பகையைப் பிளக்கப்
பீரங்கிகளுக்கு நீங்கள்
கட்டளை போடும் விரல்களில்
நாங்களும் இருக்கிறோம்!

உங்கள்
இதயத் துடிப்புகளில்
நாங்களும் சங்கமித்து விடுகிறோம்.

உங்கள்
தாய் தந்தையர் அருகில்
மனைவி மக்கள் அருகில்
வெற்றிச் செய்திகளைப்
பகிர்ந்து கொள்ள அமர்ந்திருக்கிறோம்
நாங்களும்.

உங்கள்
சுவாசத்தால் இந்தத் தேசமே
சுமழ்ந்து கொண்டிருக்கிறது!
உங்கள்
தோள்களால் இந்நாட்டு
மலைகள்
உயர்ந்து கொண்டே போகின்றன.

புயல்பறவைகளே!
உங்கள் சிறகசைப்புகளில்
பகைப்புலம்
விரிசல் கண்டு வீழட்டும்!
திரிபுரம் எரிக்கும் உங்கள்
சிரிப்புகளில்
எதிரிகள் கோட்டைகள்
இடிந்து சரியட்டும்

இடியின் மைந்தர்களே!
உங்கள் பின்னால்
உங்கள் தேசமே இருக்கிறது!

— தமிழன்பன்

●● பா.ஜ.கவுடன் கூட்டணி கண்டதால் தி.மு.க. மீது கோபத்தில் இருக்கும் முஸ்லீம் களின் ஆதரவை மீண்டும் பெற ரகுமான் கான், ஆயிரம் விளக்கு உசேன், துறைமுகம் காஜா ஆகியோரைக் கொண்ட குழுவை அமைத்திருக்கிறார் கலைஞர். இந்த மூவர் குழு ஒவ்வொரு சட்டமன்றத் தொகுதியி லும் முஸ்லீம் பிரமுகர்களின் கூட்டத்தை நடத்தி வருகிறது. இப்படிப்பட்ட ஒரு கூட் டம் சமீபத்தில் அரும்பாக்கம் எம்.எம்.டி.ஏ. காலனியில் உள்ள ஒரு திருமண மண்டபத் தில் நடந்தது. மிகவும் குறைந்த எண் ணிக்கையிலேயே முஸ்லீம் பிரமுகர்கள் திரண்டிருந்தார்கள். 'நான் யார்' என்று கலைஞர் சொல்வது போல அவர் பேச்சுக் களைக் கொண்ட சிறு புத்தகம் எல்லோ ருக்கும் கொடுக்கப்பட்டது. அந்தப் புத்தகத்தில் கலைஞர் முஸ்லிம் மக்களுக் குச் செய்த நன்மைகள் விளக்கமாகக் கொடுக்கப்பட்டிருந்தன. ரகுமான்கான் பேசும் போது, 1967-ல் அண்ணா ராஜாஜி யுடன் கூட்டணி வைத்திருந்ததை எடுத் துரைத்து, அந்தச் சமயத்தில் காயிதே மில் லத், காங்கிரஸை தோற்கடிக்க ஜனசங்கத் துடன் கூட கூட்டணி வைக்கத் தயார் என்று ஜே.எம். சாலிக்கு கொடுத்த பேட்டி யில் சொல்லியுள்ளதை எடுத்துக்காட்டி னார். கூட்டத்தினரிடம் எந்த ரியாக்ஷ னும் இல்லை. "இதுபோன்ற கூட்டங்கள் 'முறையாக' ஏற்பாடு செய்யாததால்தான் ரிசல்ட் மகிழ்ச்சி கொள்ளத்தக்கதாக இல்லை" என்று தொகுதியிலுள்ள கழக உடன்பிறப்புக்கள் சொல்கிறார்கள். சென்னை மாவட்டத்தை முடித்துவிட்டு இந்த மூவர் குழு இப்போது பிற மாவட் டங்களுக்குச் செல்ல இருக்கிறது.

●● த.மா.காவின் இன்னொரு எம்.எல்.ஏ. பற்றிய செய்தி : தென்கோடி பகுதியிலுள்ள வியாபாரப் பிரமுகரான பிறிதொரு த.மா.கா. எம்.எல்.ஏவும் ஊசலாட்டத்தில் இருக்கிறாராம். த.மா.கா – தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்தால் மட்டுமே சில இழப் புக்களை தவிர்க்கலாம் என்கிறார்கள் கட் சிக்காரர்கள். இதற்கிடையில் சஸ்பெண்ட் செய்யப்பட்ட த.மா.கா. எம்.எல்.ஏவை தி.மு.க. மேடைகளில் ஏற்றக் கூடாது' என்று உடன்பிறப்புகள் சொல்கிறார்கள். ஏனென் றால் ஜாதி அரசியலில் விளையாடுவாராம் அவர்.


• குருமூர்த்தி


• ஜனா கிருஷ்ணமூர்த்தி

●● சென்னை யெங்கும் மேம்பாலம் கட்டும் பணியில் இறங்கியிருக்கிறதல் லவா மாநகராட்சி. இது சம்பந்தமாகப் பல்வேறு அபிப்ராயங் கள் இருக்கின்றன. ஆனால் மாற்றுக் கருத்துக்களை மாநக ராட்சி கண்டுகொள்வ தில்லை. இதற்கிடை யில் டவுட்டன் மேம் பால வேலைகள் நின்று போய் விட்டன. இதற்குச் சொல்லப்படும் காரணம், அந்தப் பகுதி நிலத்தடி மண் உறுதியாக இல்லாததால் தூண்கள் அமைக்க முடியாது என்பது தானாம். ஆனால் உண்மை யில் மேம்பாலம் கட்டுவ தால் தங்கள் வியாபாரம் பெருமளவு பாதிக்கப்படும் என்று அந்தப் பகுதி வியா பாரிகள் புலம்பியதால்தான் கட்டுவதை நிறுத்தி விட்டதா கக் கிசுகிசுக்கிறார்கள்!

●● தேர்தலின் போது பத்திரிகையாளர்களிடம் கட்சிக் கருத்துக்களை எப் படி எடுத்துச் சொல்ல வேண்டும்? கார்கில் உட்பட முக்கியமான பிரச்னைகளில் கட்சியின் நிலை; அரசின் நிலை ஆகியவற்றை எப்படி எடுத்து வைக்க வேண்டும் என்று பா.ஜ.க. முக்கியப் பிரமுகர்களுக்கு விளக்கி கூட்டங்கள் நடத்தப்படுகின் றன. ஜனா. கிருஷ்ணமூர்த்தி, குருமூர்த்தி போன்றோர் வழிமுறைகளை விளக்கு கிறார்களாம். தமிழக பா.ஜ.க.வின் செய்தித் தொடர்பாளராக டாக்டர் மைத்ரேயன் நியமிக்கப்பட இருக்கிறார்!

— சஞ்சயன்

**காதில் விழுந்தவை :**



நியாயமே இல்லை. எல்லா மக்களும் ஒற்றுமையா இருக்கணும்.

**செல்வராஜ் (சாலையோர, தின்பண்ட வியாபாரம்):**
காரணம் எதுன்னாலும் சண்டை போடறது தப்புங்க. எவ்ளோ நஷ்டம் நாட்டுக்கு?

**தாகிர் (டூத் பிரஷ் விற்பவர்):**
எப்பவுமே சண்டை போடுறதைவிட சமாதானமாப்

# இந்தச் சண்டை நியாயமே

**"கார்கிலில் என்ன நடக்கிறது? அதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்ற கேள்விக்கு சில சராசரிப் பொதுமக்கள் பதில் கூறுகிறார்கள்.**

**அசோக்குமார் (பிளாஸ்டிக் சாமான் வியாபாரி):**
இந்தியா, பாகிஸ்தான் ரெண்டுக்கும் சண்டை நடக்குதுன்னு சொல்றாங்க. எதுக்காக சண்டைன்னு தெரியலை. எதுவா இருந்தாலும் பாகிஸ்தான் இந்தியாவோட சண்டை போடுறது

போறதுதாங்க நல்லது. அங்கேயும் முஸ்லீம்க இருக்காங்க. இங்கேயும் முஸ்லீம்க இருக்காங்க. வியாபார ரீதியா பாக்கப் போனா இங்கே சினிமா, தொழில் எல்லாத்துலயும் இந்துவும் முஸ்லீமும் ஒற்றுமையாத்தான் இருக்காங்க. பாகிஸ்தான்காரங்க அந்த ஒற்றுமைக்கு வேட்டு வச்சிடுவாங்க போலருக்கு.

**கன்னியப்பன் (சாலையோர பேன்ஸி பொருட்கள் வியாபாரம்) :**
கார்கிலில் இந்தியாவுக்கும்



"அட்டைப் படத்துக்கே ஆறு ரூபாய் சரியாப் போச்சுன்னு அந்த பத்திரிகைக்கு வாசகர் கடிதம் எழுதினது தப்பாப் போச்சு."

"என்னாச்சு?"

"மற்ற பகுதிகளுக்கான தொகையை மணியார்டர் பண்ணவும்னு லெட்டர் போட்டிருக்காங்க."

— ல. ஆனந்தலட்சுமி

பாகிஸ்தானுக்கும் போர் நடக்குது. பாகிஸ்தான்காரங்க அராஜகமா இந்தியாவுல ஆக்கிரமிப்புப் பண்ணியிருக்காங்க. அதுக்கு நம்ப ஆளுங்க தக்க பதிலடி குடுத்துட்டு இருக்காங்க. ஆனா போர் நடக்கற மாதிரியான ஒரு பதற்றம் நம்ம மக்கள் மத்தியில இல்லை. அதுனாலதான் எலெக்ஷனைப் பத்தித் தீவிரமா பேசிட்டு இருக்காங்க.

**கெப்பண்ணன் (எலக்ட்ரீஷியன்):**
கார்கில்ல போர் நடக்குது. நம்ம உளவுப் படைங்க அசால்ட்டா இருந்ததுனாலதான் இவ்வளவு பெரிசாப் போச்சு பிரச்னை.

**பாலு (செருப்புத் தைப்பவர்):**
சண்டைன்னு தெரியும். மேல் விவரம் தெரியாதுங்க.

# இல்லை!"

**ரகு: (சிகையலங்காரக் கலைஞர்):**
இந்தியன் என்ற முறைல சண்டையைக் கண்டிக்கிறேன். நாட்டைப் பாதுகாக்க உயிர்த் தியாகம் பண்ணும் ராணுவ வீரர்களுக்கும் அவங்க குடும்பத்துக்கும் நம்மாலான உதவியைச் செய்ய முன் வரணும். இதுதான் என் வேண்டுகோள்.

**அப்துல் ரஸாத் (சாலையோர துணி வியாபாரம்):**
கார்கில்ல போர் நடக்குதுன்னு தெரியும். எப்படியிருந்தாலும் தீவிரவாதிங்களை சீக்கிரம் விரட்டினா நல்லது.

**பூவதி & பால்ராஜ் (டீக்கடை வியாபாரம்)**
பேப்பர்ல பாத்தோம். பாகிஸ்தானுக்கும், நம்ம நாட்டுக்கும் சண்டை நடக்குது போல. பாகிஸ்தான்காரன் உள்ள வந்துட்டான். வரக்கூடாதுன்னு நாம சண்டை போடுறோம். நியாயம்தானே.

**சண்முகம் (காய்கறி வியாபாரம்):**
பாகிஸ்தான் செய்றது தப்பு. நாம சரியான ஆக்ஷன் எடுத்துட்டு இருக்கோம்!

**குணசேகரன் (கார்பெண்டர்):**
நம்மளுடைய தற்காப்பு நடவடிக்கை சரியில்லாததுனால சண்டை நடக்குது.

**ஸ்டாலின் மணி (ரியல் எஸ்டேட் பிஸினஸ்):**
நாற்காலி போய் விடக் கூடாது என்பதிலேயே கவனமாக இருந்துகொண்டு, இந்த நாட்டின் எல்லையைப் பாதுகாக்க வேண்டிய உளவுத் துறை, இராணுவம் ஆகியவற்றை மேற்பார்வை செய்யக்கூட நேரமில்லாத பிஜேபி அரசால்தான் தீவிரவாதிகளின் அதிகபட்ச ஊடுருவல் நடந்திருக்கிறது. அவர்களை விரட்ட நம் இராணுவ வீரர்களின் உயிரை பலி கொடுக்க வேண்டிய கட்டாய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறோம்.

தொகுப்பு: **பாலு**
படங்கள்: **சண்முகம்**













# பணக்காரன்

## நடிகர் சிவகுமார்

என்னைப் பொறுத்தவரை, எவனொருவன் குறைச்சலாகப் பணம் வைத்திருக்கிறானோ, அவன்தான் சந்தோஷத்தையும், நிம்மதியையும் அனுபவிக்கற பெரிய பணக்காரன். என்னை அந்த வகைப் பணக்காரனாகவே நான் நினைக்கிறேன். இப்படிச் சொன்னால் பலரும் நம்ப மாட்டார்கள். ஆனாலும் இது உண்மை!

எந்த ஒரு நாளிலும், என் வங்கிக் கணக்கு நாலு லட்சம் ரூபாயைத் தாண்டியதில்லை. அதற்காக, நான், கறுப்பில் ரொக்கமாக வைத்திருந்தேனோ என்றால் அதுவும் இல்லை. அது மட்டுமில்லை. சினிமாவில் சம்பாதித்ததை நான் வேறு எங்கேயாவது முதலீடு செய்திருக்கிறேனா என்று கேட்டால், அதற்கும் என் பதில் இல்லை... இல்லை!"

பணம் அவசியம் என்பதை உணர்ந்தவன் நான். நானும் நடிப்பின் மூலம் சம்பாதித்தேன். என்ன ஒரு நல்ல விஷயம்? சம்பாதிக்கிற வருமானத்துக்குள்ளேயே, சிக்கனமாக மிதமான சௌகரியங்களுடன் வாழ நான் பழகிக்கொண்டு விட்டேன். என்னால், ஏ.சி. அறையில், கட்டிலில் படுத்தாலும் நிம்மதியாகத் தூங்க முடியும்; எங்கள் சொந்த ஊருக்குப் போனால், தரையில் கோரைப்பாய் விரித்தாலும் நிம்மதியாகத் தூங்க முடியும்.

நான், வறுமையான குடும்பத்தில் பிறக்கவில்லை. அதே சமயம் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவன். இரண்டுக்கும் பெரிசாய் என்ன வித்தியாசம் என்று நீங்கள் கேட்கலாம். இருக்கிறது. ஒரு மனிதனின் அடிப்படைத் தேவைகளுக்கே கஷ்டப்படுவது வறுமை நிலை. எங்களுக்கு அந்த நிலைமை இல்லை. அதே சமயம், இரண்டு செட் டிராயர், சட்டைதான் இருக்கும். ஒன்று கிழிந்தால், உடனே அடுத்த செட் உடை வாங்கிக் கொடுத்து விடுவார் என் அம்மா! ஆமாம்! அம்மாதான்! அவர்தான் என்னை தாய்க்குத் தாயாக, தந்தைக்குத் தந்தையாக இருந்து வளர்த்து ஆளாக்கியவர்! காரணம், பிறந்த பத்தாவது மாதமே என் அப்பாவை நான் இழந்து விட்டேன்.

நான் படித்த பள்ளிக் கூடம், ஒரு தனியார் பள்ளிக்கூடம். கல்மண்டபம் ஒன்றில், தட்டி கட்டி நடக்கும். முதல் வகுப்பு என்றால் மாதம் ஒரு ரூபாய் பீஸ். இரண்டாம் வகுப்பு என்றால் இரண்டு ரூபாய். இப்படித்தான் கட்டணம். நானும் என் அக்காவும் அந்தப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது, நான் மூன்றாவது வகுப்புக்கு வந்தவுடன், 'ஒரே வீட்ல ரெண்டு பேரை படிக்க வைக்க நமக்கு வசதி ஏது?' என்று சொல்லி, என் அக்காவை பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்தி விட்டார் என் அம்மா.

அடுத்து அருகிலிருந்த ஊரில் ஹைஸ்கூல் படிப்பு, ஆறாம் கிளாசிலிருந்து எட்டாவது வரை ஆண்டுக்கு இரண்டேமுக்கால் ரூபாய் பீஸ். அப்புறம் வருடத்துக்கு ஐந்தேகால் ரூபாய். இதைக் கட்ட சிரமப்படவில்லை. பதினோராம் வகுப்பில் படிக்கிறபோது, முதலில் ஐந்தேகால் ரூபாய் கட்டியாகி விட்டது. அடுத்த சில நாட்களிலேயே, எஸ்.எஸ்.எல்.சி. பொதுத் தேர்வுக்காக இன்னும் ஒரு பதினொன்றரை ரூபாய் கட்டச் சொன்னார்கள். அம்மாவிடம் பணம் கேட்டபோது, 'இதென்னாடா இழவு பரீட்சை?' என்றார். நான் எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சையின் முக்கியத்துவத்தை எடுத்துச் சொன்னவுடன், சரியென்று எடுத்துக் கொடுத்தார்.

அடுத்த வாரம், எஸ்.எஸ்.எல்.சி. மாணவர்களும், பள்ளிக் கூட ஆசிரியர்களும் ஒரு குரூப் போட்டோ எடுத்துக் கொள்ளவும், ஒரு ஸ்வீட், காரம், காப்பி சாப்பிடவும் சேர்த்து, ஆளுக்கு ஐந்து ரூபாய் வசூலித்தார்கள். அம்மாவிடம் கேட்கத் தயக்கம். ஆனாலும், அம்மாவை விட்டால் வேறு கதி? தயங்கித் தயங்கிக் கேட்டபோது, 'என்னை சாவடிக்கிறதுன்னே நீ முடிவு பண்ணிட்டியா?' என்று கேட்டார். இப்படி அம்மா வாயிலிருந்து வார்த்தைகள் வந்த பிறகு, அவர் அந்த ஐந்து ரூபாயைக் கொடுத்தாலும் கூட வாங்கிக் கொள்ள யாருக்கு மனம் வரும். நான் பணம் கொடுக்காமலேயே இருந்து விட்டேன்.

குறிப்பிட்ட நாளன்று மாலை

தான் தெரிந்தது, என்னையும் சேர்த்து, நாலு பேர் ஐந்து ரூபாய் கொடுக்கவில்லை என்று. நாங்கள் நாலு பேருமே, பையை மாட்டிக் கொண்டு பள்ளியிலிருந்து புறப்பட்டு விட்டோம். மற்ற மாணவர்களுக்கு அப்போது தான் விஷயம் தெரியும். அனைவருக்கும் ரொம்ப வருத்தம். 'வகுப்பில் நல்லா படிக்கிற பசங்க நீங்க நாலு பேரும்; நீங்க இல்லாமல், நாங்க போட்டோ எடுத்துக்கக் கூடாது; நீங்க போட்டோவுக்கு மட்டுமாவது இருங்க' என்றார்கள். ஆனால் அதற்கு எங்கள் மனம் ஒப்பவில்லை. துக்கம் தொண்டையை அடைக்க, அங்கிருந்து புறப்பட்டோம். அந்த வருத்தம், இன்னமும் மனதிலிருந்து அகல வில்லை. எஸ்.எஸ்.எல்.சி.யில் முதலிடம் பெறும் மாணவ, மாணவிகளுக்கு வருடம் தோறும் என் வீட்டிலேயே ஒரு சிறு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்து பரிசு வழங்குவது என் பழக்கம். அந்த நிகழ்ச்சியின் போது, இது என் நெஞ்சில் நிழலாடும்.

**ப**ள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, ஓவியக் கல்லூரியில் சேர நான் சென்னைக்கு அடியெடுத்து வைத்தேன். அப்போதும் என் தேவைகளைச் சுருக்கிக் கொண்டு, சிக்கனத்தைக் கடைப் பிடித்தேன். சிக்கனத்தின் வழிமுறைகளை எனக்குக் கற்றுக் கொடுத்தவர் எங்கள் ஊர் ஆசிரியர் குமாரசாமி! அவரது ஆலோசனைப்படி, பகல், இரவு, சாப்பாட்டுக்காக, இருபத்தி எட்டு ரூபாய் கொடுத்து அறுபது சாப்பாட்டு டோக்கன்கள் வாங்கி விடுவேன். காலை உணவுக்கு பாந்தியன் கபே என்ற ஓட்டலில் மாதம் பிறந்தால் பதினைந்து ரூபாய் அட்வான்ஸாகவே கட்டி, சாப்பிடச் சாப்பிட கழித்த ஆள் நான் ஒருவனாகத்தான் இருப்பேன்.

சினிமாவுக்கு என் மாத பட்ஜெட்டே மூணு ரூபாய்தான். எழுபத்தைந்து காசு டிக்கெட்டில் மட்டுமே படம் பார்ப்பேன். பிளாக்கில் டிக்கெட் வாங்குவது, உயர்ந்த வகுப்பு டிக்கெட்டில் படம் பார்ப்பது போன்ற சபலங்களுக்கு இடம் தந்ததே இல்லை. துணிகளை நானே துவைத்து விடுவேன். ஒரு உருப்படியை இஸ்திரி போட பத்து காசு. ஆக இஸ்திரிக்கு பட்ஜெட் அதிக பட்சம் இரண்டு ரூபாய். மற்றபடி கொஞ்சம் தாராளமாகச் செலவழித்தது என்னால் படம் வரைய காகிதம், பென்சில், கலர் செலவுக்குத்தான்.

கொஞ்ச நாளிலேயே அம்மாவிடம் சொல்லி ஒரு சைக்கிளை வாங்கிக் கொண்டேன். எங்கே போனாலும் சைக்கிள்தான். சென்னையிலிருந்து மகாபலிபுரத்துக்கு சைக்கிளிலேயே போய், கிடைத்த இடத்தில் தங்கிக் கொண்டு, சிக்கனமாய் சாப்பிட்டுக் கொண்டு மூன்று நாலு நாட்கள் தங்கி படம் வரைந்திருக்கிறேன். அங்கிருந்து திருக்கழுக்குன்றம். படம் வரைந்த பின் செங்கல்பட்டு வழியே சென்னைக்கு வந்தேன். அதே போல ஏழு நாள் திருப்பதிப் பயணம். கீழ் திருப்பதி, மேல் திருப்

யார்?

பதி என்று ஏகப்பட்ட படங்கள் வரைந்து தள்ளி விட்டுத் திரும்பினேன். சத்திரத்தில் தான் தங்கல். மொத்த செலவே வெறும் முப்பத்தைந்து ரூபாய்தான்!

சினிமாவுக்கு வந்தவுடன் கூட நான் பெரிசாய் சம்பாதித்து விடவில்லை. முதல் படமான காக்கும் கரங்களில் நான் பெற்ற ஊதியம் வெறும் ஆயிரம் ரூபாய்தான்! அடுத்த படமான மோட்டார் சுந்தரம் பிள்ளையில் என்னை ஒப்பந்தம் செய்த போது, என் ஊதியத்தை ஐநூறு ரூபாய் அதிகமாக்கி, ஆயிரத்து ஐநூறு ரூபாய் கொடுத்தார் ஜெமினி வாசன். அந்தக் காலத்தில் ஆயிரம் ரூபாய் பெரிய தொகையில்லையா என்று நீங்கள் கேட்கலாம். ஒவ்வொரு படமும் முடிய ஆறுமாதம் எடுத்துக் கொண்டது. அப்படிப் பார்த்தால் மாசம் இருநூறுக்கும் குறைவுதானே!

கிடைக்கிற வருமானத்துக்குள் வாழப் பழகிக் கொண்டவன் நான் என்பதால், ஊதியத்துக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்ததில்லை. நூறு படங்களுக்கு அப்புறம்தான் நான் லட்ச ரூபாயைப் பார்த்தேன்.

அன்னக்கிளி, ஆட்டுக்கார அலமேலு, பத்ரகாளி என்று வரிசையாய் வெள்ளி விழாப்படங்களைக் கொடுத்தபோது, சின்னப்பா தேவர், 'உனக்கு மார்க்கெட் நல்லா இருக்கு. ரேட்டை அதிகமாக்கு' என்று ஆலோசனை சொன்னபோது கூட அதில் எனக்கு உடன்பாடில்லை என்று மறுத்து விட்டேன்.

நான் மீண்டும் மீண்டும் சொல்ல விரும்பும் விஷயம் இதுதான்: யார் தன் தேவைகளைக் குறைத்துக் கொண்டு, அதற்கேற்ப சம்பாதித்துக் கொள்ளுகிறானோ அவன் தான் பெரிய பணக்காரன்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

---

**காலேஜ் கார்னர் : 2**

## "ராகிங்லாம் இருக்கா?"

*ராம்சிங் (எம்.எஸ்ஸி. ஜியாலஜி, மாநிலக் கல்லூரி) :*

"முந்தி இருந்த அளவுக்கு இப்போ சொல்லுவாங்க. இப்போ அதெல்லாம் இல்ல. காரணம் காலேஜ் எலெக்ஷன். ஆனா, புது ஸ்டூடண்ட்ஸ் அப்ளிகேஷன் வாங்க வர்றப்பவே, அவங்களை அதட்டி மிரட்டி காசு பிடுங்கற கும்பலும் இருக்கு!" என்று இவர் சொன்னாலும் –

சென்னை மருத்துவக் கல்லூரி மாணவர்கள் "இல்லை" என்றார்கள் கோரஸாக. குருபரத் என்கிற மாணவர் மட்டும், "காலேஜ்ல இல்லை. ஆனா, ஹாஸ்டல்ல இருக்கு. பிடிஎஸ் (BDS) ஸ்டூடண்ட்ஸ்தான் எம்.பி.பி.எஸ். ஸ்டூடண்ட்ஸை ராகிங் பண்றாங்க. துணி துவைக்கச் சொல்லுவாங்க, ரிக்கார்டு நோட் எழுதச் சொல்லுவாங்க. சமைக்கச் சொல்லுவாங்க. முடியாதுன்னா அப்பப்போ செல்லமா தட்டுவாங்க" என்றார்.

• சென்னை மருத்துவக் கல்லூரி

இல்லை. முந்தி பீச்சுக்குப் போய் ஒரு பாட்டில்ல தண்ணி எடுத்துட்டு வரச் சொல்லுவாங்க. பீச்ல உட்கார்ந்திருக்கிற ஜோடிகள்கிட்ட பேர் கேட்டுட்டு வரச் சொல்லுவாங்க. ஒரு மரத்தை லவ்வரா நினைச்சு கிஸ் பண்ணச்



• மாநிலக் கல்லூரி

## மருத்துவ சாதனை :



# இடம் மாறிய விரல்கள்!

புரூஸ்லின் ராஜேஷுக்கு வயது 24தான் ஆகிறது. திடகாத்திரமான இளைஞர். நாகர்கோவிலிலிருந்து, சென்னையில் உள்ள டைப்ரைட்டர் இயந்திரம் தயாரிக்கும் கம்பெனியில் வேலை பார்க்க வந்தவர்.

மே - 22 ஆம் தேதி, அவர் வழக்கம் போல் தொழிற்சாலையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது, ஒரு சிறு அஜாக்கிரதை காரணமாக, வலது கைக் கட்டை விரல் துண்டித்துச் சிதறி விழுந்து விட்டது! டைப்ரைட்டரின் ஒரு குறிப்பிட்ட பாகத்தை ஃபிட் பண்ணிக் கொண்டிருக்கையில், பின்னால் ஸ்டோர்ஸ் பொருள்களைத் தள்ளிக் கொண்டு வந்த கை வண்டி, புரூஸ்லின் மீது இடித்து ஆக்ஸிடெண்ட் ஆகியிருக்கிறது.

ஸ்டான்லி மருத்துவ மனையின் பிளாஸ்டிக் சர்ஜரி துறையில் சேர்க்கப்பட்டார் புரூஸ்லின் ராஜேஷ்.

வலது கைக் கட்டை விரல் இல்லாமல் என்ன வேலை செய்ய முடியும்? அதுவும் ஃபாக்டரியில் வேலை பார்க்கும் இளைஞருக்குக் கட்டை விரல் இல்லை என்றால் எப்படி வேலை பார்க்க முடியும்?

பிளாஸ்டிக் சர்ஜரி மற்றும் புனரமைப்பு அறுவைச் சிகிச்சைத் துறையின் தலைவர் டாக்டர் ஜி. பாலகிருஷ்ணன், புரூஸ்லின் ராஜேஷின் நன்மை கருதி ஒரு யோசனை சொன்னார்:

"காலில் உள்ள கட்டை விரலை எடுத்து, வலது கையில் பொருத்திவிட்டால் மூன்றே மாதங்களில் பழையபடி ராஜேஷ் வேலைக்குப் போய்விடலாம்!"

புரூஸ்லின் ராஜேஷின் அப்பா யேசுதாஸ், பையனின் விபத்துச் செய்தி கேட்டவுடனேயே சென்னை வந்தவர், டாக்டரின் யோசனையை ஏற்கவில்லை. அவர் வர்மக்கலை நிபுணர்.

"கால் கட்டை விரலை எடுப்பதாவது? அது உடலில் மிக முக்கிய உறுப்பு. அதை எடுக்கச் சம்மதமில்லை எனக்கு!" என்று ஒரேயடியாக மறுத்துவிட்டார்.

ராஜேஷுக்கு, இடதுகைக் கட்டை விரலை எடுத்து வேண்டுமானால் வலது கைக்குப் பொருத்தட்டும் என்று யோசனை தோன்றிற்று. ஆனால் அதை டாக்டர் அங்கீகரிக்கவில்லை.

டாக்டர் பாலகிருஷ்ணன், கால் கட்டை விரலை எடுத்து, 'மாற்றுப்



"அவரு தீவிரமான காங்கிரஸ்காரர்னு எப்படி கண்டுபுடிச்சே?"

"உங்க வீட்டுல இருக்குற டி.வி. 'சோனி' யான்னு கேட்டேன். உடனே அவரு, "வாழ்க! வாழ்க!"ன்னு கோஷம் போடு றாரே!"

– பாம்பன், ஜெ. சல் மான்ஸ்

பொருத்துதல்' சிகிச்சை செய்வதுதான் சரியாக இருக்கும் என்று எடுத்துச் சொல்லி, இருவரையும் சம்மதிக்க வைத்தார். இப்போது அறுவைச் சிகிச்சை முடிந்து கிட்டத்தட்ட இரண்டு வாரங்கள் ஆகிவிட்டன.

**நா**ம் வார்டு எண் 13ல் இளைஞர் புருஸ்லின் ராஜேஷைச் சந்தித்த போது, அவரது கட்டைவிரல் நன்றாக இயங்கியது. மடிக்கவும் நீட்டவும் இயல்பாக வந்தது. காலில் பாதத்தில் பலத்த கட்டு.

"ரத்த ஓட்டத்தோடு, நரம்போடு இணைந்து சக்தி பெற மூன்று மாதங்கள் ஆகும். ஆனால் கால் கட்டை விரல் எடுத்த இடத்துக்கு சரியாக நாலே வாரங்கள் போதும். அந்த விரல் எடுத்த இடம் காய்ந்து விடும். சற்று சிறியதாக இருக்கும், அவ்வளவுதான். ஷூ போட்டுக் கொண்டு சிரமம் ஏதும் இல்லாமல் நடக்கலாம்!" என்றார் டாக்டர் பாலகிருஷ்ணன்.

கைக் கட்டை விரலை அசைத்து அசைத்துப் பயிற்சிகள் எடுத்துக் கொள்ளுகிறார் ராஜேஷ். மூன்று மாதங்களில் விரலில் உணர்வும் வந்துவிடும் என்றார் டாக்டர்.

"விபத்துக்குள்ளான விரல் சேதமடையாமல் இருந்தால், அப்படியே குழாயில் வரும் சாதாரண நீரால் கழுவி, சுத்தமான பாலிதின் பையில் போட்டுவிட்டு, சுற்றிலும் ஐஸ் வைத்து விட்டு, உடனே மருத்துவமனைக்குக் கொண்டு வந்தால், அந்த விரலையே வைத்துத் தைத்துச் சேர்த்துவிட முடியும். ஆனால் அறுபட்ட விரலின் பாகத்தில் தண்ணீர் பட்டுவிடக் கூடாது. அதே போல் பாலிதின் உறைக்குள் இருக்கும் வெட்டுப்பட்ட விரல் மீது ஐஸ் அல்லது நீர் பட்டுவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். டிஷ்யு அதாவது திசு பாதிக்கப்படக் கூடாது; 'டிரை'யாக – குளிர்ச்சியாக எடுத்துவரப்பட வேண்டும்!" என்று விளக்கினார் டாக்டர் பாலகிருஷ்ணன்.

"ஆனால் கால் கட்டை விரல், கைக் கட்டை விரலைவிட நீளம் குறைவாக இருக்கிறதே டாக்டர்?" என்று கேட்டபோது, "முழங்கையிலிருந்து சிறு எலும்புத் துண்டை எடுத்து, எஞ்சியுள்ள கை கட்டை விரல் எலும்புடன் ஒட்டுப் போட்டு,பிறகு கால் கட்டை விரலை அதனோடு இணைத்துத் தைப்போம்... அப்போது கைக் கட்டை விரலுக்கான நீளம் கிடைத்து விடுகிறது. இதையே குழந்தைக்குச் செய்ய வேண்டி வந்தால், காலில் இரண்டாவது விரலை எடுத்துப் பொருத்துவோம். வளரும்போது சரியாகிவிடும்!"

மொத்த அறுவைச் சிகிச்சை நேரம் ஒன்பது மணி நேரம் ஆகுமாம். "இது ஒரு டீம் ஒர்க். என்னுடன் மூன்று பிளாஸ்டிக் சர்ஜன்கள் ஒத்துழைப்பார்கள்!" என்றார் டாக்டர் பாலகிருஷ்ணன்.

"இதய அறுவைச் சிகிச்சை, சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சை இவற்றுக்கெல்லாம் அரசு, நோயாளிகளுக்கு நிதி உதவுவது போல, இப்படிப்பட்ட அறுவைச் சிகிச்சைக்கும் அரசும், தொழிலதிபர்களும் நிதி உதவ வேண்டும்!" என்று வேண்டுகோள் வைக்கிறார் டாக்டர் பாலகிருஷ்ணன்.

ராஜேஷ், தனியார் மருத்துவமனையில் இதே சிகிச்சையைச் செய்து கொண்டிருந்தால் கிட்டத்தட்ட ஒன்றரை அல்லது இரண்டு லட்ச ரூபாய் செலவாகி இருக்குமாம்!

**— எஸ்.வி.என்.**

* காவல் உதவி மையங்களில் ஒன்று...

# மக்களுக்கு உதவும் திருச்சி போலீஸ்!



* கமிஷனர் திரிபாதி

திருச்சி மாநகரில் முன்பெல்லாம் சில பகுதிகளின் பெயர்களைக் கேட்டாலே போதும். அந்தந்தப் பகுதிகளில் அராஜகம் செய்து வாழ்ந்தவர்களின் பெயர்கள்தான் உடனே நினைவுக்கு வரும்.

அது ஒரு காலம். அதெல்லாம் இப்பொழுது மலையேறிப் போய்விட்டது. மலையேற்றியவர், திருச்சி மாநகர காவல்துறை கமிஷனர் ஜே.கே. திரிபாதி.

ஒரிசா மாநிலம், புவனேஸ்வரத்தில் பிறந்தவர். நம்மிடம் கொஞ்சு தமிழில் அழகாகப் பேசுகிறார்.

"லண்டன் மாநகரத்துக் கனவு இது!" என்கிறார். கனவு கண்முன்னே வசப்பட்டு விட்ட களிப்பு அவரது முகத்தில் சந்தோஷப் பூக்களை பூக்க வைத்துள்ளன.

லண்டன் மாநகரில்தான் காவல் உதவி மையங்கள் மாநகர் முழுவதும் உண்டாம். பொது மக்களுக்கும் காவலர்களுக்கும் இடையே நெருங்கிய நட்புறவு நாள்தோறும் வளர்ந்து கொண்டே இருக்குமாம். எவ்வித பயமுமின்றி சின்னஞ்சிறு குழந்தைகள் கூட காவல் உதவி மையங்களுக்கு உள்ளே சென்று விளையாடிக் கொண்டிருக்குமாம்.

ஆனால் இங்கு? நேர் எதிர்!

பொதுமக்களில் யாரும் எந்தப் பிரச்னைக்காகவும் காவல் நிலையத்துக்குள் தனி ஒரு ஆளாகச் சென்று ஒரு புகார் மனு தந்து விட்டு வெளியே வரும் மனோபாவம், இங்கு சுத்தமாக இல்லை.

ஓர் அரசியல் பிரமுகரையோ அல்லது காவல் நிலைய அனுபவங்களில் கை தேர்ந்தவரையோதான் துணைக்கு அழைத்துக்

கொண்டு போய் வருகிறார்கள்.

இந்த நிலைதான் திருச்சியில் மாற்றப்பட்டிருக்கிறது. மூன்று மாதங்களுக்கு முன்னர் மாநகரம் முழுவதும் உருவாக்கப்பட்ட காவல் உதவி மையங்களின் மூலமாக, பொது மக்கள் – காவலர்களுக்கு இடையே இருக்கும் தொடர்பை முற்றிலும் மாற்றி அமைத்திருக்கிறார் மாநகர காவல்துறை கமிஷனர் திரிபாதி.

நாற்புறமும் கீற்றுத் தடுப்புகளைக் கொண்ட கீற்றுக் கொட்டகை. உள்ளே ஒரு மேசை. காவலர்களுக்கு நாற்காலிகள். புகார் தர வருவோரும் அமர்ந்து பேச இருக்கைகள்.

ஓர் அதி நவீன வலையைப் போல மாநகர் முழுவதும் பின்னிப் பிணைந்து பரந்து விரிந்துள்ளன 54 காவல் உதவி மையங்கள். ஒவ்வொரு மையத்திற்கும் மூன்று அல்லது நான்கு காவலர்கள். இருபத்து நான்கு மணிநேரமும் மையங்களின் எல்லைக்குட்பட்ட பகுதி முழுவதும் சுழற்சி முறையில் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். ஒவ்வொரு காவலர் கையிலும் வயர்லெஸ் கருவி.

மையம் எண் 8 அமைந்துள்ள சுப்பிரமணியபுரம் பகுதியில் இரண்டு ரவுடிகளை காவலர்கள் பொதுமக்கள் துணையுடன் விரட்டிப் பிடித்திருக்கின்றனர். காவலர்களுக்கும், பொதுமக்கள் விஜிலன்ஸ் குழுவைச் சார்ந்தவருக்கும் பரிசு வழங்கிப் பாராட்டி உற்சாகப்படுத்தியுள்ளார் மாநகர காவல்துறை துணை கமிஷனர் இரா. ஆறுமுகம்.

"கமிஷனரின் கடுமையான உத்தரவின் கீழ் எடுக்கப்பட்ட மிகக் கடுமையான நடவடிக்கைகளினால் ரவுடிகளின் அட்டகாசம் முற்றிலும் நசுக்கப்பட்டு விட்டது. மாநகர் முழுவதும் 67 ரவுடிகள் குண்டர்கள் தடுப்புச் சட்டத்தின் மூலமாகச் சிறையில் அடைக்கப்பட்டுள்ளார்கள்!" என்கிறார் துணை கமிஷனர்.

மாநகரில் எங்கு நோக்கினும் வாக்கி - டாக்கியுடன் காவலர்கள் 'வாக்கிங்' போய்க் கொண்டிருக்கிறார்கள். எதுவும் ரகளையா, அடிதடியா? உடனே அங்கே ஆஜராகி விடுகிறார்கள். கட்டுக்குள் இருந்தால் அவர்களே பார்த்துக் கொள்கிறார்கள். எல்லை மீறிப் போகுமென நினைத்தால் வயர்லெஸ் மூலமாக கண்ட்ரோல் ரூம். அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் மொபைல் வேன்கள் சம்பவ இடத்தை முற்றுகை இட்டு விடுகின்றன.

"இப்படிப்பட்ட அமைப்பு முறையிலான காவல் உதவி மையங்கள் தமிழ்நாட்டில் திருச்சியைத் தவிர வேறு எந்த நகரிலும் கிடையாது; ஏன் இந்தியாவில் வேறு எந்த மாநிலத்திலும் கூட காவல் உதவி மையங்கள் கிடையாது!" என்கிறார் மாநகர காவல்துறை துணை ஆணையர் இரா. ஆறுமுகம். இந்த சீரிய திட்டம் கமிஷனர் திரிபாதியின் சிந்தனையில் உதித்தது என்கிறார் அவர்.

அங்கொருவர் இங்கொருவர் என்றாலும் காவலர்கள் கண்ணில் பட்டுக் கொண்டே இருப்பதால், சமூக விரோதிகளால் நிகழ்த்தப்படும் சின்னச் சின்ன குற்றங்கள் கூட குறைந்து விட்டதாகக் கூறுகிறார் வர்த்தகப் பிரமுகர் ஒருவர்.

இப்பொழுதுதான் நிம்மதியா 'ஏவாரம்' செய்ய முடியுது என்கிறார் தள்ளுவண்டியில் வாழைப்பழ வியாபாரம் செய்யும் ஒருவர்.

**மை**யம் எண் 51. ஆழ்வார்த்தோப்பு பகுதி. இஸ்லாமியர்கள் நிறைந்துள்ள இடம். கவனமாய் இருந்து கொள்ள வேண்டிய இடம் என்று மற்றவர்களால் கணிக்கப்படுகின்ற ஏரியா. இஸ்லாமியப் பொதுமக்கள் தங்களுடன் முழு ஒத்துழைப்பு நல்குவதாக நம்மிடம் கூறுகிறார் காவலர். இரவு நேர ரோந்தின்போது காவலர்களுடன் துணைக்குப் போவதற்கென அறுபது பேர் முன் வந்து ஒவ்வொரு கிழமைக்கும் யார் யார் எந்தெந்தப் பகுதியென விவரம் எழுதி ஒட்டப்பட்ட அட்டை ஒன்று நம் கண்ணில் படுகிறது.

அந்தந்த வீதிகளில் நடைபெறும் சண்டை சச்சரவுகளை மட்டும் தீர்த்து வைப்பதோடு



"நான் எழுதுனதில் கதை ரொம்ப நல்லா வந்திருக்கு..."

"எப்படி சொல்றே?"

"படிச்சுப் பார்த்தா எனக்கே பயமா இருக்கே!"

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

நின்று விடுவதில்லை.

சாக்கடை நீர் அடைத்துக் கொண்டு வீதியை வெள்ளக்காடாக்கிவிடும் விபரீதமா? காவலர்களே சென்று துப்புரவுத் தொழிலாளர்களை அழைத்து வந்து சுத்தம் செய்து விடுகிறார்கள். தெருவில் எந்தச் சந்திலாவது மின் விளக்கு எரியவில்லையா? காவலர்கள் கண்ட்ரோல் ரூமுக்கு செய்தி சொல்ல கண்ட்ரோல் ரூமிலிருந்து அந்தப் பகுதிக்குரிய மின் சார அலுவலகத்திற்கு புகாராக பறந்து போகிறது. மின்சார அலுவலகத்தினர் குறிப்பிட்ட இடத்திற்கு வந்து சீர் செய்துவிட்டுப் போகின்றனர்.

தெருமுனையில் நடைபெறும், குடிநீர்க் குழாய்ச் சண்டை முதல் 'குடி' மகன்களின் திடீர் 'அலம்பல்', 'சலம்பல்' வரைக்கும் அடியோடு காணாமல் போய்விட்டது இப்போது.

மரக்கடைப் பகுதியில் திடீரென தீ விபத்து. விலையுயர்ந்த தேக்கு மரங்கள் உள்பட பல வகைப்பட்ட மரங்கள். வேக வேகமாய்ப் பரவியது தீ. வயர்லெஸ்ஸில் காவலர்கள் தீயைவிட வேகமாய்த் தகவலைப் பரப்ப, அதிவேகத்தில் வந்து சேர்ந்தன தீயணைப்புத் துறை வண்டிகளும், மாநகராட்சி குடிநீர் வண்டிகளும். உரிய நேரத்தில் வந்து அணைக்கப்பட்டு விட்டது தீ. காவலர்களின் உடனடி சேவையால் பல கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள மரங்களும், அருகிலிருந்த கடைகளும், வீடுகளும் காப்பாற்றப்பட்டன.

'**வா**மடம்' என்றாலே அய்யோ... அந்த ஏரியாவா என்பார்கள் விவரம் தெரிந்த எல்லோரும். அந்த அளவுக்கு வன்முறையே வாழ்க்கையாய்க் கொண்டவர்கள் வசித்த பகுதி.

மையம் எண் 52. வாமடம் காவல் உதவி மையத்தில் பணிபுரியும் தலைமைக் காவலர் ரஞ்சன், அந்தப் பகுதியில் வசிக்கும் ரவுடிகளின் மனசுக்குள் புகுந்து மகுடி வாசித்திருக்கிறார்.

எதற்கெடுத்தாலும் கத்தியையும், வீச்சரிவாளையும் தூக்கித் திரிந்த கைகளுக்கு கட்டிங் பிளேயரையும், சம்மட்டியையும் கொடுத்து 'சென்ட்ரிங்' கம்பி கட்டும் வேலைக்கு அனுப்பி வைத்திருக்கிறார் அவர்.

நாம் அமர்ந்திருக்கும் போதே 'அந்த' இரண்டு இளைஞர்கள் ரஞ்சனிடம் வந்து, 'ஒரு நல்ல தந்தையிடம்' சொல்லிவிட்டு வேலைக்குப் போவது போல் சொல்லிச் சென்றார்கள்.

தெருவில் நாலைந்து பெண்கள் நடந்து போகிறார்கள். அதில் ஒரு பெண். அவள் போவது கூலி வேலைக்கு. அவள் கணவன் ஓட்டுவது ரிக்ஷா. நின்ற இடத்திலிருந்தே புகார் சொல்கிறாள் அந்தப் பெண். வாய்மொழி வார்த்தைகளை புகாராக மூளைக்குள் மட்டுமல்ல மனசுக்குள்ளும் பதிவு செய்து கொள்கிறார் ரஞ்சன்.

"நாலு நாளா நல்லா குடிச்சிட்டு வருதுங்க சார்... காசு பணம் சுத்தமா தர்றதில்ல சார்... சார் வந்து அதட்டி வெச்சிங்கன்னா..."

"நீ வேலைக்கிப் போய்ட்டு வாம்மா. சாயந்தரம் உன்னோட வூட்டுக்காரரப் பாத்து பேசிக்கிறேன்."

சாதாரண மக்களின் தினசரி வாழ்வில் ஏற்படும் சின்னச் சின்ன பிரச்னைகளில் கூட காவல் உதவி மையங்கள் மனித நேயத்தோடு உள் நுழைந்து தீர்வு காண்பது வியத்தகு சாதனைதான். திருச்சியைப் பின்பற்றி மற்ற நகரங்களிலும் ஏன் இது போன்ற காவல் மையங்கள் தொடங்கப்படக் கூடாது?

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

காலேஜ் கார்னர் : 3

## "லைப்ரரிக்குப் போகிற பழக்கம் உண்டா?"

***சரவணன் (பி.காம் இறுதியாண்டு, நந்தனம் கலைக் கல்லூரி) :***



பேப்பர் படிக்கப் போவேன். எங்க காலேஜ் லைப்ரரில பொறுப்பா பதில் சொல்லவே மாட்டாங்க. எந்த புக்கைக் கேட்டாலும், 'இல்லை'ன்னு சொல்றாங்க. தேவையான புத்தகம் கிடைக்கவே கிடைக்காது. இத்தனைக்கும் லைப்ரரிக்கு பசங்க வர்றது ரொம்ப கம்மி. லைப்ரரி போறவங்களை ரொம்பவும் வெறுப்பேத்துவாங்க பசங்க. 'என்னா மச்சி' அறிவாளியாய்ட்டியா'ம் பானுங்க. பேப்பர் படிக்க வந்துட்டு, பேப்பரை ஜ'ஸ்ட் விட்டுட்டுப் போற பசங்களும் இருக்காங்க.

ஸ்ரீவைஷ்ணவம்

கேட்பதை அப்படியே உள்ளேயிருத்திக் கொண்டுவிடு என்று பிருஹதாரண்யக உபநிஷத் சொல்கிறதல்லவா? இந்தக் காதால் கேட்டு அந்தக் காதால் விடுவதை அன்றைக்கே கம்பராமாயணத்திலே உதாரணமாகச் சொல்லியிருக்கிறது:

தாடகையினுடைய மார்பிலே துளைத்த ராமபாணமானது 'புல்லோர்க்கு நல்லோர் சொல்லெனப் போயிற்று அன்றே' என கம்பர் வர்ணிக்கிறார்.

ஒரு துஷ்டன், அவிவேகி, ஞானமில்லாதவன்- அவனுக்கு ஒரு உபதேசம் பண்ணினால் இந்தக் காதால் வாங்கி அந்தக் காதால் விட்டுவிடுவான்.

இப்படியில்லாமல் இரண்டு காதுகளாலும் வாங்கி உள்ளத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். அதுதான் சிரவண பக்தி.

குலசேகர ஆழ்வார் சொல்கிறபோது, 'ஹே, நாக்கே! அந்த பகவானுடைய நாமத்தை நன்றாகச் சொல்லேன். நா தழும்பச் சொல்லேன்' என்கிறார்.

பகவானை எழுந்தருளப் பண்ணப்பட்டவர்களின் தோளிலே பார்த்தோமானால் அந்தத் தண்டை வைத்து வைத்து வடு ஏற்பட்டிருக்கும். பகவானைத் தூக்கியதாலே ஏற்பட்ட தழும்பு!

நாக்கிலே நமக்கு ஏன் தழும்பு வரவேண்டும் என்று கேட்டால், அல்வா சாப்பிட்டதனால் அல்ல, பதார்த்தங்களைச் சாப்பிட்டதால் அல்ல... நாராயணா, நாராயணா என்று சொன்னதால் ஏற்பட்ட தழும்பு!

சாஸ்திரம் சொல்கிறது- 'நாராயணா என்றொரு சப்தம் இருக்கிறது. வாக்கும் நம் வயத்திலே இருக்கிறது. எல்லோரும் ஏன் நரகத்தில் போய் விழுகிறார்கள்?' என்று ஒரு கேள்வி எழுகிறது.

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

நாராயணா என்ற சப்தத்தை உபயோகித்தால்தானே! 'கீர்த்தய' என்று அதைச் சொல்லிக் கொண்டேயிருந்தால்தானே!

ஆகையினால், ஒரு உபன்யாஸம் நடக்கிறபோது சிரவண யக்ஞம், கீர்த்தன யக்ஞம் என்று இரண்டு யக்ஞங்கள் நடக்கின்றன. இதையும் நாம் யக்ஞமாகத்தான் பாவிக்க வேண்டும்.

நமக்குப் புஷ்டியைக் கொடுக்கிறான் பரமாத்மா. வந்து உட்கார்ந்து சொல்ல வேண்டும், கேட்க வேண்டும் என்றால் உடம்பிலே புஷ்டி வேண்டுமல்லவா?

அதேபோல் துஷ்டியும் இருக்க வேண்டும்.

துஷ்டியென்றால் மனத்திலே இருக்கிற புஷ்டி. உடம்பு நன்றாயிருக்கும். ஆனால் மனத்திலே ஏகமாக வியாகூலம்- கஷ்டம் இருக்கும். அப்படியிருக்கக் கூடாது. மனம் துஷ்டியாக இருக்க வேண்டும். உடல் புஷ்டியாக இருக்க வேண்டும். எதற்கு....?

பகவத் குணத்தை அனுபவிப்பதற்கு; தர்மத்தை நாம் செய்வதற்கு உடலும் மனமும் புஷ்டியாகவும் துஷ்டியாகவும் இருக்க வேண்டும்.

கெட்ட காரியங்கள் செய்வதானால் புஷ்டியே வேண்டியதில்லை. ஆனால் நல்லகாரியங்கள் செய்ய நல்ல கண் பார்வை வேண்டும். இந்த்ரிய பலமெல்லாம் நல்லதற்காக முனைய வேண்டும்.

-இப்படிப் பிரார்த்திப்பதற்கே ஒரு மந்திரம். அந்த மந்திரத்தைக் குறிப்பாக சாயங்கால வேளைகளில் சொல்ல வேண்டும்.

சஹஸ்ரநாமத்தைக்கூட சாயங்கால வேளையிலே சொல்ல வேண்டும் என்று ஆசாரம். பிராதஹ் காலத்திலும் சொல்லலாம், மத்தியானத்திலும் சொல்லலாம். ஆனால் சாயங்காலம்தான் விசேஷம். ஏனென்றால் சாயங்கால வேளைதான் மனிதனைக் கெடுக்கக் கூடிய வேளை.

24

சந்தியா காலத்தை நாம் ரொம்ப ஜாக்கிரதையாக உபயோகப்படுத்த வேண்டும். கொஞ்சம் கோணல் வழியில் திருப்பி விட்டோமானால் அதல பாதாளத்தில் கொண்டு போய்த் தள்ளிவிடும். அப்படிப் போகாமலிருக்க வேறு இடத்தில் மனத்தை வைக்காமலிருக்க, சஹஸ்ரநாமத்தை சாயங்கால வேளையிலே சொல்வது நல்லது. அப்போது ஓர் அரை மணி நேரம் உட்கார்ந்திருக்க வேண்டுமில்லையா? ஆகையினால் அந்த நேரத்தில் மனம் வேறான வழிக்குப் போகாது.

நாலு பசுக்கள் மேயப் போகின்றன. ஒரு பசு மட்டும் திருட்டுப் பசு. அது புல்லையே மேயாது; பயிரைத்தான் மேயும்! போய்க் கொண்டேயிருக்கிற பசு, வயலில் இறங்கி கதிர் விட்டிருக்கிற பயிர்களையெல்லாம் மேயும்! அந்த விவசாயி அதைப் போட்டு அடிப்பான். அந்த உதையைப் பட்டுக் கொண்டு மறுபடியும் வரும் அது!

அந்தப் பசுவை உடையவனுக்கு ரொம்ப வருத்தம். 'இப்படி நித்யம் அடிபடுகிறதே. என்ன பண்ணுவது?' என்று பார்த்தான். அதன் கழுத்திலே ஒரு கயிற்



றைக் கட்டி, அதில் ஒரு கட்டையைக் கட்டித் தொங்கவிட்டான். பெரிய மரக் கட்டை!

கட்டையைக் கட்டிவிட்டவுடனே, அந்தப் பசு வேகமாகப் போனபோதெல்லாம் இந்த முட்டிக்கும் அந்த முட்டிக்கும் இடித்தது. ஒரேயடியாக வலி! அதிலிருந்து அந்தப் பசு பயிரை மேயாமல் மற்ற பசுக்களோடயே இருந்தது.

சாயங்காலம் என்கிற பொழுது நம்மை வேறான பாதையிலே இழுத்துச் செல்லாமலிருக்க சஹஸ்ரநாமம் என்கிற தடி கட்டப் பட்டிருக்கிறது! அது இல்லாவிட்டால் நாம் வேறு விஷயத்தில் ஈடுபடுவோமில்லையா?

இந்த்ரியங்களாகிற திருட்டுப் பசு கோணல் வழியிலே போகாமலிருக்க எல்லோரும் ஒரே விஷயத்தை நினைக்கும்படி செய்ய ஏற்பட்டதுதான் இந்த சஹஸ்ர நாமம்.

அந்த மாதிரி பகவான் நாமாவைச் சொல்லி, சாயங்கால வேளையிலே நம் மனது பல திசைகளில் சிதறி ஓடாமல் ஒரு முகப்படுத்தி, அவன் திருவடியிலே செலுத்தி விட்டோமானால், அந்த சாயங்கால வேளையை நாம் ஜெயித்து விடலாம். எல்லா காலத்தையும் ஜெயித்துவிடலாம். அதனால்தான் சாயங்காலத்தில் தனியாக உட்கார்ந்து சஹஸ்ரநாமத்தைச் சொல் என்றது; இல்லையானால் பல மகான்களை வைத்துக் கொண்டு பாராயணம் பண்ணு என்றது; அதுவும் இல்லையானால் ஒவ்வொரு கிருஹத்தில் ஒவ்வொரு நாள் பாராயணம் பண்ணு என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

பல இடங்களில் பல நகரங்களில் இப்படி நடக்கிறது.

ஆகையினால் சஹஸ்ரநாமம் சகல க்ஷேமத்தையும் உண்டு பண்ணக் கூடியது; புத்துயிர் ஊட்டுவது. மரணப் படுக்கையிலே இருப்பவரை பிராண வியோகத்திலிருந்து மீட்கக் கூடியது. அப்படியே அவருக்குப் பிராண வியோகம் விதிக்கப்பட்டிருந்த தானால், அதைக் கேட்டுக் கொண்டே உயிர்நீப்பவர் பரமபதத்தை அடையச் செய்யக் கூடியது.

ஆகையினால் எம்பெருமானின் திருநாமம் ஒவ்வொன்றும் உயர்ந்ததாகிறது.

சமித்தைக் கொண்டு அக்னியிலே ஹோமம் பண்ணுகிறோம். சமித்தைச் சேர்த்ததும் அக்னி பிரஜ்வலிக்கிறது. நன்றாக எரிகிறது. சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. அந்த

## அருள்வாக்கு

நாம் நம் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்
மாதிரி சர்வ விதங்களிலேயும்-யக்ஞம் பண்ணுகிற எஜமானன், லோகத்திலே இருப்பவர்கள் என்று அனைவரும்-சர்வ விதங்களிலேயும் பிரகாசிக்க வேண்டும். நன்கு ஜொலிக்க வேண்டும் என்று பிரார்த்தனை இங்கே.

அதனால் அக்னியைச் சொல்லக் கூடிய மந்திரங்களை நாம் உச்சரித்தோமானால் அக்னி பிரத்யக்ஷமாக எதிரிலே தோன்றுவான். இன்னும் நன்கு உபாஸனை பண்ணினோமானால் அக்னிக்கு அந்தர்யாமியான பரமாத்மாவை, விஷ்ணுவை நேரிலே பார்க்கலாம்.

நரசிம்ஹ புராணத்திலே சொல்லப்பட்டிருக்கிறது – விஷ்ணு எங்கும் நிறைந்திருப்பவன் என்று. எல்லா பதார்த்தங்களிலும் நிறைந்திருப்பவன் அவன் என்பதைக் காட்டிக் கொடுக்கும் மந்திரம் வருகிறது.

மந்திரம் என்ற சொல்லுக்கே என்ன பொருள் என்றால், யார் அதை நன்கு உச்சரிக்கிறார்களோ, பிழையில்லாமல் சொல்கிறார்களோ அவனை ரக்ஷிப்பதனாலே அதற்கு மந்திரம் என்று பெயர்.

அதனால்தான் ஆசார்யர்கள் இன்னொரு இடத்தில் சொல்கிறபோது, ஒரு மந்திரம் நமக்குச் சித்திக்க வேண்டுமானால் மூன்று இடத்திலே பக்தி வேண்டும் என்றார்கள்:

மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே வருகிறபோது அந்த மந்திரத்தினிடத்தில் நமக்கு ரொம்ப பக்தி வேண்டும். 'ஓம் விஷ்ணவே நம:' என்று சொல்லும்போது அதிலே ஏகப்பட்ட உயர்ந்த பாவம் நமக்கு இருக்க வேண்டும்.

ஆகையினாலே கண்டவாறு மந்திரத்தை உச்சரிக்கக் கூடாது. கொட்டாவி விட்டுக் கொண்டே உச்சரிக்கக் கூடாது. ஹீனமாக உச்சரிக்கக் கூடாது. பஹுமானமாக, ரொம்ப பக்தி சிரத்தையுடன் சொல்ல வேண்டும்.

ஒருத்தர் சொல்கிறார்– 'இந்த மந்திரம் ரொம்ப உயர்ந்தது' இந்த மந்திர உபதேசம் பெற்றுக் கொண்டு நித்யம் ஜபம் பண்ணினால் ரொம்ப நல்லது' என்கிறார்.'அதனால்

துக் கொண்டு ஒரு வீட்டைக் கட்டுகிறோம். குருவி தன் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு கூட்டைக் கட்டுகிறது. இந்த உலகத்தை எல்லாம் நிர்மாணிக்கிற புத்தியும், சக்தியும் கொண்ட ஒன்று இருக்கிறதல்லவா? அதுதான் ஸ்வாமி.

ஒன்றிலிருந்து ஒன்றாகச் சக்தி அதிகமாகிக் கொண்டே போகிற இயற்கையிலிருந்து இப்படி ஈசுவர தத்துவத்துக்குப் போகிறோம்.

ஒன்றுக்கு ஒன்று மாறாக, Pair of opposites என்கிற எதிரெதிர்ச் சக்தி ஜோடிகளையும் நாம் இயற்கையில் பார்க்கிறோம். கடும் பனிக்காலம் என்று ஒன்று இருந்தால் கடும் வெயில் காலம் ஒன்று இருக்கிறது. இரவு என்று ஒன்று இருந்தால் பகல் என்பதாக ஒன்று இருக்கிறது. மிருதுவான புஷ்பங்கள் இருப்பது போல் கூரான முட்கள் இருக்கின்றன. தித்திப்புக்கு மாறாகக் கசப்பு இருக்கிறது. அன்புக்கு எதிராக துவேஷம் இருக்கிறது. எதற்கும் எதிர்வெட்டாக ஒரு மாற்று இயற்கையில் இருக்கிறது. இந்த ரீதியில் ஆலோசனை செய்தால் மனித மனசுக்கு மாற்றாகவும் ஒன்று இருக்கத்தானே வேண்டும்? மனித மனசின் சுபாவம் என்ன? ஆசாபாசங்களில் முழுகிச் சஞ்சலித்துக் கொண்டே இருப்பது, திருப்தியே இல்லாமல் தவிப்பது. இதற்கு மாற்றாக ஆசாபாசமின்றி, சஞ்சலமே இன்றி, சாசுவத சாந்தமாகவும் சௌக்கியமாகவும் திருப்தியாகவும் இருக்கிற வஸ்துவும் இருக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட வஸ்துதான் ஸ்வாமி.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

இந்த மந்திரத்தை நீ நல்ல ஆசார்யரிடத்திலே சென்று கற்றுக் கொள்' என்கிறார்.

உடனே இவர் கேட்கிறார்: 'என்ன மந்திரம் அது...?'

அவர் அந்த மந்திரத்தைச் சொல்கிறார்–

'ஓ, இதுதானா! இது எனக்கு எப்போதோ தெரியுமே! பத்து வருஷத்துக்கு முன்னே ஒரு புத்தகத்திலே பார்த்தேனே. அப்போதே மனப்பாடம் பண்ணி விட்டேனே. நித்யம் சொல்லிக் கொண்டிருக்கிறேனே...'

நித்யம் சொல்கிறாரே– இவருக்கு ஏதாவது உயர்ந்த கதி ஏற்படுகிறதா என்றால் பத்து வருஷத்துக்கு முன்னால் இருந்தது கூட இப்போது இல்லை!

எல்லாம் போய்விட்டது என்கிறார்.

ஏன்...?

அனுஷ்டானம் சரியில்லை! புத்தகத்தைப் பார்த்து மந்திரம் மனப்பாடம் பண்ணிவிட்டார்.

அதை ஓர் ஆசார்யரிடத்தில் ஏன் உபதேசம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். 'ஏன்?' என்ற கேள்வி உலகத்திலே கேட்கப்பட்டுக் கொண்டேயிருக்கும்– நிறைய கேள்விகள்!

'ஏன் நாமாகப் படித்து மனப்பாடம் பண்ணினால் அந்த மந்திரம் சித்திக்காதா?' என்றால் சிலருக்கு மட்டும் முடியும். ஆசார்யரிடத்திலே போகாமலேயே சித்தி பெற்றவர்கள் சிலர் உண்டு.

பெரியாழ்வார் வைபவத்தைச் சொல்கிற போது, ஆசார்யரிடத்திலே படிக்காமலேயே அவர் மகா வியாபகராய் இருந்தார் என்று சொல்லியிருக்கிறது.

எல்லோரும் பெரியாழ்வார் ஆகிவிட முடியுமா? அவருக்குத்தான் அது சித்தித்ததேயொழிய மீதிப் பேரெல்லாம் ஆசார்யரிடத்திலே போக வேண்டும் என்பதுதான் சாஸ்திரம். பெரியாழ்வார் கருடாம்சம் பொருந்தியவர். அதனால் ஆசார்யரில்லாமலே அவருக்கு எல்லாம் சித்தித்தன. அவரைப் போய் நம்மோடு ஒப்பிடலாமா?

ஒரு மந்திரத்தை நித்யம் சொல்லி அனுஷ்டானம் பண்ணிக் கொண்டிருக்கக் கூடியவர்கள் சொல்லிக் கொடுத்தால்தான் அது நமக்கு சித்திக்கும். ஒருவரிடம் பத்தாயிரம் ரூபாய் இருந்தால், அவரிடம் போய் ஐயாயிரம் ரூபாய் நாம் கேட்டால் கொடுப்பார். அவரிடமே எதுவும் இல்லையென்றால் என்ன பண்ணுவார்!

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்



### இருபத்து மூன்றாம் அத்தியாயம்

## வானதி

கொடும்பாளூர் இளவரசியின் அழகை வர்ணிக்கும்படி கவிஞர்களைக் கேட்டால், அவர்கள் அந்த மங்கை நல்லாளின் அழகை அந்தி மாலையின் சௌந்தரியத்துக்கு ஒப்பிடுவார்கள். பகற்பொழுது சென்று மாலை மங்கி வரும்போது மனத்தில் ஒரு சோகமும் ஏற்படுகிறது; கூட ஓர் அமைதியான இன்பமும் தோன்றுகிறது. ஆதவனின் இறுதிக் கிரணங்கள் மெலிந்து மறைந்த பிறகு இரவின் இருள் நாலாபுறமும் கவிந்து வருகிறது. இதனால் மனத்தில் தோன்றும் சோர்வைப் போக்கிக் கொள்வதற்கு வானத்தை நோக்கினால் போதும். கண்ணிமைக்கும் நேரத்தில் வானமா தேவி ஏற்றி வைக்கும் கோடானு கோடிச் சுடர் விளக்குகள் எவ்வளவு ஆனந்தத்தை அளிக்கின்றன! சூரியனுடைய தகிக்கும் ஜோதியைப் போல் அவை கண்களைக் கூசச் செய்வதில்லையே? கண்களால் அவற்றைப் பார்த்து இன்புறலாமே? சந்திரனும் உதயமாகி விட்டாலோ,





கேட்க வேண்டியதில்லை. முத்துச் சுடர் போன்ற முழுமதியின் நிலவில் உலகம் பூரிக்கின்றது; உள்ளமும் உடலும் பூரிக்கின்றன. மாலை வந்ததும் தாமரைகள் கூம்புவது என்னவோ உண்மைதான். ஆனால் விண்மீன்களுடன் போட்டியிடுவது போல் மல்லிகை மொட்டுக்கள் வெடித்து மலர்ந்து அவற்றின் நறுமணத்தினால் வானமும் பூமியும் போதை கொள்கின்றனவல்லவா?

அஸ்தமித்ததும் பட்சிகளின் குதூகலத்வனிகள் ஓய்ந்து விடுகின்றன என்பது உண்மைதான். ஆனால், அதோ தேவாலயத்திலிருந்து வரும் சேமக்கலச் சத்தமும் நாதஸ்வர வாத்தியத்தின் இன்னிசையும் இப்போது எவ்வளவு மதுரமாயிருக்கின்றன! மணிமாடங்களின் மீதிருந்து மென்மையான விரல்கள் மீட்டும் வீணையும் யாழும் எத்தகைய இன்ப கீதத்தை எழுப்புகின்றன!

கொடும்பாளூர் இளவரசி வானதியின் அழகில் இப்படியே சோகத்தின் சாயலும் களிப்பின் மெருகும் இனம் தெரியாதபடி கலந்து போயிருந்தன. அழகுக்கு ஒத்தபடி அவளுடைய சுபாவமும் இருவகைப்பட்டு இருந்தது. ஒருசமயம் அவளைப் பார்த்தால் துயரமே உருக்கொண்ட சந்திரமதியையும் சாவித்திரியையும் போல் இருக்கும். இன்னொரு சமயம் பார்த்தால் அரம்பையும் ஊர்வசியும் தேவருலகில் இப்படித்தான் ஆடிப்பாடிக்கொண்டு இருந்திருப்பார்கள் என்று தோன்றும். கோவலனுடைய காதலில் களித்த மாதவியைப் போல் ஒருசமயம் அவள் இன்ப உயிர்ச் சிலையாக விளங்குவாள். மற்றொரு சமயம் கணவனைப் பறி கொடுத்த கண்ணகியின் சோக வடிவம் இதுதானோ என்று கருதும்படி இருக்கும். ஒருசமயம் மாலை வடிவேலவரின் மையலுக்கு உள்ளாகி இதயம் கலந்து நின்ற வள்ளியைப் போல் தோன்றுவாள். இன்னொரு சமயம் தேவலோகமெல்லாம் களிக்கூத்தாடும்படி கார்த்திகேயருக்கு மாலையிட்டு மகிழ்ந்த தேவயானை இவளேதான் என்று எண்ணி மகிழும்படி ஆனந்த உருவாகி விளங்குவாள்.

சேர்ந்தாற்போல் பல தினங்கள் வானதியின் முகத்தில் ஒரு சிறிய புன்னகையைக் கூடக் காண முடியாது. வேறு சில நாட்களில் அவள் ஓயாது சிரித்துக் கொண்டேயிருப்பாள். அந்தச் சிரிப்பின் ஒலி கோடானு கோடி நுண் துளிகளாகிக் காற்று வெளியில் கலந்து உலகத்தையே ஆனந்த பரவசப்படுத்தும்.

வானதியின் இத்தகைய இருவகைச் சுபாவத்துக்குக் காரணம், அவளுடைய பிறந்த வேளையும் வளர்ந்த காலமும் என்று ஊகிக்கலாம். அன்னையின் கர்ப்பத்தில் அவள் இருந்தபோது கொடும்பாளூர் சிறிய வேளார் கொடிய போர்களில் ஈடுபட்டிருந்தார். வெற்றிச் செய்தியும் தோல்விச் செய்தியும் மாறி மாறி வந்துகொண்டிருந்தன. இவை அவளுடைய அன்னையின் உள்ளத்தில் களிப்பையும் துயரத்தையும் மாற்றி மாற்றி உண்டாக்கின. வானதி பிறந்த சில காலத்துக்குப் பிறகு அவளுடைய அன்னை காலமானாள். பிறகு, வானதியை அவளுடைய தந்தை கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து வந்தார். ஆனால் இதுவும் நீடித்திருக்கவில்லை. வீராதி வீரராகிய வானதியின் தந்தை அருமை மகளை முன்னிட்டுக் கூட அரண்மனையிலேயே உட்கார்ந்திருக்க விரும்பவில்லை. வீர பாண்டியன் ஓடி ஒளிந்த பிறகு, அவனுக்குத் துணை வந்த ஈழத்துப் படைகளைத் துரத்திக் கொண்டு இலங்கை சென்றார். அங்கே போர்க்களத்தில் உயிர் நீத்து, சரித்திரத்தில் 'ஈழத்துப் பட்ட சிறிய வேளார்' என்ற பட்டப் பெயர்

பெற்றார்.

பின்னர், வானதியின் வாழ்க்கை சில காலம் ஒரே துயரமய மாயிருந்தது. தாயை இழந்து தகப் பனாரால் வளர்க்கப்பட்ட பெண் கள்தான் அந்தச் சோக உணர்ச்சி எத்தகையது என்பதை அறிய முடியும். பெற்றோரில்லாப் பெண் கொடும் பாளூர் அரண்மனையில் சீராட்டி வளர்க்கப்பட்டாலும் அவளுடைய உள்ளத்தில் தந்தை பெற்றிருந்த இடத்தை யாரும் பெற முடிய வில்லை. அதற்குப் பலரும் பல விதமாக ஆறுதல் கூறினார்கள். ''வருந்தாதே, குழந்தை! உன் தந்தை உன் வயிற்றில் வந்து மீண்டும் வீர மகனாகப் பிறப்பார். உலகம் வியக்கும்படியான அற்புத வீரச் செயல்களைப் புரிவார்!'' என்று ஒருவர் கூறினார். இவ் வார்த்தைகள் வானதியின் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து வேரூன்றின. அருமைத் தந்தையைப் பிரிந்த தனால் ஏற்பட்ட துய ரத்தையும் சோர்வையும் கற்பனை மகனைப் பற்றி எண்ணுவதிலே போக்கிக் கொள்ள முயன்றாள். அதில் ஓரளவு வெற்றியும் அடைந் தாள்.

தனக்குப் பிறக்கும் குமாரன் எப்படி எப்படி இருப்பான். எந் தெந்த மாதிரி நடப்பான். எத்தகைய வீரச் செயல்களைப் புரிவான் என்ற



மனோ ராஜ்யத்தில் நாள் கணக்காக மூழ்கிவிடுவாள். கற்பனைக் கண்ணின் மூலமாக, அந்த வீர மகன் தூர தூர தேசங்களுக்குச் சென்று மாபெரும் யுத்தங்களில் வெற்றி பெறுவதைப் பார்த்தாள். வேகமாகத் திரும்பி வந்து அவன் அடைந்த வெற்றியின் காணிக்கைகளையெல்லாம் தன்னுடைய காலடியில் சமர்ப்பிப்பதைப் பார்த்தாள். அவன் மணிமுடி தரித்து வீர சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பதைப் பார்த்தாள். ராஜாதி ராஜாக்கள் வந்து அவனுக்குக் கப்பம் கட்டி அடி பணிவதைப் பார்த்தாள். அவனுடைய திருமுகத்தைக் கண்டதும் ஜனத்திரள்கள் பூரண சந்திரனைக் கண்ட மாகடலைப் போல் பொங்கி எழுந்து அலை மோதி ஆரவாரிப்பதைப் பார்த்தாள். நூறு நூறு கப்பல்களில் வீரர்களை ஏற்றிக் கொண்டு அவன் கடல்களைக் கடந்து சென்று அப்பாலுள்ள நடுகளிலே வெற்றிக் கொடி நாட்டுவதைப் பார்த்தாள். "அன்னையே! நான் அடைந்துள்ள இத்தனை பெருமைக்கும் காரணம் நீயே அல்லவோ!" என்று தன்னிடம் அடிக்கடி அவ் வீர மகன் வந்து கூறுவதையும் கேட்டாள்.

அந்த அறியாத பேதைப் பெண் சில சமயம் தன் ஆலிலை வயிற்றைத் தொட்டுத் தடவிப் பார்த்துக் கொள்வாள். தன் கற்பனை மகன் ஒருவேளை வயிற்றில் வந்து விட்டானோ என்று தான். பழந்தமிழ் நாட்டில் ஆண்கள், பெண்கள் அனைவரும், பாரதக் கதையைக் கேட்டு அறிந்திருந்தார்கள். குந்தி தேவி குழந்தை பெற்ற விதத்தைப் பற்றியும் கேட்டிருந்தார்கள். அதுபோல், எந்தத் தெய்வம் வந்து தனக்குக் குழந்தை வரம் கொடுக்கப் போகிறது என்று எண்ணி எண்ணி அவள் வியப்பதுண்டு. அப்போதெல்லாம் யாரையும் மணந்து கொள்வதைப் பற்றியே அவள் எண்ணவில்லை. வயது வந்த பிறகு, உலகம் ஓரளவு தெரிந்த பிறகு, கணவன் ஒருவனை மணந்தேயாக வேண்டும் என்றும், அவன் மூலமாகவே குழந்தைப் பேற்றை அடைய வேண்டும் என்றும் அறிந்தாள். அப்போதும் கணவனைப் பற்றி அதிகமாக மனோராஜ்யம் செய்யவில்லை.

பழையாறை அரண்மனைக்குப் போன பிறகு அவளுடைய வாழ்க்கையிலும் மனப் போக்கிலும் மாறுதல் ஏற்பட்டது. குந்தவைதேவியின் பெருமிதம் கலந்த அன்பு அவளுக்கு ஆறுதலும், குதூகலமும் அளித்தன. குந்தவையின் நாகரிக உடை பாவனைகளும், சாதுர்யப் பேச்சுக்களும் வானதியை அவள் இதுவரை அறியாத வேறொரு உலகத்துக்குக்கொண்டு போயின. அவளைப் போலவே பழையாறை அரண்மனைக்கு வந்திருந்த மற்ற அரசகுலப் பெண்களின் அசூயை அவளுக்கு வாழ்க்கையில் ஒரு புதிய ஆர்வத்தை உண்டாக்கியது. அவர்கள் அசூயைப் படும்படியாகத் தன்னிடம் ஏதோ மகிமை இருக்க வேண்டும் என்று அவளுடைய உள்மனம் உணர்த்தியது. அதேசமயத்தில் அவளுடன் இயற்கையாகப் பிறந்த இனிய சுபாவமும் பெருந்தன்மையும் எல்லாருடனும் நல்லபடியாக நடந்து கொள்ள அவளைத் தூண்டியது. இத்தனைக்கும் நடுவில் வானதி தனக்குப் பிறக்கப் போகும் வீர மகனைப் பற்றி இன்பக் கனவு காண்பதை மட்டும் விட்டுவிடவில்லை.




தற்கிடையில்தான் அவள் பொன்னியின் செல்வரைப் பார்க்கும்படி நேர்ந்தது. அதன் பலனாக அவளுடைய மனக்கோட்டைகள் எல்லாம் பொல பொல என்று தகர்ந்து விழுந்

தன. கணவனை அடைந்த பின்னர்தான் மகனைப் பெற முடியும் என்று அவள் அறிந்திருந்தாள். கணவன் யாராயிருந்தாலும் எப்படிப்பட்டவனாயிருந்தாலும் சரிதான் என்ற அலட்சியப் பான்மை அதற்கு முன்பு அவள் அடி உள்ளத்தில் இருந்தது. ஆனால், இந்தப் பொல்லாத மனத்தை என்ன செய்வது? இது சோழ நாட்டு மக்களின் கண்ணுக்குக் கண்ணான இளவரசரிடமல்லவா போய் விட்டது! ஐம்பத்தாறு தேசத்து மன்னர்களும் 'என் பெண்ணை மணந்து கொள்!' என்று கெஞ்சிக் கூத்தாடக் கூடிய பெருமை வாய்ந்தவர் அல்லவா அவர்! அத்தகையவர் தன்னைத் திரும்பியும் பார்ப்பாரா? அவரை மணந்து கொள்ளும் பாக்கியத்தைப் பற்றி அவளால் கனவுகூடக் காண முடியாதே? இளவரசரிடம் இந்தப் பேதை மனம் சென்ற பிறகு, இன்னொருவரை மணந்து கொள்வதுதான் எப்படிச் சாத்தியம்! ஆகையால், தன் வயிற்றில் பிறக்கப் போகிற வீர குமாரனைப் பற்றி இத்தனை காலமும் அவள் கட்டிவந்த மனக்கோட்டைகள் எல்லாம் சிதறிப் போகத்தானே வேண்டும்? இதையெல்லாம் நினைக்க நினைக்க, அவளுடைய உள்ளம் வெடித்து விடும் போலிருந்தது. மறுபடியும் பழையபடி சோக வடிவமானாள். அவளுடைய மனத்தை அறிந்துகொண்ட இளைய பிராட்டி அவளிடம் விசேஷ அன்பும் ஆதரவும் காட்டினாள். தன்னாலியன்ற வரையில் வானதியை உற்சாகப்படுத்த முயன்றாள். பொன்னியின் செல்வரிடம் அவளுடைய உள்ளம் சென்றது அப்படியொன்றும் பிசகான விஷயமில்லையென்றும், நடக்க முடியாத காரியமும் அல்லவென்றும் குறிப்பாக உணர்த்தி வந்தாள். குடந்தை ஜோதிடர் வானதிக்குப் பிறக்கப் போகும் மகனைப் பற்றிக் கூறியது அவளுடைய உள்ளக் கனலுக்குத் தூபம் போட்டு வளர்த்தது. அவளுடைய மனோ ராஜ்யம் மேலும் விரிவடைந்துகொண்டே வந்தது. மனச் சோர்வும் குதூகலமும் மேலும் துரிதமாக மாறி மாறி ஏற்பட்டன. ஏக்கத்தினால் ஏற்பட்ட மனவேதனை பொறுக்க முடியாமலிருந்தது போல், மகிழ்ச்சியினால் ஏற்பட்ட கிளர்ச்சியையும் அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இரண்டும் மிதமிஞ்சிப் போன போது மயக்கம் போட்டு விழுந்தாள்; இயற்கை அருளிய இந்த மயக்க மருந்து சாதனத்தினால் அவள் தன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு வந்தாள்.

தஞ்சைக்குச் சென்றிருந்தபோது, வானதி பார்த்த பராந்தகச் சக்கரவர்த்தி நாடகமும், அன்றிரவு அவள் கேட்ட அபயக் குரலும் கண்ட பயங்கரக் காட்சியும் அவளுடைய மனக் குழப்பத்தை அதிகமாக்கின. கொடும்பாளூர் வம்சத்துக்கும் பழுவூர் சிற்றரசர் குலத்துக்கும் ஏற்பட்டிருந்த தீராத பகையின் அளவை அவள் அன்று நன்கு அறிந்துகொண்டாள். பழுவூர்க்காரர்கள் சோழ நாட்டில் அப்போது அடைந்திருந்த செல்வாக்கின் அளவையும் தெரிந்துகொண்டாள். இளவரசர் அருள்மொழிவர்மர் விஷயத்தில் தன் மனோரதம் ஈடேறப் பழுவேட்டரையர்கள் அனுமதிப்பார்களா? அவர்கள் அனுமதித்தாலும் அவர்கள் வீட்டுப் பெண்கள் சும்மாயிருப்பார்களா? பழுவூர் இளையராணி சம்மதிப்பாளா? அவளுடைய செல்வாக்கும் சக்தியும் உலகம் அறிந்தவை. நந்தினியை நினைக்கும்போதெல்லாம் அழகிய நாகப்பாம்பின் நினைவு வானதிக்கு வந்தது. இளையபிராட்டியின் பேரில் அவளுடைய பகைமையைப் பற்றி அறிந்து கொண்டிருந்தாள். அது தன் பேரிலும் பாயும் அல்லவா? ஏன்? பொன்னியின் செல்வரையே அந்த விஷ நாகம் தீண்டினாலும் தீண்டக்கூடும்! நள்ளிரவில், நோயாகப் படுத்திருக்கும் சக்கரவர்த்தியின்

முன்னால் நந்தினியை யொத்த வடிவம் ஒன்று நின்றதே! அது உண்மையில் நந்தினிதானா? சக்கரவர்த்தி அப்படியெல்லாம் பீதி நிறைந்த குரலில் ஓலமிட்ட காரணம் என்ன? இளையபிராட்டி இதைப் பற்றியெல்லாம் ஏன் தன்னிடம் எதுவும் பேசுவதற்கு மறுக்கிறாள்! ஆமாம்! இளையபிராட்டியின் மனமும் மாறிப் போயிருக்கிறது. தன்னிடம் முன்னெல்லாம் போல் அவ்வளவு கலகலப்பாகப் பேசுவதில்லை. அடிக்கடி தன்னை விட்டு விட்டுத் தனிமையை நாடிப் போய் விடுகிறார். அவரை ஏதோ பெருங் கவலை பீடித்திருக்கிறது. ஒரு வேளை பொன்னியின் செல்வரைப் பற்றிய கவலைதானோ என்னவோ? அதனாலேதான் தன்னிடம் அதைப் பற்றிச் சொல்வதற்கு மறுக்கிறார் போலும்!




ன்றைக்குக் கூடத் திடீரென்று இளையபிராட்டி காணாமற் போய் விட்டார். அவர் இல்லாத சமயங்களில் இந்தப் பெண்கள் என்ன பாடு படுத்துகிறார்கள்? என்ன கொட்டம் அடிக்

கிறார்கள்? கவலையென்பதை அறியாத வர்கள். எது எப்படிப் போனாலும் அவர்களுடைய கொம்மாளத்துக்குக் குறைவு ஒன்றும் கிடையாது. அவர் களுடைய கேலிப் பேச்சுக்களை வானதி யினால் எப்போதுமே சகித்துக் கொள்ள முடிவதில்லை. அதுவும் இந்த இரண்டு மூன்று தினங்களாக ஒரே சோகக் கடலில் வானதி ஆழ்ந்திருந்த படியால் அவர்களுடைய வீண் பேச்சுக்கள் அவளுடைய காதில் நாராசமாக விழுந்தன. இளையபிராட்டி எங்கேதான் போயிருப்பார் என்று தேடிக் கொண்டு புறப்பட்டாள். மூத்த மகாராணியின் அரண்மனையில் ஏதோ சபை கூடியிருக்கிறதென்றும் அங்கே போயிருக்கிறார் என்றும் தெரிந்து கொண்டாள். ஆகையால் அந்த அரண் மனைக்குச் சென்றாள். வானதி போவதற்குள் அங்கே சபை கலைந்து விட்டது. பெரிய மகாராணியும் அவருடைய செல்வப் புதல்வர் மதுராந்தகரும் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிந் தாள். எதனாலோ இந்தச் செய்தி வானதிக்கு மேலும் கவலையை உண்டாக்கியது. அங்கிருந்து மறுபடியும் புறப்பட்டாள். அரண்மனை வாசலில் ஜனத்திரளின் பெரும் இரைச்சல் கேட் டது. விஷயம் இன்னதென்று தெரிய வில்லை. இளையபிராட்டியை உடனே பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் மிகுந் தது. அரண்மனையில் சேடிப் பெண் களை ஒவ்வொருத்தியாக விசாரித்தாள். சற்று முன்னால் ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனுடன் இளையபிராட்டி அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருந்ததாகவும், பிறகு அரண்மனைத் தோட்டத்து ஓடையை நோக்கிச் சென்றதாகவும் ஒரு சேடி கூறி னாள். இளையபிராட்டி தனிமையை நாடிச் செல்லும் சமயங்களில் யாரும் வந்து தொந்தரவு செய்வதை இப்போ தெல்லாம் அவர் விரும்புவதில்லை. ஆகையால் ஓடைப் பக்கம் இளைய பிராட்டியைத் தேடிக்கொண்டு போக லாமா வேண்டாமா என்று வானதி தயங்கினாள். அச்சமயம் வாரிணி என்னும் மங்கை ஓட்டமாக ஓடி வந்தாள். "பொன்னியின் செல்வர் கடலில் மூழ்கி விட்டாராம்!" என்ற பயங்கரச் செய்தியைச் சொல்லி விட்டு அலறி அழுதாள். மற்றப் பெண்களும் இதைக் கேட்டு ஓவென்று கதறத் தொடங்கினார்கள். வானதிக்கோ முதலில் எவ்வித உணர்ச்சியும் உண் டாகவில்லை. சும்மா நின்றவளை மற்றப் பெண்கள் உற்று நோக்கினார்கள்.

"அடி பாவி! உன்னுடைய துர திர்ஷ்டத்தினால்தான் இளவரசர் கடலில் மூழ்கினார்!" என்று அவ்வளவு கண்களும் அவளை நோக்கி இடித்துச் சொல்லுவது போல் காணப்பட்டது. வானதியினால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. அங்கு நிற்கவும் முடிய வில்லை. அரண்மனைத் தோட்டத்து ஓடையை நோக்கி ஓடினாள்.

ஓடையை நோக்கி ஓடிக்கொண் டிருந்தபோது வானதியின் உள்ளமும் ஓடிக்கொண்டிருந்தது. "இளவரசர் கடலில் மூழ்கி விட்டார்!" என்ற வார்த் தைகளின் பொருள் அவளுக்கு விளங் கியது. அதனால் ஏற்பட்ட அதிர்ச்சியை மீறிக்கொண்டு மற்றோர் எண்ணம் மேலெழுந்தது. சென்ற சில தினங் களாகத் தண்ணீரைப் பார்க்கும் போதெல்லாம் அதில் இளவரசரின் முகம் பிரதிபலித்துக்கொண்டிருந்தது. கரையில் நின்று பார்க்கும்போதெல் லாம் அவருடைய முகம் தத்ரூபமாகத் தண்ணீரில் தோன்றும். தொடுவதற்குப் போனால் மறைந்து விடும். அதன் காரணம் என்னவென்பது வானதிக்குப் புலனாயிற்று. இளவரசர் கடலில் மூழ்கியபோது என்னை நினைத்துக் கொண்டிருக்கிறார். என்னை அழைத்து மிருக்கிறார். அதை அறியாமல் பாவி

நான் கரையிலேயே நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன்! ஆஹா! என்ன தவறு செய்து விட்டேன்! போனதை நினைப்பதில் இனிப் பயனில்லை. இனிச் செய்ய வேண்டியது என்ன? பேதைப் பெண்ணே! இனிச் செய்ய வேண்டியதைப் பற்றி யோசிக்கவும் வேண்டுமா! யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? அரண்மனைத் தோட்டத்தையடுத்துள்ள ஓடை அரசலாற்றில் கலக்கிறது. அரசலாறு கடலில் போய்ச் சங்கமமாகிறது. கடலின் அடியில் காத்திருக்கிறார் இளவரசர். எனக்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறார். கடலின் அடியில் முத்துக்களாலும் பவளங்களாலும் ஆன அற்புத மாளிகையில் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார். அவரைச் சந்திக்கப் போகாமல் இந்த உலகத்தில் எனக்கு வேறு என்ன வேலை...? யாருக்காக இங்கே நான் இருக்க வேண்டும்....?

இவ்வாறு வானதி தீர்மானம் செய்ததும் வானதியின் உள்ளத்தில் ஒருவித அமைதியே உண்டாகிவிட்டது; அவளது பரபரப்பு அடங்கிவிட்டது; துயரம் நீங்கி விட்டது; கவலை தீர்ந்துவிட்டது.

ஓரே ஓடைக்கரைக்குச் சென்றாள். பளிங்குக் கல்லினாலான படிக்கட்டுகளில் இறங்கி நின்றாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். அதோ தூரத்தில் படகு ஒன்று வருவது தெரிந்தது. அதில் இருப்பவர் இளைய பிராட்டிதான். அவருடன் இருக்கும் ஆடவன் யார்? குடந்தை ஜோதிடர் வீட்டில் முதலில் சந்தித்து, இலங்கைக்கு ஓலை எடுத்துச் சென்ற வாலிபன் போலத் தோன்றுகிறது. இளவரசரைப் பற்றிய செய்தியைக் கொண்டு வந்தவன் அவன்தான் போலும்! அதனாலேதான் அவனை இளையபிராட்டி தனியாக அழைத்துப் போயிருக்கிறார். விவரங்களைக் கேட்டு அறிந்திருக்கிறார். எனக்குத் தெரிந்தால் கஷ்டப்படுவேன் என்று என்னை விட்டு விட்டுப் போயிருக்கிறார். அவர் வந்து விட்டால் என் இஷ்டப்படி செய்ய முடியாது. ஏதாவது சமாதானம் சொல்லப் பார்ப்பார்; ஆறுதல் கூறப் பார்ப்பார். நான் இளவரசரைப் போய்ச் சேர்வதைக் கட்டாயம் தடுத்து விடுவார். ஆனாலும் அவரிடம் சொல்லாமல், கடைசியாக ஒரு தடவை விடை பெற்றுக் கொள்ளாமல், போவது நியாயமா? தாய் தந்தையற்ற இந்த அனாதைப் பெண்ணிடம் இத்தனை அன்பாக இருந்தாரே! அவருக்கு ஒரு நன்றி வார்த்தையாவது சொல்ல வேண்டாமா...? முடியாது! முடியாது! இனி ஒரு கணமும் காத்திருக்க முடியாது! இதோ தண்ணீரில் அவர் முகம் தெரிகிறது! இதோ அவருடைய முழு உருவமும் பொலிகிறது. என்னை அவர் அழைக்கிறார்; புன்னகை செய்து கூப்பிடுகிறார். "உன்னை நான் மணம் புரிந்து கொள்ளுவதற்கு எல்லாத் தடைகளும் நீங்கி விட்டன! வா!" என்று அழைக்கிறார். இன்னும் ஏன் தாமதம்?... ஆகா! தலை ஏன் இப்படிச் சுற்றுகிறது? பாழும் மயக்கம் வருகிறதா, என்ன? மயக்கம் வந்தால் பாதகமில்லை. கரையில் விழாமல் இந்த ஓடைத் தண்ணீரில் விழுந்தால் போதும்...!

வானதியின் மனோரதம் நிறைவேறியது. அவள் தண்ணீரிலேதான் விழுந்தாள். கொதித்துக் கொண்டிருந்த உடம்பு இனிதாகக் குளிர்ந்தது. இதயமும் குளிர்ந்தது. கீழே கீழே கீழே போய்க் கொண்டிருந்தாள். எத்தனை தூரம் எத்தனை காலம் போனாள் என்று சொல்ல முடியாது. சில வினாடி நேரமாகவும் இருக்கலாம்; நீண்ட பல யுகங்களாகவும் இருக்கலாம்.

ஆம்; கடலின் அடியிலுள்ள அற்புத லோகத்துக்கு அவள் வந்துவிட்டாள். நாகலோகம் என்பது இதுதான் போலும்! ஆகா! எத்தகைய அழகிய மாளிகைகள்! எத்தனை அடுக்கு மெத்தைகள்! முடிவில்லாமல், சிகரம் எங்கே இருக்கிறதென்று தெரியாமல் அல்லவா, இம் மாளிகைகள் உயர்ந்து விளங்குகின்றன! இங்குள்ள வெளிச்சம் எதனால் இவ்வளவு குளிர்ந்து மனோரம்மியமாயிருக்கிறது? தண்ணீருக்குள்



புகுந்து வருவதால் ஒளிக் கிரணங்களும் குளிர்ந்திருக்கின்றன போலும்! ஒளி எங்கிருந்து வருகிறது? மாளிகைச் சுவர்களிலிருந்தே வருகின்றது போலிருக்கிறது! ஆம், அதில் வியப்பில்லைதான்! தங்கத்தினாலும் முத்துக்களாலும் வைர வைடூரியங்களாலும் நாக சர்ப்பங்களின் சிரோ ரத்தினங்களாலும் ஆன விசித்திர மாட மாளிகைகள் குளிர்ந்த வெளிச்சத்தைப் பரப்புவது இயல்புதானே?

அதோ கூட்டமாக வருகிறவர்கள் யார்? அவர்களுடைய தேகங்கள் எப்படிக் காந்தி மயமாயிருக்கின்றன? முகங்களிலேதான் என்ன தேஜஸ்? இவர்களெல்லாம் தேவலோகத்து ஸ்திரீ புருஷர்களைப் போல் அல்லவா தோற்றமளிக்கிறார்கள்? நாம் வந்திருப்பது ஒருவேளை நாக லோகமில்லையோ? தேவலோகத்துக்கு வந்து விட்டோமோ...!

பிறகு, கனவுக்குள் ஒரு கனவைப் போல் சில நிகழ்ச்சிகள் அதிவேகமாக நடந்தேறின. சிங்கார அலங்காரங்கள் செய்யப்பட்டிருந்த மணி மண்டபம் ஒன்றுக்கு வானதியை அவர்கள் அழைத்துச்சென்றார்கள். மண்டபத்தின் மத்தியில் பொன்னியின் செல்வர் தமது பொன் முகத்தில் புன்னகை பொலிய நின்று வானதியை வரவேற்றார். தேவ துந்துபிகள் முழங்க, மணிகளும் மலர்களும் பொழிய, மங்கள கோஷங்கள் ஒலிக்க, இளவரசரும் வானதியும் மாலை மாற்றித் திருமணம் புரிந்து கொண்டார்கள். அந்த ஆனந்தத்தின் மிகுதியைத் தாங்க முடியாமல் வானதி மூர்ச்சையாகி விழுந்தாள். வெகு நேரம் நினைவின்றிக் கிடந்த பிறகு இரு கரங்கள் அவளைத் தூக்கி எடுத்தன. அக்கரங்கள் பொன்னியின் செல்வருடைய திருக்கரங்கள் என்று முதலில் வானதி கருதினாள். அவர்தான் தன்னைத் தூக்கி எடுத்து வாரி அணைத்த மடியில் போட்டுக்கொண்டு மூர்ச்சை தெளிவிக்கிறார் என்று எண்ணினாள். ஆனால் கைகளிலே வளையல்கள் தட்டுப்பட்டதும் சிறிது ஐயம் உதித்தது. "வானதி! வானதி! இப்படிச் செய்து விட்டாயே?" என்ற குரலும் பெண் குரலாக ஒலித்தது. மிக மிகப் பிரயத்தனம் செய்து வானதி சிறிதளவு கண்ணிமைகளைத் திறந்து பார்த்தாள். குந்தவையின் முகம் அவள் கண்ணில் பட்டது.

"அக்கா! அக்கா! என் கலியாணத்துக்கு நீங்கள் வந்திருந்தீர்களா? தங்களைக் காணவில்லையே?" என்று வானதியின் வாய் முணு முணுத்தது.

*(தொடரும்)*



* ஹிட்லர்

# ஹிட்லர் போனவழி

## அமரர் கல்கி

"கல்லுளி மங்கன் போனவழி
காடு மேடெல்லாம் தவிடுபொடி!"

இந்தப் பழமொழி உலக நாடுகளின் சரித்திரத்திலே, உலகப் பிரமுகர்களின் வாழ்க்கையிலே எத்தனை தடவை உண்மையாகியிருக்கிறது!

கல்லுளி மங்கன் காடு மேடையெல்லாம் தவிடுபொடி செய்துகொண்டு முன்னேறிச் செல்வானாம். கடைசியில் என்ன ஆகும்? எங்கே போய்ச் சேர்வான்? ஒரு பெரிய படுகுழியின் பக்கத்தில் போய்ச் சேர்வான்! அப்புறம் திரும்பி வரப் பார்ப்பான். ஆனால் அது முடியாத காரியமாய்ப் போய் விடும். ஏனெனில், போகும்போது அவன் தவிடுபொடி செய்துகொண்டு போனதினால் திரும்பி வரும்போது தவிக்கும்படி நேரிடும்!

பலமும் உறுதியும் விடாப் பிடியும் வீரனின் இலட்சணங்கள்தான், எனினும் அவற்றின் எல்லை எது என்பதை வீரன் தெரிந்து கொண்டிருக்க வேண்டும்; அவற்றை எந்தச் சமயத்தில் கட்டுப்படுத்த வேண்டும் என்பதை அவன் அறிந்திருக்க வேண்டும்.

வெற்றி மேல் வெற்றி பெறும் வீரன் மேலும் மேலும் சென்றுகொண்டே இருக்கக்கூடாது. எந்த இடத்தில் நிற்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும்.

இல்லாவிட்டால் வெற்றி வீணாகி விடும்; பேராபத்தாகவும் முடியும்.

அவ்வாறு குறிப்பிட்ட எல்லையில் நிற்காததால், வெற்றி மேல் வெற்றி பெற்ற எத்தனை வீரர்கள் படுவீழ்ச்சி அடைந்திருக்கிறார்கள்?

நெப்போலியன் வெற்றி பெற்று வீராதி வீரனாகத் திகழ்ந்தான்;

இராணுவ தந்திரத்திலே அசகாய சூரன் என்று புகழ் பெற்றான்; ஐரோப்பிய நாடுகளின் அமைப்பையே மாற்றினான். நெப்போலியனின் வாழ்க்கையில் தோல்வி என்ற வார்த்தைக்கே இடம் இல்லை என்று தோன்றியது.

ஆனால் எந்த இடத்தில் நிற்க வேண்டும் என்பதை அவன் அறியவில்லை. மேலும் மேலும் முன்னேறிச் சென்று கொண்டே இருந்தான். அதன் விளைவாக இறுதியில் திரும்பி ஓடவும் முடியாமல் படு வீழ்ச்சியுற்றான்; தோல்வியடைந்து சிறைப்பட்டு இறந்தான்.

சமீப காலத்தில் ஐரோப்பாவை மாத்திரமல்ல, அகில உலகத்தையும் நடுங்க வைத்த ஹிட்லரின் கதி என்னவாயிற்று என்பதை அறிவோம்.

எல்லா நவீன யுத்தச் சாதனங்களுடனும் கூடிய வல்லரசான பிரான்ஸ், ஹிட்லர் படைகளின் முன்னிலையிலே இரண்டே வாரத்தில் படுதோல்வியுற்றது. பல பல நாடுகள் ஒரு சில வாரங்களில் ஹிட்லரின் வெறிக்கு அடி பணிந்து அடிமை ஆயின.

சரித்திரம் கண்டிராத அத்தகைய அற்புத வெற்றிகள் பெற்ற ஹிட்லர் ருஷ்ய எல்லையைக் கடந்து செல்லாமல் நின்றிருந்தால், இரண்டாவது உலக மகாயுத்தத்தின் போக்கே அடியோடு மாறியிருக்கும் அல்லவா?

எனவே, நிற்காமல் மேலும் மேலும் வெற்றி பெறுவோருக்கு நெப்போலியன், ஹிட்லரின் வாழ்க்கை சிறந்த படிப்பினையாக அமைந்திருக்கிறது.

எவ்வளவு மகா வீராதி வீரனாக இருந்தாலும், வில்லாதி வில்லனாக இருந்தாலும் அவனும் நிற்க வேண்டிய எல்லையில் நின்றுவிட வேண்டும் என்பதை அது நிரூபித்திருக்கிறது.

● ● ●

**அ**மெரிக்க தளபதி ஜெனரல் டக்ளஸ் மெக் ஆர்தர் சென்ற மகா யுத்தத்தில் மேலும் மேலும் வெற்றி பெற்றுப் புகழ் அடைந்தார்.

கொரியா யுத்தத்திலும் அவர் தமது பிரதாபத்தை நிலைநாட்டினார். தென் கொரியா மீது ஆக்கிரமித்த வட கொரியர்களை அவர்கள் வந்த வழியே விரட்டியடித்து வெற்றி பெற்றார்.

அவ்வாறு வெற்றி மேல் வெற்றி பெற்ற அவர் நிற்க வேண்டிய எல்லையில் நிற்கத் தவறிவிட்டதால் பெரிய ஆபத்து ஏற்பட்டிருக்கிறது.

அமெரிக்காவுக்கு மாத்திரம் அல்ல, உலகம் முழுவதற்குமே பெரும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. உலகத்தைப் படுகுழியின் ஓரத்தில் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது; மூன்றாவது மகா யுத்தம், - அணு குண்டுப் பிரயோகத்தினால் உலகமே சர்வ நாசமடையக் கூடிய மகா யுத்தம், - எந்த நிமிஷத்திலும் பீறிட்டு எழலாம் என்ற நிலைமையை உண்டு பண்ணியிருக்கிறது.

ஜெனரல் மெக் ஆர்தர் தலைமையில் ஐக்கிய நாடுகள் சபையின் துருப்புக்கள் தென் கொரியாவை வட கொரியர்களிடமிருந்து மீட்டன. அப்போது 38-வது அக்ஷரேகையை, தென்கொரியா எல்லையைக் கடந்து ஐ.நா துருப்புகள் செல்லாமல் சமாதான முறைகளைக் கைக்கொண்டு கொரியா பிரச்னையைத் தீர்க்க முற்பட வேண்டும் என்றும் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறினார். அந்த எல்லையைக் கடந்து சென்றால் கொரியா யுத்தம் பரவுவதற்கான விபரீதச் சூழ்நிலை ஏற்படக் கூடும் என்று எச்சரித்தார். இன்னும் சிலரும் அவ்விதமே கூறினார்கள்.

ஆனால் ஆணவமும் வெற்றி மமதையும் கொண்ட மெக் ஆர்தரின் செவிகளில் அதெல்லாம் விழவில்லை.

வட கொரியாவில் மளமளவென்று முன்னேறிச் சென்ற அமெரிக்கத் துருப்புகள் போர்த் தளவாடங்களைப் பறி கொடுத்து விட்டுப் பயங்கரமான உயிர்ச்சேதத்துடன் பின்வாங்கி ஓடும்படி நேர்ந்திருக்கிறது.

லட்சக்கணக்கான சீனக் கம்யூனிஸ்டுத் துருப்புகள் வடகொரியாவுக்குள் பிரவேசித்து

அமெரிக்கத் துருப்புகளைச் சிதறடித்துச் சின்னா பின்னம் செய்து வருகின்றன.

"கொரியா யுத்தம் அநேகமாக முடிந்து விட்டது என்றே வைத்துக் கொள்ளலாம்" என்று ஜெனரல் மெக் ஆர்தர் சில தினங்களுக்கு முன் தான் கூறினார். "எப்படியிருந்தாலும் போர் முனையில் உள்ள நமது பையன்கள் (சிப்பாய்கள்) திரும்பி வந்து கிறிஸ்துமஸ் விழாவை அவரவர் வீட்டில் கொண்டாட முடியும் என்பது நிச்சயம்" என்று ஜெனரல் மெக் ஆர்தர் மார் தட்டிய ஒரு வாரத்துக்குள் நிலைமை படுமோசமாகி விட்டது!

சீனத் துருப்புகள் கொரியா போரில் ஈடுபடாது என்று முதலில் கூறிய மெக் ஆர்தரின் தொனி இப்போது முற்றிலும் மாறியிருக்கிறது.

அவ்வளவு அதிகத் துருப்புகள் சீன எல்லையில் இருந்ததைத் தாம் அறிந்து கொள்ள முடியவில்லையாம். சீன எல்லை யில் அமெரிக்க விமானங்கள் பிரவேசிக்கக் கூடாது என்று தமக்குக் கட்டளை பிறப் பிக்கப்பட்டிருந்ததால், அதைக் கண்காணிப்பது முடியாத காரியம் ஆகி விட்டதாம். இவ்விதம் ஜெனரல் மெக் ஆர்தர் சமாதானம் கூறுகிறார்.

அப்படியாயின், எதிரித் துருப்புகளின் நிலையைக் கண்காணிக்க முடியாத விபரீதத்தைச் சிருஷ்டித்துக் கொண்டது மெக் ஆர்தர் செய்த பெரும் தவறு அல்லவா? புகழ் பெற்ற பெரிய இராணுவ தளபதி அதைக் காட்டிலும் படுமோசமான தவறு வேறு என்ன செய்ய முடியும்?

முப்பத்தெட்டாவது அக்ஷரேகையைக் கடந்து செல்லாமல் இருந்தால், அமெரிக்காவின் வெற்றியும் மெக் ஆர்தரின் புகழும் நிலைத்திருக்கும். சீனத் துருப்புகள் வட கொரியாவுக்குள் பிரவேசித்த உடனேயே கண்காணிக்க ஆரம்பித்திருக்கலாம். அதற்கு வேண்டிய முன் ஏற்பாடுகளைச் செய்து கொள்ளலாம். மேற்படி துருப்புகளின் நிலையையும் எண்ணிக்கையையும் கண்காணித்து, அவர்களை எதிர்த்து நிற்பதற்கான முஸ்தீபுகளைக் கைக்கொள்ள அவகாசம் கிடைத்திருக்கும். வாபஸ் வாங்க வேண்டிய நிலைமை ஏற்பட்டாலும், அதிகச் சேதமின்றிக் கண்ணியமாக வாபஸ்



மெக் ஆர்தர்

ஆகியிருக்கலாம்.

இதெல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமாக உலக நாடுகளின் ஆதரவும் ஜெனரல் மெக் ஆர்தருக்குக் கிடைத்திருக்கும்.

ஆனால் வெற்றி வெறி கொண்ட ஜெனரல் மெக்ஆர்தர் தென்கொரியா எல்லையில் நிற்காததால், மகத்தான நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

பிரிட்டிஷ் மந்திரி சபை அவசரம் அவசரமாகக் கூடி ஆலோசித்ததன் பயனாக பிரதம மந்திரி ஆட்லி அமெரிக்காவுக்குப் பறந்து

சென்றுள்ளார். கொரியா நெருக்கடியையொட்டி அவருக்கும் ட்ரூமனுக்கும் பேச்சு வார்த்தைகள் நடந்திருக்கின்றன.

"மெக்ஆர்தர் செய்த மடத்தனமான தவறு மகத்தான ஆபத்தை உண்டு பண்ணியிருக்கிறது" என்று பிரபல பிரிட்டிஷ் பத்திரிகைகள் வன்மையாகக் கண்டித்திருக்கின்றன.

"கொரியா போரில் அணுகுண்டைப் பிரயோகிக்கும் விஷயம் அமெரிக்காவின் ஆலோசனையில் இருந்து வருகிறது" என்று அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் கூறியிருப்பதிலிருந்து, கொரியா போர் எத்தகைய பயங்கரமான கட்டத்தை அடைந்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

அணுகுண்டைப் பிரயோகிப்பது மேல் நாடுகளுக்கு ஆபத்தாக முடியும் என்று கனடா வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ பியர்சன் எச்சரித்திருக்கிறார்:

"அணுகுண்டைப் பிரயோகிப்பதால் அதிக பலன் ஏற்பட்டு விடாது. அதற்கு மாறாக உலக மக்களின் ஆத்திரத்துக்கும் கண்டனத்துக்கும் அமெரிக்கா இலக்காக நேரிடும். ஆசியா ஜனங்களின் மீது இரண்டாவது தடவையாக அணுகுண்டைப் பிரயோகிப்பதன் மூலம் மேல் நாடுகளுக்கும் கீழ்த்திசை நாடுகளுக்கும் உள்ள உறவு முறிந்து ஆபத்தான நிலைமை ஏற்படும்" என்று கனடா மந்திரி கூறியிருக்கிறார்.

ஜெனரல் மெக் ஆர்தரின் தவறினால் அமெரிக்காவுக்கு மிகவும் சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது; அமெரிக்காவின் வெற்றி, தோல்வியாக முடியும் நிலைக்கு வந்திருக்கிறது. தோல்வியைத் தவிர்ப்பதற்காக அமெரிக்கா அணுகுண்டைப் பிரயோகிக்க முற்படுமாயின் அதனால் உலக மக்கள் பேராத்திரம் அடைவர். உலக நாடுகளின் ஆதரவை அமெரிக்கா தேசம் அடியோடு இழந்து விட நேரும்.

உலக மகா யுத்தத்தைத் தவிர்ப்பதற்காக உருவாக்கப்பட்ட ஐக்கிய நாடுகள் சபையே, அணுகுண்டு மகா யுத்தம் ஏற்படுவதற்குக் காரணமாயிற்று என்ற கெட்ட பெயரும் உண்டாகும்.

அமெரிக்காவையும் உலகத்தையும் ஐக்கிய நாடுகள் சபையையும் இத்தகைய அவல நிலைக்குக் கொண்டு வந்துள்ள மெக் ஆர்தரைப் பிரிட்டன் உள்படப் பல நாடுகளும் கண்டிக்க முற்பட்டிருப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

இப்போது ஏற்பட்டுள்ள மகத்தான நெருக்கடி தீர வேண்டுமாயின் அமெரிக்கா அணுகுண்டு மிரட்டலை அடியோடு கைவிட்டு, சமாதான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஆட்லியின் அமெரிக்கா விஜயம் அத்தகைய முறைகள் உருவாவதற்கு உதவியாக இருக்குமென்று நம்புகிறோம். இல்லாவிடில் அமெரிக்கா உள்பட உலக நாடுகளே, மனித வர்க்கமே உய்ய முடியாத பயங்கர உற்பாதம் ஏற்பட்டு விடக் கூடும்.

நிற்க வேண்டிய இடத்தில் நிற்காத கல்லுளி மங்கன் கலங்கித் தவித்தான். சக்கரவர்த்தி நெப்போலியனுக்குப் பரிதாபமான முடிவு ஏற்பட்டது. சர்வாதிகாரி ஹிட்லர் படு வீழ்ச்சியுற்றார். இன்று தளபதி மெக் ஆர்தரும் உலகத்தைப் படுகுழியின் ஓரத்தில் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார்; என்ன செய்வது என்று ஏங்குகிறார்.

ஜெனரல் மெக் ஆர்தர் நிற்க வேண்டிய இடத்தில் நிற்காததால் ஏற்பட்டிருக்கும் விபரீதம் உலகத்து ராஜ தந்திரிகள், தளபதிகள், - எல்லாருக்கும் ஒரு நல்ல படிப்பினையாகும். சீனாவுக்கும் ருஷ்யாவுக்கும் கூட இது ஒரு படிப்பினைதான். இப்போது வெற்றியடையத் தொடங்கியிருக்கும் சீனாவும் அதற்குப் பக்க பலமான சோவியத் ருஷ்யாவும் மேற்படி எச்சரிக்கையினால் பயனடையுமாக; நிற்க வேண்டிய இடத்தில் நிற்குமாக.

**(கல்கி, டிசம்பர் 10, 1950)**

# "நாங்கள் வீட்டுக்கு வெளியே டீ குடித்துக் கொண்டிருந்தோம்; எங்கள் வீடு தீவிரவாதிகளால் தாக்கப்பட்டது!"

**தீபக் குமார் ஐ.பி.எஸ். இவர்தான் கார்கில் மாவட்ட போலீஸ் சூப்ரின்டென்டன்ட். கடந்த இரண்டு வருடங்களாக கார்கிலில் வேலை. தீபக்கின் மனைவி அனாமிகா, சென்னையில் நபார்டு வங்கியில் அதிகாரியாக இருக்கிறார். சுமார் ஒரு மாத காலம் கார்கிலில் இருந்துவிட்டு ஜூன் இறுதியில் சென்னை வந்திருந்த அனாமிகா, கார்கில் எப்படி இருக்கிறது என்று நம்மிடம் விவரித்தார்.**

**ஊ**ரே வெறிச்சோடிக் கிடக்கிறது. பெரும்பாலான மக்கள், உயிருக்கு பயந்து முப்பது நாற்பது கிலோ மீட்டர் தூரத்திலுள்ள இடங்களுக்குக் குடிபெயர்ந்து விட்டார்கள். எப்போது குண்டு போடுவார்கள் என்று தெரியாத பதற்றமான சூழ்நிலை நிலவுகிறது.

எங்கள் வீடு கார்கில் நகரில் முக்கிய அரசு அலுவலகங்களும், அரசு உயர் அதிகாரிகளுடைய பங்களாக்களும் உள்ள 'பரு' என்ற பகுதியில் உள்ளது. அடுத்த பங்களா, மாவட்டக் கலெக்டருடையது.

ஊர் முழுக்க, தரைக்கு அடியில் பதுங்கு அறைகள் (பங்கர்)தான். பங்களாக்கள் தவிர, மார்க்கெட் போன்ற பகுதிகளிலும் பொதுவான பதுங்கு அறைகள் இருக்கும். மக்கள் பதுங்கு அறைகள் கட்டிக் கொள்ள அரசே கடனுதவிகூட செய்திருக்கிறதாம். (பங்கர் என்பது தரைக்கடியில் பத்தடிக்கு எட்டு அடி அளவில் அறைபோல இருக்கும். குறுகிய வழி மூலம் உள்ளே போகவேண்டும். பாதுகாப்புக்காக மணல் மூட்டைகள் வைக்கப்பட்டிருக்கும்)

மே மாதம் பதினேழாம் தேதி காலை

**– கார்கில் எஸ்.பி. மனைவி பேட்டி**



எங்கள் வீட்டுப் புல்வெளியில் அமர்ந்து நானும் என் கணவரும் டீ குடித்துக் கொண்டிருந்தோம். அப்போது தீவிரவாதிகள் தாக்கியதால் எங்கள் வீட்டின் எட்டு அறைகள் சிதைந்து போயின.

இரண்டு நாளில் மாவட்ட கலெக்டர் பங்களாவும் தகர்க்கப்பட்டது. இதற்கு முன்னாலேயே இன்னும் சில அதிகாரிகளுடைய பங்களாக்களையும் தீவிரவாதிகள், குறி வைத்துத் தாக்குதல் நடத்திக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள்.

இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் இடையிலான கிரிக்கெட் மாட்சில் இந்தியா ஜெயித்தவுடன் கதி கலங்கிப் போய் விட்டேன். நான் பயந்தபடியே நடந்தது. அன்று இரவு முழுக்க குண்டு வெடிக்கிற சப்தம் கேட்டுக் கொண்டே இருந்தது. அந்தச் சுற்று வட்டாரத்தில்... சப்தத்தை வைத்து எண்ணியபோது நூற்று அறுபது முறை தாக்குதல் நடந்திருப்பதாக போலீஸார் மறுநாள் கணக்குச் சொன்னார்கள்.

திடீரென்று ஒருநாள், தீவிரவாதிகள் டெலிவிஷன் டவரைக் குறி வைத்துத் தாக்கினார்கள். பெரும் தீவிபத்தாக அது மாறியது. இவருக்கு நியூஸ் வர, உடனே புறப்பட்டு ஸ்பாட்டுக்குப் போய்விட்டார். தொடர்ந்து குண்டு வெடிக்கும் சப்தம். பதைபதைப்புடன் வீட்டில் நான் தவித்துக் கொண்டிருந்தேன். உணவுப் பொருள்கள், காய்கறி வரத்து கடுமையாக பாதிக்கப்பட்டது காரணமாக ஒழுங்கான சாப்பாடு கிடையாது. இதற்கு முந்தைய வருடங்களில் ஜூலையில் கடும் குளிர்காலம் முடிந்தபின் கார்கில் எத்தனை அற்புதமாக இருக்கும் தெரியுமா? மிதமான வெயில்; ரம்யமான இயற்கைக் காட்சிகள் என்ற அவையெல்லாம் வெறும் கனவாகவே போய்விடுமோ என்று கவலையாக இருக்கிறது!

சந்திப்பு: **மௌலி**

---

காலேஜ் கார்னர் – 4

## முதல் கல்லூரி வகுப்பு அனுபவம் எப்படி?

சென்னை கிறித்துவக் கல்லூரியில் புதிதாகச் சேர்ந்திருக்கும் மாணவி தனலட்சுமியிடம் 'முதல் கல்லூரி வகுப்பு அனுபவம் எப்படியிருந்தது?' என்று கேட்டோம்.

''யாருமே பேச மாட்டேங்கறாங்க. முதல் நாள் சீனியர் ஸ்டூடண்ட்ஸ் காலேஜ் கேம்பஸை சுத்திக் காமிச்சாங்க. முதல் வகுப்புல இங்கிலீஷ் கொஞ்சம் கஷ்டமாத்தான் இருந்துச்சு. தமிழ்லயே படிச்சுட்டு, இங்கிலீஷ்ல புரிஞ்சுக்கறது கொஞ் சம் கஷ்டம்தான். போகப்போக சரியாய்டும்னு நினைக் கிறேன். ஒரு புரொபஸர் எல்லாரையும் நீங்க என்னவா ஆகணும்னு விரும்பறீங்கன்னு கேட்டார். எல்லாரும் சொன் னாங்க. நான் ஊனமுற்றோர் இல்லம், முதியோர் இல்லம் ஆரம்பிக்கப் போறேன்னு சொன்னேன். அதுக்கு அவர், இதுனாலல்லாம் பெரிய அளவுல சமு தாயத்துக்கு நன்மை இல்லை. செடிக்கு கொஞ்சமா தண்ணீர் ஊத்தற மாதிரின் னார். காலேஜ்னாலே ராகிங் இருக் கும்னு ரொம்ப பயந்தேன். அப்படில் லாம் ஒண்ணும் இல்லே. ஆனா, என் பிரெண்ட் ஒருத்தியத்தான் வெறும் டேபிளில் தோசை சுடச் சொல்லி, கோலம் போடச் சொல்லி அழவச் சுட்டாங்க!''

வீரன் பொன்னுச்சாமி சாகக் கிடக்கிறார். இப்போது அவருக்கு வயது அறுபது அறுபத்தைந்து தாண்டியிருக்கும்.

வீரன் பொன்னுச்சாமிக்கு மேலுக்கு சுகமில்லை. அவரது காலங்கள் விடைபெற்றுக் கொண்டன. ஒரு காலத்தில் சினிமாவில் அவர் வில்லன் வேஷம் போட்டால் அப்படிக் கைதட்டுவார்கள். ஹீரோ வரும்போது எப்படிப் பூவும் காகிதமும் திரையை நோக்கிச் சொரியுமோ அதைப் போல வீரன் பொன்னுச்சாமி வரும்போதும் பலத்த கைதட்டலும் ஊளை விசிலும் தியேட்டரையே அதிரடிக்கும்.

ஒருமுறை கதாநாயகனுடன் ஆக்ரோஷமான சண்டை. விசாகப்பட்டினம் கடற்கரையில் ஒரு பெரும் பாறையிலிருந்து வாளுடன் குதிக்க வேண்டும். இயக்குநர் முதல் ஸ்டண்ட் மாஸ்டர் வரை எல்லாரும் அந்தக் காட்சியில் டூப் போட்டுக் கொள்ளலாம் என்று வேண்டிக் கொண்டார்கள். வீரன் பொன்னுச்சாமி கேட்கவில்லை. எப்பவுமே இப்படியான ஆபத்துக்களில் அவருக்கு விருப்பம் அதிகம். தாமே நடிக்க அவர் பிடிவாதம் பிடித்தார். துள்ளி ஆவேசமாய்க் கீழிறங்குகையில் வழுக்கி விட்டது. சப்பையில் சரியான அடி. கண்ணைத் திறக்கவேயில்லை அவர். எலும்பு பிசகி விட்டது. மறுநாள் எல்லா நாளிதழ்களிலும் பிரதான செய்தி இதுதான்.

வீரன் பொன்னுச்சாமியால் திரும்ப நடமாட முடிந்ததே தவிர சண்டைக்காட்சி அது இதுவென்று இனி ஓடியாட ரொம்ப நாளாகும் போலிருந்தது. அதற்குள் ஜனங்கள் அவரை மறந்து விடுவார்கள் என்று அவருக்குப் புரிந்தது. இனி அவர் தம் படங்களைத் தொலைக்காட்சியில் எப்பவாவது போட்டால் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான், என்றிருந்தது.

அவர் தம் வாழ்க்கையில் ஒரு பெரிய தப்புப் பண்ணினார். தம்மை இந்த ஜனங்கள் மறந்துவிட மாட்டார்கள். புறக்கணித்துவிட மாட்டார்கள் என்று நம்பினார் அவர். தம்மையே கதாநாயகனாக வைத்து அவர் சொந்தப்படம் எடுத்தார். அதிலிருந்து மீளவே முடியவில்லை. தம்மை வில்லனாகவாவது போட்டுக் கொண்டிருக்கலாம். அல்லது தமக்கேற்ற வில்லன் பாணி குணச்சித்திர வேஷமாவது போட்டிருக்கலாம். இந்தக் கால பிரபல வில்லன் பாணியிலேயே அதைவிடவும் பிரமாதமாக நான் செய்வேன் பார் என்கிற முயற்சியில் ஈடுபட்டிருக்க வேண்டாம்.

# டேக் ஒன், டேக் டூ

வில்லனாகவும் இல்லாமல் கதாநாயகனாகவும் இல்லாமல் படம் ரெண்டுங்கெட்டானாய் வந்தது.

படம் குப்புற விழுந்ததில் சப்பையில் முன்பு பட்ட அடியைவிடப் பெருத்த அடி; பெருத்த நஷ்டம். எழுந்து கொள்ளவே முடியவில்லை. படத்தை முடிக்க முடியாமல் போட்ட பணத்தையும் எடுக்க முடியாமல், வாங்க ஆளுமில்லாமல்... பத்திரிகைகள் அவரைக் கண்டு கொள்ளவில்லை என்பது அவருக்கு அதிர்ச்சியாய் இருந்தது. அவ்வளவில் மன உற்சாகத்தோடு, உடல் பலமும் வற்றிவிட்டது. அடிக்கடி வியாதி என்று உடம்பைப் பிடுங்க ஆரம்பித்தது. வளமான நாட்களில் ஆடிய ஆட்டங்கள்... திரும்பிக் கொண்டன.

குடிப் பழக்கம் ஆளையே ஆட்டுவித்தது. வீடு, வாசல், தோட்டம் துரவு என்று சுத்த

மாய் விற்றுத் தின்றபின்னும் குடிக்கக் காசு தேடினார். குடி ஒன்றே மாற்றாக இருந்தது. குடிக்கக் காசுக்காக எதையும் செய்கிற அள வில் கீழிறங்கிப் போனார் வீரன் பொன்னுச் சாமி. தன்மீதே அவருக்குக் கோபம் கோப மாய் வந்தது. தனிமையில் மோட்டு வளை யைப் பார்க்கப் படுத்துக் கிடந்தால், ஆத் திரத்துடன் கத்திக் கொண்டு, யாரை யாவது திட்டிக் கொண்டு கிடந்தார்.

அவரது இருபத்தியோராவது வயதில், முறையான திருமணம் என் றாலும், செய்தி வெளியே வராமல்... அது அவரது திரை வாழ்க்கையை

எஸ். சங்கரநாராயணன்



பாதித்து விடும் என்று தயாரிப்பாளர்கள் கவலைப்பட்டார்கள். அவரோடு வந்து சேர்ந்து கொண்டாள் திரிவேணி. எக்ஸ்ட்ரா நடிகை. அவரது படங்களில் எல்லாம் திரிவேணிக்குச் சின்னச் சின்னப் பாத்திரங்கள் வாங்கித் தந்தார். அவளை அவருக்குப் பிடித்திருந்தது. அவளது பல்வரிசை அழகாய் இருக்கும். தயாரிப்பாளர் இஷ்டப்படி அவள் பணிந்திருந்தால் ஒருவேளை முன்வரிசைக் கதாநாயகி அந்தஸ்து அவளுக்கு வந்திருக்கலாம். அவளுக்கும் வீரன் பொன்னுச்சாமியிடம் எப்படியோ ஒரு கிறுக்கு. அவருக்கும் அவள்மீது ஒரு கண் என்று தெரிந்ததும் மற்ற சினிமா ஆட்கள் அவளைத் தொந்தரவு செய்யாமல் ஒதுங்கிக் கொண்டார்கள்.

அவரைக் கல்யாணம் முடித்ததும் அவளது சினிமா ஆசைகள் தணிந்தன. இனி வாழ்க்கை முழுதும் இவருக்கு அனுசரணையாக இருக்கலாம் என்றே தோன்றி விட்டது. குறைந்தபட்சம் அவருடனாவது ஜோடியாக நடித்திருக்கலாம். அவர்களது காதலை ரகசியமாக வைத்திருக்கவே அவர் விரும்பியதில் அதுவும் நிறைவேறாமல் போய்விட்டது.

எல்லாம் நன்றாய் ஓடிக் கொண்டிருந்த வரை ஒரு தொந்தரவும் இல்லை. அவர் வாழ்வு பூமிக்குள் உள்ளமுங்க ஆரம்பித்தது என்பதைப் பற்றிக் கூட இல்லை. அவர் குடிப்பார் என்பது அவளுக்குத் தெரியும், என்றாலும் சொந்தப்படம் என்று இத்தனை பெரிய ஆபத்தை எடுப்பார் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. அவளது எச்சரிக்கைகளை அவர் அலட்சித்தார். 'நான் வீரன் பொன்னுச்சாமி... ரிஸ்க்தான் என் மூலதனம். என் வெற்றியும் அதில்தான்... உண்மையில் சினிமாவில் எந்தப் பெரிய வெற்றிக்குப் பின்னாலும் இந்த ரிஸ்க் இருக்குடி கண்ணு' என்று அவர் குழைந்தார். அவரை அதைரியப்படுத்த, தட்டிக் கேட்க அவளுக்குத் தெரியவில்லை. பயமாய், ரொம்ப பயமாய் இருந்தது. அவர் கண்களின் அந்த வெறி... ஒருவேளை இவர் ஜெயிக்கலாம் என்று ஏனோ நம்பினாள்.

ஆனால் காலம் அவரை அரைத்துச் சக்கையாய்க் கீழே எறிந்தது. வெறும் எலும்புக்கூடாய் – படுத்த படுக்கையாய்க் கிடக்கிற கணவரைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு மனசு தாளவில்லை. கையில் காதில் இருப்பதை எல்லாம் விற்றாகி விட்டது. தாலிக்கொடி உட்பட; சொந்த பங்களாவிலிருந்து. அவர்கள், வாடகை கட்டுப்படியாகாமல் வீடு வீடாக மாற வேண்டியிருந்தது. முன்னதைவிட அடுத்த வீடு சிறியது.

பழைய சிநேகிதர்களை மனத்தில் வைத்துக் கொண்டு அவள் திரும்பவும் சினிமாவில் நடிக்க வந்தாள். கல்யாணமானவள். திரையுலகம் மறந்த முகம். யாராவது நினைவு வைத்துக் கொண்டு, அதுவும் பரிதாபப்பட்டு, சிறிய சிறிய பாத்திரங்கள் தந்தால் உண்டு. வசனம் பேசினால் நல்லது. வெறுமனே கூட்டத்தில் தலைகாட்டினால் ஒரு ரேட். வசனம் பேசினால் ரேட் அதிகம். அதற்கு ஏஜெண்ட் கமிஷனும் அதிகம்.

வாழ்க்கைதான் இப்படி ஆகிப் போனது என்றால், வயது அடிப்படையில் அமையும் பாத்திரங்களும் அப்படியே அமைந்தன. சோகமயமான, வயதான பாத்திரங்கள். அம்மாவை வைத்துக் கொள்ளாத பிள்ளை, 'அம்மாவைத் துரத்தி' அனுப்பி விடுகிற பிள்ளைகளுடன் பாத்திரங்கள். அவள் அம்மா அல்ல, அதற்கு ஒரு காலத்திய ஹீரோயின்கள் வரிசையில் நிற்கிறார்கள்... அந்த அம்மாக்கள் கோவிலுக்கு வந்து திரிவேணியிடம் தன் பிள்ளை பற்றி முறையிட்டு அழுவார்கள். அவள் தலையாட்டிக் கேட்டுக் கொள்ள வேண்டும். 'டயலாக் எதுனாச்சும் குடு சார்' என்று திரிவேணி கேட்டுக் கொள்வாள். அவள் திரையில் எதுவும் நடித்தால் கூட ஒரு காலத்திய ஹீரோயின் அம்மா எரிச்சல் பட்டு 'இந்தம்மா ஏன் இவ்வளவு எக்ஸ்பிரஷன் தர்றாங்க?... அவங்களை அடக்கி வாசிக்கச் சொல்லுங்க' என்று கண்டித்தார்கள். அவர்களுக்கும் கோபத்தைக் காட்ட ஆள் வேணாமா?

வீரன் பொன்னுச்சாமிக்கு இப்போதெல்லாம் பொழுது குளிர்ந்தாலே ஒரு இழுப்பு வந்தது. விடாத ஓயாத இழுப்பு. மூச்சுவிட முடியவில்லை. இருமல் வந்தால் அடங்குவதே இல்லை. துரத்தித் துரத்தி புதுசு புதுசாய் அலை அலையாய்த் தொடர் இருமல். மருந்துகள் பிரயோஜனப்படவில்லை. உட்கார, படுக்க எதற்கும் முடியாமல் ஒரு நிலைகொள்ளாத தவிப்பு. அவரைத் தனியே விட்டு விட்டுப் போகவே திரிவேணி பயந்தாள். அவசர ஆத்திரம் என்று தண்ணி கேட்டால் கூட ஆள் வேணுமே என்றிருந்தது.

அவளுக்கு எப்போதுமே கணவரிடம் மரியாதை உண்டு. இந்த வாழ்வு அவர் தந்தது. நடிகர்களில் அவர் உச்சத்தைத் தொட்ட போதும் அவளிடம் அவர் காட்டிய பிரியம் மறக்க முடியாதது. எத்தனை பெரிய விஷயம் இது, என அவள் மனம் நெகிழும். அரசல்

புரசலாய் அவர் படப் பிடிப்பிலும் வெளியூர்களிலும் வேறு வேறு பெண்களிடம் பழகுவது அவள் காதுக்கு வரும் என்றாலும் அவர் மனத்தில் அவளுக்கான இடம் வெறும் உடல் சார்ந்தது அல்ல என அவள் அறிவாள். அவருக்கே தெரியாமல், அவளிடமும் சில 'நெறிசார்ந்த' இழப்புகள் உண்டுதான். அது அவள் மனசுக்கு மாத்திரமே தெரிந்தவை. அவரைக் காதலிக்க ஆரம்பித்ததும் அவள் மாறிப்போனாள்.



''நான் எதையுமே யோசனை செஞ்சிட்டுத்தான் செய்வேன்!''

''அதுக்காக நான் நேத்து சொன்ன ஜோக்குக்கு இன்னைக்கு வந்து நீங்க சிரிக்கறது கொஞ்சங் கூட நல்லால்லே!''

– சேலம்
வே. பாபு

நோயுடன் அவர் போராடும்போது அவள்தான் எத்தனை துன்பப்பட்டாள். ஒவ்வொரு முறையும் மருந்துகள் என்றும் டாக்டர் என்றும் செலவு கட்டற்று இருந்தது. கையில் காதில் கழுத்தில் பொட்டுத் தங்கம் இல்லை. என்ன செய்வது? ஏஜெண்டைப் போய்ப் பார்த்தாள். ம் ம்... என்கிறான் அலட்சியமாக. 'ஒ வயசுக்கு ஏத்தாப்ல கதைல எதுனாக் கேரக்டர் வரவேணாமா? சும்மா தொந்தரவு செஞ்சா எப்பிடி?' என்று எரிந்து விழுகிறான். அவன் சொல்வதிலும் நியாயம் இருந்தது. 'நீ என் பிள்ளை மாதிரி. ரொம்பக் கஷ்டம், அதான்... ஞாபகம் வெச்சிக்க. ஒரு வார்த்தை சொல்லி வுடு. ஓடியாந்திருவேன். என்ன?' என்று அசட்டுச் சிரிப்புடன் அவள் முகத்தைப் பார்க்கிறாள் திரிவேணி.

இலேசான தூறல். வீரன் பொன்னுச்சாமிக்கு அதுவே தாளவில்லை. இழுப்பு அதிகமாகி விட்டது. 'குளிருது, குளிருது' என்றார். இருக்கிற கந்தல் கிழிசல் எல்லாம் போர்த்தியாகி விட்டது. குளிர் தாளாமல் உடம்பு நடுங்குகிறது. நல்ல ஜுரம் இருக்கும் போலிருந்தது. நெஞ்சை நீவி விட்டபோது அவர் அடக்க மாட்டாமல் இருமி அவள் கையெல்லாம் சளி. பரவாயில்லை என்று புடைவையில் துடைத்துக் கொண்டாள். டாக்டரைக் கூட்டி வரலாம் என்றால் கையில் சுத்தமாகக் காசில்லை. என்ன செய்ய என்று திகைப்பாய் இருந்தது. அழுகையாய் வந்தது.

இந்த மழைக்கு ஷூட்டிங் இருக்காது. போய் ஏஜெண்டைப் பார்க்கவும் வழியில்லை. திரும்பி அவரைப் பார்த்தாள். ஏனோ பயமாய் இருந்தது. உதவிக்குக் கூட இங்கே யாருமில்லை. பிள்ளை குட்டி என்று பிறக்கவில்லையே என்று ஏக்கமாய் இருந்தது. அந்த மட்டும் இல்லாததே நல்லது என்றும் இருந்தது.

மனசில் ஏனோ ஒரு பயம், இத்தனைநாள் இல்லாத படபடப்பு வந்தது. உடம்பே நடுங்கியது. தனியே அந்த அறையில் இருக்கவே பயமாய் இருந்தது. அவர் முகம் அந்த வேதனையைப் பார்க்கவே முடியவில்லை. உள்ளங்காலைப் பரபர வென்று தேய்த்து விட்டாள். கையில் பொட்டுப் பணமில்லை. கடவுளே, இப்போது இந்த மழையை நிறுத்து. ஒரு ஷூட்டிங் என்று ஏஜெண்ட் வந்து கூப்பிட மாட்டானா என்றிருந்தது.

'பெரியம்மா?' என்று வாசலில் குரல். பரபரப்புடன் வாசலுக்குப் போனாள். 'ஒரு படக் கம்பெனி, கூப்பிடறாங்க' என்று வந்து நின்றான் ஏஜெண்ட். அவளால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. கண்ணைத் துடைத்துக் கொண்டு 'ஒரே நிமிஷம்ப்பா. வந்துர்றேன்' என்று உள்ளே போய்க் குங்குமம் வைத்துக் கொண்டவள், 'கடவுளே வசனம் வர்ற காட்சியா இருக்கணும்' என்று வேண்டிக் கொண்டாள். திரும்பிக் கணவனைப் பார்த்தாள். அவளையே பார்த்தபடி இழுப்பில் தவித்துக் கொண்டிருந்தார் வீரன் பொன்னுச்சாமி.

"நான் போயிட்டு வந்திரட்டுமா?" என்று கிட்டே வந்து நெஞ்சை நீவியபடி கேட்டாள்.

"ஹூம்" என்றார் அவர் சனிக்குரலில்.

''சீக்கிரம் வந்திருவேன்... தைரியமா இருங்க, வந்ததும் டாக்டரப் பாக்கலாம்...''

"ஹூம்."

"பெரியம்மா. நேராச்சி..."

"வந்திட்டேம்ப்பா..." என்று வெளியிறங்

## காலேஜ் கார்னர் : 5

**"ஈவ் டீஸிங் இப்பவும் நடக்குதா?"** என்று எத்திராஜ் மகளிர் கல்லூரியின் பவித்ரா நடராஜன் (பிரஸிடெண்ட்), ராஜேஸ்வரி (வைஸ் பிரஸிடெண்ட்), வினுதா (ஜாயிண்ட் வைஸ் பிரஸிடெண்ட்), நிஷா, அன்புமதி ஆகியோரிடம் கேட்டோம்.

"சரிகா ஷா மேட்டருக்கு அப்புறம்






போலீஸ் ப்ரொட்டக்ஷன் ஜாஸ்தியா இருக்கு. ஒவ்வொரு காலேஜ் வாசல்லயும் போலீஸ் கம்ப்ளெய்ண்ட் பாக்ஸ் இருக்கு. ஆனாலும் இப்பவும் காலேஜுக்கு வெளியே ஈவ் டீஸிங் நடக்கத்தான் செய்யுது. என் ரிலேடிவ் ஒருத்தி காயிதே மில்லத்ல படிக்கறா. காயிதே மில்லத் கிட்ட ஈவ் டீஸிங் நடக்கறப்போ அந்த இடத்துல போலீஸ் இல்லாம, எங்க காலேஜ்கிட்ட நிக்கற போலீஸ் கிட்ட வந்து சொல்லியிருக்கா. அதுக்கு போலீஸ் சொன்ன பதில், "எங்களுக்கு டூட்டி எத்திராஜ் காலேஜ்கிட்டதான். அங்கேல்லாம் வர முடியாது." எப்படியிருக்கு பாருங்க போலீஸ் ப்ரொட்டக்ஷன்?"

கினாள்.

மழை விடுகிற மாதிரி இல்லை. நல்ல வேளை இந்த மழையிலும் படப்பிடிப்பு நடத்துகிறார்களே என்றிருந்தது. வீடு தேடி அவசரம் என்று ஆள் வந்தது நல்ல விஷயம்.

"காலையே சொல்லிருக்கலாமே ராம்தாஸ்?" புடைவை கிழிந்ததைத் தெரியாத அளவில் போர்த்திக் கொண்டபடி கேட்டாள். மழையில் நனைந்தபடி போவதைத் தவிர வேறு வழியில்லை.

"ஐய, அந்த லலிதாங்கி தெரியும்ல? மகாரவுக புடிச்ச பொம்பள... அவ சின் இன்னிக்கு... அந்தம்மா வரல... சரி டூப் போடலான்னிட்டுக் கேட்டாங்க."

"சரி சரி."

லலிதாங்கி நடிக்கிற காட்சின்னா வசனம் இருக்கலாம். என நினைக்கவே மகிழ்ச்சியாய் இருந்தது. வீடு திரும்பும்போது தைலம் எதாவது வாங்கிப் போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள். என்ன காட்சியாக இருக்கும் தெரியவில்லை. எப்படியும் முகம் தெரியாது. நடிக்க சிரமப்பட வேண்டாம், என்றிருந்தது. ஒரே டேக்கில் முடிந்து விட்டால் நல்லது... சில சமயம் நாம நல்லா நடிச்சாலும், கூட நடிக்கிற ஆர்டிஸ்ட் சொதப்பிருவாங்க. பெரிய நடிகர்கள் சொதப்பிட்டா, நம்மளத் திட்டறதும் உண்டு.

அவரைத் தனியே விட்டு விட்டு வந்திருக்கிறோம்... என நினைக்க ஒரு கணம் திகிலாய் இருந்தது. வேறு வழியில்லை. பாவம் இருமினால் அவரை உயர்த்திப் பிடித்துக் கொள்ளக் கூட ஆள் கிடையாது. வெந்நீர் தண்ணி போட்டு வைத்துவிட்டு வந்திருக்கலாம். இதற்கே நேரமாகி விட்டது என அவன் விரட்டிய விரட்டலில் அப்படியே கிளம்பி விட்டாள்.

அவளைப் பார்த்ததுமே இயக்குநர் "இந்தம்மாதான் கெடச்சாங்களா?" என்றது பயமாய் இருந்தது. "என்ன சீன்னாலும் பண்ணுவேன் சார்" என்று புன்னகைத்தாள் நம்பிக்கையுடன். "போயி அந்தக் கட்டில்ல படு..." என்றார் இயக்குநர். இன்னிக்கும் வியாதிக்காரி வேஷம்தான் போலிருக்கிறது.

நெற்றியில் பெரிய சுமங்கலிப் பொட்டு வைத்தார்கள். போய்க் கட்டிலில் படுத்ததும் உடலைப் போர்த்தினார்கள். கால் விரல்களைச் சேர்த்துக் கட்டினார்கள். மூக்கில் பஞ்சடைத்தார்கள். ஒரு அப்பா நடிகர் உள்ளேயிருந்து பாய்ந்து வந்தார். "இந்தத் தள்ளாத வயசுல என்னைத் தவிக்க விட்டுட்டுப் போயிட்டியா மரகதம்..." என்று பெருங்குரலில் ஆரம்பித்தார்.

கண்ணை மூடிப் படுத்திருந்த அவளுக்குத் தன் கணவர் நினைவு வந்தது. ●

# த.மா.கா.வின் முடிவு வரவேற்கத்தக்கதுதானே?

● **எஸ். இரவிச்செல்வன், கல்பாக்கம்.**

**? வாஜ்பேயி இடத்தில் அத்வானி இருந்தால் இந்நேரம் பாகிஸ்தானுடன் இந்தியா போர் தொடுத்திருக்கும் என்று கூறுகிறார்களே?**

! போர் என்று அறிவித்திருக்க மாட்டார். ஆனால் எல்லை கடந்து போய் பாகிஸ்தானியர் மற்றும் கூலிப் படையினரின் 'சப்ளை பாயிண்டுகளை' விமானத் தாக்குதலில் உட்புகுந்து அடிக்க உத்தரவு பிறப்பித்திருப்பார். (அது உலக நாடுகளால் ஆக்கிரமிப்பாகக் கருதப்படாது.) இவ்வாறு செய்யாமல் எல்லைக் கோட்டுக்கு உள்ளேயே இருந்து விமானப் படையும் தரைப்படையும் செயல்படுவது வெற்றியை ஒத்திப் போட்டிருக்கிறது; கடினமாக்கியும் உள்ளது.

● **கே.வி. ராமன், சென்னை - 73.**

**? ராஜ்ய சபாவைக் கூட்டி கார்கில் பிரச்னையை இந்நேரத்தில் விவாதிப்பது சரியா? தங்கள் கருத்து என்ன?**

! ராஜ்ய சபை கூடினால் அங்கு கட்சிக் கண்ணோட்டத்தில் வார்த்தைகள் தடிக்க, கார்கில் விஷயத்தில் நாடு ஒன்றுபட்டுச் செயல்படவில்லை என்ற கருத்து உருவாக வாய்ப்பு உண்டு. எனவே அதைத் தவிர்ப்பதே நல்லது. ஆனால், அதே சமயம் அனைத்துக் கட்சிகளிடமும் உண்மை நிலைகளை விளக்கி, நம்பிக்கையூட்டி, யோசனைகளையும் பெறுவதில் தவறில்லை. இது தொடர்பான முதல்வர்கள் மாநாடும் சரியானதே. அனைத்துக் கட்சி கூட்டத்தைப் புறக்கணித்துவிட்டு, 'ராஜ்ய சபை கூடவில்லையே' என்று சோனியா புலம்புவது அரசியல் முதிர்ச்சி இன்மையைக் காட்டுகிறது.

● **ஆர். ராஜதுரை, சீர்காழி.**

**? சென்னை மாநகரில் முதன் முதலாகப் பாதாளச் சாக்கடைத் திட்டத்தை வடிவமைத்துச் செயல்படுத்திய ஆங்கிலேயர் மேட்லி படத்தை சென்னைக் குடிநீர் வாரிய தலைமை அலுவலகத்தில் அமைச்சர் கோ.சி. மணி திறந்து வைத்து சரியா?**

! மிகவும் சரி! பாதாளச் சாக்கடை வசதியில்லாத சென்னையை இன்று கற்பனை செய்து பாருங்கள். நகரம் நரகமாயிருக்கும்! ஆனால் இன்னமும் பாதாளச் சாக்கடை அடைப்புகளை நீக்க, மனிதர்களைச் சாக்கடைக்குள் இறங்கச் செய்கிறார்கள். இந்த அவலத்துக்கு முடிவுகட்ட, பாதாளச் சாக்கடை அமைப்பு



• ஏது பணம்?







• மறக்க வேண்டாம்!

கூடிய கழிவுநீர் பம்பிங் வசதியும் இன்னும் நவீனப்படுத்தப்பட வேண்டும். பராமரிப்பு மேம்படுத்தப்பட வேண்டும். படத்தைத் திறந்து வைத்த அமைச்சர் இதையும் நினைவு கொள்ளட்டும்.

● **கே.ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.** ❑

**? டான்சி நில வழக்கில் குற்றப் பத்திரிகை அளிக்கப்பட்ட பிறகும் கூட வழக்கை எவ்வளவு இழுத்தடிக்க முடியுமோ அவ்வளவு இழுத்தடிக்க இன்னும் பல முயற்சிகளை மேற்கொண்டு வருவது நீதி மன்றங்கள் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையைக் குறைக்கத்தானே வழிவகுக்கும்?**

! ஜெயலலிதா வழக்குகளை வேண்டுமென்றே தாமதப்படுத்துகிறார் என்பது எல்லா தரப்பு மக்களுக்கும் ஒருவாறு புரிந்திருப்பதால்

**❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :**
**கே.ஆர். உபேந்திரன்,**
**76, பிலோமினா நகர் முதல் தெரு,**
**என்.கே. ரோடு, தஞ்சாவூர் - 613 006.**

அவர் பேரில்தான் நம்பிக்கை குறையும். சட்டம் ஏன் இதற்கு இடங் கொடுக்கிறது என்று யோசிக்கிறவர்களுக்கு, சட்டம் நிரபராதிகள் தண்டிக்கப்பட்டு விடக்கூடாது என்ற உயர் நோக்கில் வகுக்கப்பட்டிருப்பது தெரியும். அந்த உயர் நோக்கை மீண்டும் மீண்டும் கொச்சைப்படுத்த ஜெயலலிதா எவ்வளவு செலவழிக்க வேண்டியிருக்கும்! அதற்குப் பணம் எங்கேயிருந்து வருகிறது? இதைத்தான் தராசு சுட்டிக் காட்டி வாசகர்களை எச்சரிக்க விரும்புகிறார்!

● **'ஸ்ரீவி' நாயகன், ஸ்ரீவில்லிபுத்தூர்.**

**? தமிழகத்தில் எல்லா ஊர்களிலும் இலக்கியவாதிகள் கல்கி நூற்றாண்டு விழா கொண்டாடுவதைப் பற்றி உங்கள் கருத்து என்ன?**

! பாரதியாருக்கு அடுத்தபடியாக உலகளாவிய தமிழர்கள் தாமாக முன் வந்து, மனமுவந்து விழா எடுப்பது கல்கிக்குத்தான். அவர் எழுத்தின் சக்திக்கு மட்டுமின்றி அவருடைய பன்முக உயர்பண்புகளுக்கும் கிடைத்திருக்கும் பாராட்டு இது.



• உலகளாவிய...



• ... விழாக்கள்!

கெட்டுக்கு ஆற்றியுள்ள அற்புதமான கடந்த காலப் பணிகளை நாம் குறைத்து மதிப்பிடுவதாக ஆகாது.

● **ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.**

**? அ.தி.மு.கவுடன் கூட்டணி இல்லை என்ற த.மா.காவின் முடிவு வரவேற்கத்தக்கது தானே?**

! சி.எஸ் கூட மதவாதத்தையும் ஊழலையும் ஒருங்கே எதிர்க்கிற த.மா.காவின் துணிவையும் அதன் தலைவருடைய திண்மையையும் வாழ்த்தியிருக்கிறார். ஆனால், அரசியல் என்பது கொள்கைப் பற்று மட்டும் அல்ல. அதில் ராஜதந்திரமும் உள்ளடக்கம். மூப்பனாரின் இன்றைய நிலையில் ராஜதந்திரமும் உள்ளடக்கமா இல்லையா என்பது சோனியாவின் இறுதி முடிவையொட்டித்தான் அமையும்.

● **பி. நடராஜன், அன்னூர்.**

**? இந்திய அணியின் கேப்டன் பதவியிலிருந்து அசார் விலகுவாரா? விலக்கப்படுவாரா?**

! எப்படியோ போய்ச் சேர்ந்தால் சரி. High time! இதனால் அவர் இந்திய கிரிக்



• ஆளுக்கொரு....



• .... அணுகுமுறை!

● **எஸ். நாராயணன், சென்னை - 92.**

**? 'குமரி முனையில் காமராஜர் மணிமண்டப அடிக்கல் நாட்டு விழாவில் கலந்து கொள்ளாதவர்கள் தமிழ் நாட்டில் எப்படி காமராஜர் ஆட்சி அமைக்கப் போகிறார்கள்?' என முதல்வர் கூறியுள்ளது சரிதானே?**

! முதல்வர் இப்படி ஒரு கமெண்ட் அடிக்க த.மா.கா. வாய்ப்பளித்திருக்க வேண்டாம். என்ன மனவேற்றுமைகள், ஆதங்கங்கள் இருந்திருந்தாலும் இந்தக் கல்யாண நிகழ்ச்சியில் கலந்து கொண்டிருக்க வேண்டும்.

● **ப. இராம முருகன், சிவகங்கை.**

**? சினிமாக்காரர்களுக்கு மனநோய் என்கிறாரே பாலகுமாரன்...?**

! பொத்தாம்பொதுவான கருத்துகளை இப்படி வெளியிடுவது பாலகுமாரனுக்கு கௌரவம் சேர்க்காது. அவரும் சினிமாவில் பிழைப்பவர் என்கிற வகையில் கடும் கண்டனங்களை எதிர்கொள்ள வேண்டி வரும். ஷங்கர் திருமணத்தில் அவர் சாம்பார் பக்கெட் தூக்கியது, குஞ்சுமோன் காலில் விழுந்தது என இப்போதே 'ஸ்கூட்'கள் வர ஆரம்பித்து விட்டன.

● **ச. தங்கமணி, சத்திரப்பட்டி.**

**? எல்லைப் போர் விஷயத்தில் தங்களை மிகவும் உணர்ச்சிவசப்பட வைத்த சம்பவம் எது?**

! லெஃப்டினன்ட் கர்னல் நடராஜ் விஜயராகவனின் நல்லடக்கத்துக்குக் குவிந்த சராசரி மக்கள் கூட்டம் நெகிழ்த்தியது என்றால், இறந்து போனதாக எண்ணி அவர் நெருங்கிய ஒரு பாகிஸ்தான் தீவிரவாதி, காத்திருந்து ஏமாற்றி அவரைச் சுட்டுத் தள்ளியது அதிர்ச்சியடையச் செய்தது. பாகிஸ்தான் நடத்துவது அதர்ம யுத்தம். அதில் கையாள்வதும் அதர்ம யுக்திகள்; இதுதான் நம் வேதனையைப் பல்லாயிரம் மடங்கு அதிகமாக்குகிறது.

# திருமதி ஒய்.ஜி.பி

எங்கள் குடும்பத்துக்குச் சொந்தமான ஒரு பெரிய வீடு சென்னை எழும்பூரில் இருந்தது. பெரிய ஹால், நிறைய ரூம்கள் என்று ரொம்ப வசதியான வீடு அது. அங்கே, என் பெரியப்பா ஒருவர், அவரை முத்தண்ணா என்றுதான் குறிப்பிடுவார்கள். ஜகன்னாத பக்த ஜன சபா என்று ஒரு சபாவை நடத்தி வந்தார். அந்த சபாவுக் கென்று தனி ஆடிடோரியம் கிடையாது. எங்கள் வீட்டு ஹால்தான் ஆடிடோரியம். அங்கேதான் கச்சேரியாகட்டும், ஹரி கதா காலட்சேபமாகட்டும், டான்ஸ் புரோகிராமாகட்டும் எல்லாம் நடைபெறும். அங்கே அந்தக் காலத்தில் பிரபலமாக விளங்கிய வித்வான்கள், நடனமணிகள் என்று பலரும் வந்து நிகழ்ச்சிகள் நடத்தியிருக்கிறார்கள்.

அப்படி ஒரு ஞாயிற்றுக்கிழமை, சாயங்கால நேரம். ஹாலில் ரசிகர்கள் கூட்டம். கதாகாலட்சேபம் செய்து மிகப் பிரபலமாக விளங்கிய பன்னிபாய் சுவாரசியமாக ஹரி கதை சொல்லிக்கொண்டிருந்தார். அரங்கத்தை ஒட்டிய வீட்டினுள்ளே இருந்த என் அம்மாவுக்குப் பிரசவ வலி எடுக்க ஆரம்பித்தது. அந்தக் காலத்தில் எல்லாம், பிரசவத்துக்கு ஆஸ்பத்திரிக்கு அழைத்துக்கொண்டு போகிற பழக்கம் ஏது?

வீட்டினுள் ஒரு அறையே லேபர் வார்டு ஆனது. என் அம்மாவுக்கு சுகப்பிரசவம். பெண் குழந்தை. இந்தக் குழந்தைக்கு ராஜ லட்சுமி என்று லட்சுமிகரமான பெயரைச் சூட்டினார்கள். அந்த ராஜலட்சுமி வேறு யாருமில்லை; நானேதான்!

ஹாலிலே ஹரி கதை நடந்து கொண்டிருக்கிற போது, அறைக்குள்ளே என் அம்மா என்னைப் பிரசவித்ததாலோ என்னவோ, எனக்கு ஆரம்ப காலம் முதலே கலைகளில் ஒருவித ஆர்வமும், ஈடுபாடும் இருந்தது.

அந்தக் காலத்தில், பெண் குழந்தை என்றாலே பாட்டு, டான்ஸ் எல்லாம் சொல்லித் தருகிற வழக்கம் இருந்தது. ஆனால் நான் பாட்டோ, டான்ஸோ கற்றுக் கொள்ளவில்லை.

திருச்சியில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாளில், வயலின் கற்றுக் கொண்டேன். ஆனால் அதில் எனக்கு அதிக ஆர்வம் ஏற்படவில்லை. தவிர, திருச்சியில் நவாப் ராஜ மாணிக்கம் பிள்ளை போன்றவர்களின் நாடகங்கள் அடிக்கடி நடைபெறும். என் அப்பா, என்னை அந்த நாடகங்களுக்கு அழைத்துக் கொண்டு போவார். இப்படியாக எனக்கு நாடகங்கள் மீது ஒரு வித ஆர்வம் ஏற்பட்டது.

அதேபோல, ஒய்.ஜி.பி பக்கம் எடுத்துக் கொண்டால், அவருடைய சகோதரர் ஒய்.ஜி. துரைசாமி, மிகப் பெரிய கலா ரசிகர். அவர்களுடைய சகோதரி ஸ்ரீமதிக்கு பரத நாட்டியம் தெரியும். நன்றாகப் பாடுவார். தவிர நன்றாக ஓவியம் வரைவார். ஒய்.ஜி. துரைசாமி தாமே முன்னின்று பல முன்னணி வித்வான்களை அழைத்து வந்து, கச்சேரிகள் செய்ய வைப்பார். கர்நாடக இசை வித்வான்கள் மட்டுமல்லாமல், வடக்கே இருந்து, ஹிந்துஸ்தானி இசைக் கலைஞர்களையும், நடனக் கலைஞர்களையும் வரவழைத்து, நிகழ்ச்சிகளை நடத்துவார்.

வரும் கலைஞர்களைத் தங்கள் வீட்டிலேயே தங்க வைத்து, அபாரமாக உபசரிப்பார். அங்கேதான் நான் பல வட இந்தியக் கலைஞர்களின் நிகழ்ச்சிகளைக் கண்டு, கேட்டு ரசித்தேன். சோனால் மான்சிங், படேகுலாம் அலிகான், பிஸ்மில்லா கான் என்று பெரிய பட்டியலே போடலாம்.

ஒஞ்ஞாளைப், பூகோளு

அண்ணா துரைசாமிக்கு ஈடுபாடு இசை, நாட்டியம் என்றால், தம்பி ஒய்.ஜி.பிக்கு நாட்டம் நாடகத்தில். அவர் டெல்லியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த நாட்களிலிருந்தே நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்தார். நாங்கள் டெல்லியில் இருந்த சமயம், ஒய்.ஜி.பி ஒரு நாடகத்தில், என் அப்பாவையும் நடிக்க வைத்தார். ஒரு காட்சியில், என் அப்பாவை, கை ரிக்‌ஷாவில் வைத்து இழுத்துக்கொண்டு வருவார் ஒய்.ஜி.பி. அந்தக் காட்சி எனக்கு



படம்: ஸ்ரீஹரி

இன்னமும் நன்றாக நினைவில் இருக்கிறது. ஒய்.ஜி.பி கூட, அதைப் பற்றி பல நாட்களுக்கு கேலியாய்க் குறிப்பிட்டதுண்டு.

இரு கலைக் குடும்பங்களைச் சேர்ந்த நாங்கள் திருமணம் செய்து கொண்ட பின் கேட்பானேன். ஒய்.ஜி. மகேந்திராவின் முதல் பிறந்த நாளன்று,

# 'இசை, நடனம்!

சென்னையைச் சேர்ந்த பல்வேறு இசை, நாட்டியக் கலைஞர்களும் வந்திருந்து எங்களை கௌரவித்தனர். எம்.எஸ்., பாலசரஸ்வதி இரண்டு பேரும் வந்திருந்தபோது, அவர்களை ஒரு பாட்டு பாடும்படி கேட்டுக்கொண்டோம். இரண்டு பேரும் இணைந்து பாடிய பாட்டை அத்தனை பேரும் கேட்டு ரசித்தார்கள்.

அப்போது நான் ருக்மணி தேவியின் 'மெட்ராஸ் நாட்டிய சங்க்' என்ற அமைப்பிலும் இருந்தேன். அந்த அமைப்பு, அகில உலக அளவில் புகழ் பெற்ற பன்னாட்டு இசைக் கலைஞர்களை வரவழைத்து இங்கே நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்யும். இது ஒரு புறம் என்றால், ஒய்.ஜி.பி.யும் பட்டு என்கிற அவருடைய நண்பரும் சேர்ந்துகொண்டு, சொந்தமாக யுனைடட் அமெச்சூர் ஆர்ட்ஸ் என்ற நாடகக் குழுவின் மூலம் நாடகம் போட்டனர். தவிர, நேஷனல் ஆர்ட் கம்பைன்ஸ் என்ற புதிய அமைப்பை கிருஷ்ணமணி என்ற இன்னொரு நண்பருடன் சேர்ந்து ஆரம்பித்தார். இது எதற்காக? மற்றவர்களுடைய நாடகங்களை, அதிலும் குறிப்பாக, தென் சென்னை சபா ரசிகர்கள் பார்க்க வாய்ப்பு இல்லாத நாடகங்களை, அவர்கள் பார்த்து, ரசிக்க ஒரு வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்கும் நோக்கத்துடன்தான் இந்த புதிய அமைப்பை உருவாக்கினார்கள்.

மத்திம வியா யோகா என்று ஒரு சமஸ்கிருத நாடகம். ருக்மணி தேவிக்குப் பின் 'மெட்ராஸ் நாட்டிய சங்க்'கின் பொறுப்பேற்ற டாக்டர் ராகவன் என்ற பிரமாதமான கலா ரசிகர், சிருஷ்டிகர்த்தா உருவாக்கியது. சென்னை மியூஸியம் தியேட்டரில் மரங்கள் அடர்ந்த திறந்த வெளியில், ஸ்பெஷல் லைட்டிங் எஃபெக்ட்டுடன் நடத்தப்பட்டது. பஞ்ச பாண்டவர்களின் வனவாசத்தின்போது பீமன் - இடும்பி திருமணம் அவர்களுக்கு மகனாக கடோத்கஜன் பிறப்பது பற்றின கதை. அங்கே இருந்த மரங்களையும் கதாபாத்திரங்களாக்கி விட்டார். மிக அற்புதமான ஒரு முயற்சி

''அந்த எதிர்க்கட்சிக் காரங்க அரசாங்கத்திடம் ரொம்பவே எதிர்பார்க்கறாங்க!''

''என்ன விஷயம்?''

''எங்கள் தலைவியை விட அதிக அளவில் சொத்து வைத்திருக்கும் 'பில் கேட்ஸ்' மீது ஏன் வழக்குப் போடவில்லைன்னு கொதிச்சுப் போய் கேள்வி கேட்டிருக்காங்களே!''

— சீர்காழி ரேவதி



அது. ரசிகர்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றது.

மேலும் மெநா. சங்க் சார்பில் அரசு உதவித் தொகையுடன் ஒரு நடிப்புப் பயிற்சி பள்ளியும் நடத்தப் பட்டது. அந்த மாணவர்களையும் வைத்து நாடகங்கள் போட்டோம். அப்போது போட்ட ஒரு நாடகம் 'டீ ஹவுஸ் அஃப் தி ஆகஸ்ட் மூன்'. அதிலே முக்கிய பாத்திரத்தில் நடித்தவர் யார் என்று சொன்னால் ரொம்ப ஆச்சரியப்படுவீர்கள்! ஆம்! ஜெயலலிதா! ஜப்பானியப் பெண் போல வந்த ஜெயலலிதாவைப் பார்க்க ரொம்ப அழகாக இருக்கும். அந்த நாடகத்தில் நடித்த இன்னொருவர் சோ!

சென்னை வால்டாக்ஸ் ரோடில்தான் எம்.ஆர். ராதாவின் ரத்தக் கண்ணீர் நாடகம் போடுவார்கள். அதை விட்டால், தமிழ்நாடு முழுக்க பல்வேறு ஊர்களிலும் போடுவார்கள். ஆனால், தென்சென்னை சபாக்களில் ரத்தக் கண்ணீர் மேடை ஏறினது இல்லை. காரணம், அந்தப் பகுதி கலை ரசிகர்களுக்கு எம்.ஆர். ராதா நாடகம் எல்லாம் பிடிக்காது என்ற ஒரு எண்ணம் பரவலாக இருந்ததுதான். ஒய்.ஜி.பி அந்த மாயையை உடைக்க முடிவு செய்தார் மைலாப்பூர் ஆர்.ஆர். சபாவில், எம்.ஆர். ராதாவின் ரத்தக் கண்ணீர் நடைபெற ஏற்பாடு செய்தார். நாடகத்துக்கு ஏகப்பட்ட வரவேற்பு! நாடகம் எடுபடுமோ எடுபடாதோ என்று சந்தேகத்துடனே இருந்த ராதாவுக்கு பலத்த சந்தோஷம்!

அதேபோல, வடசென்னையில் இன்பக் கனவு என்ற நாடகம் நடந்து கொண்டிருந்தது. அந்த நாடகமும் தமிழ்நாடு முழுக்க, பல்வேறு ஊர்களிலும் பொருட்காட்சிகள் நடக்கிறபோதுதான் அதிகம் நடிக்கப்பட்டது; அதையும் மாற்றி அமைத்தார் ஒய்.ஜி.பி, ஆமாம்! இன்பக் கனவு நாடகத்தை தென்சென்னை மக்கள் முன்னே நடித்துக் காட்ட ஒரு வாய்ப்பை உருவாக்கிக் கொடுத்தார். அதற்கும் மக்களிடையே பலத்த வரவேற்பு. அந்த இன்பக் கனா நாடகத்தின் ஹீரோ யார் தெரியுமா? சாட்சாத் எம்.ஜி.ஆரேதான்!

இப்படியாக ஆரம்பித்த ஒய்.ஜி.பி - எம்.ஜி.ஆர் நட்புறவு, பிற்காலத்தில், எம்.ஜி.ஆர் எங்கள் குடும்ப உறுப்பினர்களில் ஒருவராகவே நெருக்கமாயிற்று.

பத்மா சேஷாத்ரி பள்ளி ஆரம்பித்தது முதலே, பாடத் திட்டத்திலேயே நம் பாரம்பரியம், கலாசாரம் சம்பந்தப்பட்ட விஷயங்கள், கர்நாடக இசை, பரத நாட்டியம் போன்றவற்றை நாங்கள் சேர்த்துக் சொல்லிக் கொடுத்து வருகிறோம். பல பெற்றோர்களும், தங்கள் குழந்தைகளுக்கு பாட்டு, வீணை, வயலின், மிருதங்கம் என்று தனியாகச் சொல்லித் தருகிறார்கள். இதனால் கலைத் திறமை மிக்க மாணவர்கள் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே வந்தது.

இவர்களின் திறமைகளையெல்லாம் பள்ளிக்கூட ஆண்டு விழா தவிர வேறு சமயங்களில் ஊக்கப்படுத்த, உற்சாகமூட்ட வாய்ப்பு இல்லாமலேயே இருந்து வந்தது. இவர்களுடைய திறமைக்கு வாய்ப்பு உருவாக்கித் தர விரும்பினோம்.

இன்னொரு பக்கம், பொதுவாகவே சமூகத்தில் பாரம்பரயமான நம் கலைகள் மீது இளைய தலைமுறையினருக்கு ஆர்வம் குறைந்து கொண்டே வருவதையும் காண முடிந்தது. அவர்களுக்கு மறுபடி நம் நாட்டு இசை, நாட்டியம் மற்றும் கிராமியக் கலைகள், பஜன்ஸ் ஆகியவற்றின் மீது ஒருவித பிடிப்பை ஏற்படுத்த வேண்டியது உடனடியான தேவை என்று நாங்கள் நினைத்தோம்.

இந்த இரு நோக்கங்களையும் நிறைவேற்றும் வகையில் என்ன செய்யலாம் என்று யோசித்ததன் விளைவாக உருவானது தான் பாரத் கலாச்சார்.

(அடுத்த வாரம் சொல்லுகிறேன்)

• திருடி கனிதாவிடமிருந்து கைப்பற்றப்பட்ட நகைகள்....



# வியப்பூட்டிய திருடி!

## அப்பமும் விண்ணப்பமும்

சிடன்ஹாம் இன்ஸ்டிடியூட் ஆஃப் மானேஜ்மென்ட் ஸ்டடீஸின் முக்கிய நிர்வாகிகள் மூவர் (தப்லி, வி.பி. ராஜா, பி.கே. பாடீல்) திடீரென்று அவரவர் பதவியிலிருந்து தூக்கி எறியப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் செய்த பாவம்? டெபுடி சி.எம். கோபினாத் முண்டேவின் மகள் பங்கஜா, காலதாமதமாக அளித்த 'அப்ளிகேஷனை' நிராகரித்ததுதான்! ஹையர் டெக்னிகல் எஜுகேஷன் மினிஸ்டரின் மகனான சுனில், தப்லியிடம் பங்கஜாவுக்காக ஒரு விண்ணப்ப ஃபாரத்தை வேண்டியபோது, அதைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டிய கடைசி தேதி முடிந்து, ஒரு மாதமாகி விட்டதை உணர்த்தியிருக்கிறார், தப்லி. மறுநாள், முண்டே, பரீட்சைகளைத் தள்ளிப் போடச் சொல்லி தொலைபேசியிருக்கிறார். அது ஒரு கோடி நஷ்டத்தில் முடியும் என்பதை தெளிவாக்கி, தப்லி மறுத்திருக்கிறார். இதற்குள், பி.ஜே.பிகாரர் ஒருவரால் வழி நடத்தப்படும் Citizens Organisation of Public Opinion, தேர்வுகளை ஒத்திப் போடச் சொல்லி வழக்குத் தொடுத்திருக்கிறது. அவர்கள் வெற்றி பெற வழி வகுத்துத் தருமாறு தப்லிக்கு கட்டளை பிறப்பிக்கப்பட்டதாம்! ஆனால் கோர்ட்டிலும், தேர்வுகளை தாமதிக்கக் கூடாது என்ற தீர்ப்பு வந்துவிட்டது. அந்த எரிச்சல்தான், தமக்கும், தமக்குதவிய ராஜா, பாடீல் முதலானவர்களுக்குமான ட்ரான்ஸ்ஃபரின் பின்னணி என்கிறார் தப்லி! முண்டே...? "என் பெண்ணுக்கு என்றோ பெங்களூரில் ஸீட் கிடைத்துவிட்டது; இங்கே விண்ணப்பித்தாள் என்பதற்கு என்ன அத்தாட்சி?" என்கிறார்! "அன்றன்றுள்ள எங்கள் (விண்) அப்பம் எங்களுக்குத் தாரும்..." என்பதுதான் தப்லி அண்ட் கோ பிரார்த்தனையாயிருக்குமோ?

## முன்னேற்றத்தின் முடிவில்

எஸ்.எஸ்.ஸி முடிவுகள் வெளியானகையுடன், கல்வி அமைச்சர் சுதிர் ஜோஷி, ஒரு ஸ்பெஷல் பரிசை மாணவர்களுக்கு வழங்கினார். இனி SSC, +2 வில் ஃபெயிலானால், ரீ-எக்ஸாம் எழுதி, பாஸா(க்)கி, அதே வருடம் காலேஜிலும் சேர்ந்து விடலாம்! தவிர, இவரால் நியமிக்கப்பட்ட, முடிவுகள் முன்னேற்றக் கமிட்டி ஒன்று, பலர் ஃபெயிலாவதற்குக் காரணமான கணிதத்தை, 'ஆப்ஷனல்' ஆக்க முடியுமா என ஆலோசனை செய்கிறது. 'கவைக்குதவாத அல்ஜீப்ராவும் ஜாமெட்ரியும் எதற்காக? கொஞ்சம் கணக்குத் தெரிந்தால் போதாதா?' என்கிறார்கள். ராணே இதற்கெல்லாம் ஓ.கே. சொல்லி விட்டால், மாணவர்களுக்கு ஜாலிதான்! இதே ரீதியில் சரித்திரம், பூகோளம், ஆங்கிலம் என்று ஒவ்வொன்றாகக் கழற்றி விடாதிருந்தால் சரி!

## 'கை'த்தொழிலில் தேர்ச்சி!

நகைகளின் மதிப்பு 52 லட்சம்; 2 பாங்க் அக்கவுண்டுகள்; சோலாப்பூரில் பத்து ஏக்கர் நிலமும், பாண்டுப்பில் ஒரு 'சால்' முழுவதும் சொந்தம். வீட்டிலேயே இரண்டு லாக்கர்கள்; அதில் கைச் செலவுக்கு ஒன்றரை லட்சம்

கரன்ஸி; மூத்த பிள்ளை பஞ்சகனி கான்வென்டிலும் (மும்பையின் ஊட்டி), இரண்டாவது பிள்ளை, 3, 4, 5 வது பெண்கள் உள்ளூர் கான்வென்டிலும் படிப்பு; 6 வது இன்னும் வெளியே வந்தபாடில்லை (அதற்கு அமெரிக்கக் கல்வியாயிருக்குமோ?). சமூகத்தில் அந்தஸ்து, அக்கம் பக்கத்தில் மரியாதை... இத்தனையும் இருந்த 31 வது கனிதாவுக்கும் அவள் கணவன் ஜாதவுக்கும் என்ன தொழிலாக இருக்கும் என நினைக்கிறீர்கள்? அரசியலா? நோ நோ! மும்பையின் கூட்டம் நெரியும் ட்ரெயின்களுடன் சம்பந்தப்பட்டது.



* பிரதிஷ்டைக்குமுன் பாலாஜி

ஊகித்து விட்டீர்களா? கனிதா ஒரு செயின் + பர்ஸ் திருடி! 15 வருடங்களாக, இவற்றை லபக்கி, பக்கத்து கம்பார்ட்மெண்டில் பயணிக்கும் கணவனிடம் சேர்க்கும் வேலையை லாகவமாகச் செய்து வந்தாள்; அந்தோ... முறுண்டில் அண்மையில் பிடிபட்டாள்! அவள் வீட்டிலிருந்த தாலிகள், செயின்கள், மோதிரங்கள், ப்ரேஸ்லெட்டுகள், மூக்குத்திகளைக் கண்டு போலீஸே மூர்ச்சித்தது... அடுத்த வீட்டுக்காரர், ஏன் குழந்தைகளுக்கும் கூட ஒன்றுமே தெரியவில்லை! சத்தம்!

**கண்படுமே...**

ஓ்பனஸ்வாடியில் ஒரு திருப்பதி இருப்பது போல், நெருலிலும் ஒரு திருப்பதி உருவாகிக் கொண்டிருக்கிறது. ஆறு கோடி பட்ஜெட்டில், ஒரு கோயில்-கம்-கல்சுரல் காம்ப்ளெக்ஸை நிர்மாணிக்க இருக்கிறார்கள். தற்சமயம் கும்பாபிஷேகிக்கப்பட்டு காட்சியளிப்பது, பிரம்மகிரிக்கு மேலே, நீர் சூழ்ந்த இயற்கை எழிலுடன் கூடிய திருமால், தாயார் சந்நிதிகள்தாம். கும்பாபிஷேக தினத்தன்று, ஜீயர், வேத விற்பன்னர்கள், ஆயிரக்கணக்கான பக்த கோடிகள், வருண பகவான், இவர்களுடன் இன்னொரு ஸ்பெஷல் 'வி.ஐ.பீ'யும் வந்திருக்கிறார். ஆதிசேஷன் தன் சார்பாக ஒரு 'ரெப்'பை அனுப்பியிருப்பதாக அனைவரையும் சிலிர்க்க வைத்தது. ஒரு பாம்பு!

காரைக்குடியிலிருந்து வந்துள்ள 22 டன் எடை பொருந்திய பாலாஜி சிலை பிரமாண்டமாய் பிரமிப்பூட்டுகிறது. பதினெட்டாயிரம் ரூபாயில் பட்டுடுத்திக் கொண்டு அவர் ஜ்வலிப்பதை, தீபாராதனையின் போதுதான் பனிச்சென்று காண முடிகிறது. இல்லாவிட்டால் ஒரே இருட்டாக இருக்கிறதே?. (திருப்பாதங்களில் கவசமிருப்பதால் அவை மட்டும் பிரகாசிக்கின்றன). ஆண்டவன் கண்களில் நாம் பட்டால் போதும், அவர் நம் (பொல்லாத) கண்களில் பட வேண்டாமென்றிருக்குமோ?

— ஜெயஸ்ரீ ராஜ்

மும்பை மசாலா

✉ 'ஜெயலலிதாவின் பம்மாத்து!' தலைப்பிலான தலையங்கம் படித்தேன். நிலக்கரி ஊழல் வழக்கிலிருந்து ஜெ. விடுவிக்கப்பட்டது, நீதி மன்றத் தீர்ப்பாகும். நாம் அதை விமர்சிக்கக் கூடாது. என்றாலும், ஊழல் ஜெ. ஆட்சியில்தானே நடந்தது? இவ்வழக்கில். தமக்கு நேரடித் தொடர்பில்லை என்றால் இவரின் ஆட்சி லட்சணம் பளிச்சென்று தெரிகிறதே! தர்மம் வெல்வது பற்றிப் பேசுவதற்கு அதிமுகவினருக்கோ, ஜெயலலிதாவுக்கோ எந்த விதத்




தகுதியும் இல்லை என்று யாராவது அவர்களிடம் எடுத்துச் சொல்லுங்கள்.

மொரட்டுப்பாளையம்,
சு.நா. இராஜேஸ்வரன்.

✉ 'எமர்ஜென்ஸி வருமா? தேர்தல் நடக்குமா?' என்னும் தலைப்பிலான அட்டைப் படக் கட்டுரை தேச நலனில் அக்கறையுள்ள ஒவ்வொருவரையும் சிந்திக்க வைக்கும் சிறப்புமிக்க ஒன்றாகத் திகழ்ந்தது.

பிச்சாண்டார் கோவில்,
எம். காமராஜ்.

✉ பொதுக்கூட்ட மேடைகளில் கூடத் தூங்கிப் போகும் தேவேகௌடாவின் இயல்பு நாமறிந்ததுதான். ஆனால், அவரது பேட்டியின் முடிவில்கூட அவரது செயலை சூசகமாகச் சுட்டிக்காட்டும் விதமாக 'நத்தை ஒரே இடத்தில் இரண்டு வருடம் தூங்கும்' என்ற துணுக்கைப் பிரசுரித்திருப்பது கல்கிக்கு உரிய குறும்பு!

சாலியமங்கலம்,
நீடா. சி. இளஞ்செழியன்.

✉ 'தாழ்த்தப்பட்டவர்கள், பிராமணர்களால் அடக்கி வைக்கப்படுகிறார்கள் என்பது தவறான கருத்து என மனந்திறந்து வை.பா கூறியிருப்பது நூறு சதம் உண்மை. உயர் ஜாதி இந்துக்களால்தான் அடக்கி ஒடுக்கி வைக்கப்படுகிறார்கள்; நிதர்சன உண்மை!

பவித்திரமாணிக்கம்,
சொ. நடராசன்.

✉ மனித நேயம் இன்னமும் நம் நாட்டில் முற்றாக அழிந்து விடவில்லை என்பதற்கு மற்றுமொரு உதாரணம் 'சொந்தம்' அமைப்பு.

அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

✉ பணக்காரர்களுக்கு மறதி, ஏழைகளுக்கு மன்னிக்கும் மாண்பு மனம் - இரண்டையும் 'பணம்'தான் கொடுக்கிறது' என அழகாகச் சொன்ன அனுராதா ரமணின் நினைவுகள் உழைத்துச் சம்பாதிக்கும் ஊக்கத்தைத் தந்தது.

திருவண்ணாமலை,
எஸ். ஆர். மங்கை.

✉ இளையபாரதியின் 'முத்தங்களின் கவிதை'யில் 'தாயின் முத்தங்களும் குழந்தைகளின் முத்தங்களும் கடவுளின் ஆசிர்வாதங்கள்' எனும் வரிகளுக்குள் எனது இதயம் மாட்டிக்கொண்டது.

சென்னை - 78, பகலவன்.

✉ அமெரிக்காவில் நடந்த அமரர் கல்கி விழா நிகழ்ச்சியின் தொகுப்பு அசத்தி விட்டது! ஆஹா!

கோச்சடை, வி. விஜயா.

✉ திருவானைக் கோவில் (முகப்பு) நுழைவாயிலில் 'அருள்மிகு சம்புகேசுவரர்' என்று எழுதியிருக்கிறார்கள். ஜம்புகேஸ்வரர் என்றால் நாவல் மர ஈசன் எனப் பொருள் படும். 'சம்பு' என்றால் பொருள் வேறுபடுகிறது. இதேபோல இந்தக் கோயிலின் அதிகாரிகளும் அறங்காவலர்களும் மாண்புக்குரிய ஸ்டாலின் பெயரை 'ச்டாலின்' என்று எழுதத் துணிவார்களா?

திருவானைக்காவல்,
ஜி. சுந்தரராமன்.

✉ 'சாருநிவேதிதா' எழுதிய 'தேவதைகளின் காலம்' சிறுகதை, உழைக்கும் மகளிரின் அன்றாட இயந்திர வாழ்க்கை அவலம் குறித்த அருமையான படப்பிடிப்பு. வேலை வாய்ப்பைத் தேர்ந்தெடுத்துக் கொண்ட ஆயிரம் ஆயிரம் சகோதரிகள் தம்மை இக்கதை நாயகியாக உணர்ந்திருப்பார்கள்!

சின்ன திருப்பதி,
இ. இளங்கோ.

# யாராவது சொல்லுங்களேன்!

# "எம்.ஜி.ஆர். என்னைத் தம் கோஷ்டிக்கு அழைத்தார்!"

**எம்**.ஜி.ஆர். தி.மு.கவில் இருந்த காலம். அவர் டெல்லி சென்றிருந்தபோது, அவரைக் கலந்தாலோசிக்காமல் அமைச்சர்களின் பெயர்களை அறிவித்துவிட்டார் முதல்வர் கலைஞர். இது கண்ட எம்.ஜி.ஆருக்கு அதிருப்தி; கோபம். இதன் காரணமாகத் தமக்கென்று ஒரு தனி கோஷ்டியை கட்சிக்குள் உருவாக்க ஆரம்பித்தார்.

இந்தச் சமயத்தில், எம்.ஜி.ஆர். அணியில் சேர்க்கும் எண்ணத்தில் இருபத்தைந்து வயது எம்.எல்.ஏ. ஒருவரை ராமாவரம் தோட்டத்துக்கு அழைத்துச் சென்றார் கோவை செழியன். அந்த இளைஞருக்கு எம்.ஜி.ஆர். மேல் ஒருவித பக்தியே கூட உண்டு. தேர்தலின்போது, தமது தொகுதிக்கு வந்து பிரசாரம் செய்ததோடு, தேர்தல் செலவுக்காகப் பத்தாயிரம் ரூபாயும் கொடுத்த எம்.ஜி.ஆர். மேல் அந்த இளைஞருக்கு பக்தியோடு விசுவாசமும் உண்டு. இப்படிப்பட்ட சூழ்நிலையில், கோவை செழியன் அவரை எம்.ஜி.ஆரிடம் அழைத்துச் சென்றதால் ஏகப்பட்ட மகிழ்ச்சி அந்த இளைஞருக்கு!



எம்.ஜி.ஆரின் ராமாவரம் தோட்ட இல்லத்தில் அந்த இளைஞருக்கு விருந்து. நிறையச் சாப்பிடச் சொல்லி உபசரித்துக் கொண்டிருந்தார் எம்.ஜி.ஆர். சாப்பிடும் சமயத்தில் அந்த இளைஞரின் தோளில் கை வைத்த எம்.ஜி.ஆர், 'நீயும் வந்திடணும்' என்றார். அதாவது தமது அணிக்கு வரச் சொல்லி அழைப்பு விடுத்தார்.

அந்த இளைஞருக்கு ஒரே ஷாக்! என்னதான் எம்.ஜி.ஆர். மேல் பக்தி இருந்தாலும் தமது தலைவர் கலைஞர்தான் என்பதில் அவர் உறுதியாக இருந்தார். அதனால், 'அது சரியாப் படலீங்கண்ணா!' என்றார்.

அந்த இளைஞர் இப்படிப் பதில் சொன்னது எம்.ஜி.ஆருக்கே ஆச்சரியம். இப்படிப்பட்டவர்கள் கலைஞர் பக்கம் இருக்கிறார்களே என்று நினைத்தாரோ என்னவோ, எம்.ஜி.ஆரின் கண்கள் கலங்கி விட்டனவாம்!

"அந்த நிகழ்ச்சியை என்னால் மறக்கவே முடியாது!'' என்று கூறும் அன்றைய அந்த இளைஞர் வேறுயாருமில்லை. இன்றைய வனத்துறை அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமிதான்!

தி.மு.க.விலிருந்து வைகோ பிரிந்து மதி.மு.கவை ஆரம்பித்த போது, கோவையிலுள்ள பலரும் வைகோ பக்கம் சென்று விட்டனர். மாவட்டச் செயலாளர் கண்ணப்பனும் வைகோ பக்கம் சென்றுவிட்டதால், கோவையைப் பொறுத்தவரை தி.மு.க.வே கலகலத்துப் போனதொரு சூழ்நிலை. அந்தச் சூழலில் துணைச் செயலாளராக இருந்த பொங்கலூர் பழனிச்சாமியைச் செயலாளராக்கினார்

கலைஞர். உடனே, கட்சி நிதிக்காகத் தாம் ஒரு கோடி ரூபாய் திரட்டித் தருவதாக அறிவித்தார். அதன்படியே செய்தும் காட்டினார்.

"ஒரு கோடி ரூபாயை எப்படித் திரட்டு வது என்று கட்சிக்காரர்கள் பலரும் பயந்து கொண்டிருந்த போது, நான் நம்பிக்கை யோடு கிராமம் கிராமமாகச் சென்று நிதி திரட்டினேன். சாதித்தும் காட்டினேன். இதுவரை வேறு எந்த மாவட்டமும் கட்சிக் காக ஒரு கோடி ரூபாய் வசூலிக்கவில்லை!" என்று பெருமையோடு கூறுகிறார் அமைச் சர்.

அமைச்சரின் சொந்த ஊர் கோவை மாவட்டம் பொங்கலூர் அருகிலுள்ள செம்பே கவுண்டம்பாளையம். பத்து வயதி லேயே தந்தையை இழந்துவிட, அப்போதே தந்தை வகித்து வந்த 'ஊர்ப் பெரிய தனக்காரர்' பதவி வந்து இவரை ஒட்டிக் கொண்டுவிட்டது. பள்ளியில் படிக்கும் போதே தி.மு.கவின் மேல் ஈர்ப்பு; காங்கிரஸ் எதிர்ப்பு என்று இவர் மனத்தில் பதிந்து விட் டது. 65-ல் பள்ளியிறுதி வகுப்பு படிக்கும் போது, இந்தி எதிர்ப்புப் போராட்டம். அதில் தீவிரமாகக் கலந்து கொண்டதால் 15 நாள் சிறைவாசம்!

சிறை சென்று வந்த மாணவன் என்ப தால், சொந்த மாவட்டத்திலுள்ள கல்லூரி களில் இடம் கொடுக்க மறுத்து விட்டனர். அதனால், ராமநாதபுரம் மாவட்டம் சென்று படிக்க வேண்டிய சூழ்நிலை. அங்கும் இவர் சும்மா இருக்கவில்லை. 67- தேர்தலுக்காக தி.மு.கவுக்குப் பிரசாரம் செய்தார். காங்கிரஸ் சார்பில் பிரசாரத்துக்கு வந்த நடிகை பத்மினியைப் பேச விடாமல் செய்து திருப்பியனுப்பியதால் கல்லூரியை விட்டு விலக்கி விட்டனர். நல்ல வேளையாக அந் தத் தேர்தலில் தி.மு.க. வெற்றிபெறவே, கல்லூரி முதல்வரே இவருக்குக் கார் அனுப்பி மீண்டும் கல்லூரியில் தொடர்ந்து படிக்க அனுமதியளித்தாராம்!

இப்படி வளர்ந்த அரசியல் ஆர்வம், குண்டடம் பஞ்சாயத்துத் தலைவரானதில் தொடர்ந்தது. பிறகு சட்டமன்றத்தில் போட்டியிடும் ஆர்வம். "அப்போதைய ஃபாஷன் என்பது டைட் பாண்ட்டும் கர்லிங் ஹேரும்! அந்த ஃபாஷனில் நானும் துரைமுருகனும் கலைஞரைச் சந்தித்து சீட்

கேட்டோம். அப்போது எங்கள் இருவரின் தலை முடியையும் பிடித்து இழுத்த கலைஞர், "ரெண்டு பேரும் போறீங்க. 'ஓடியன்' சலூன்ல முடிவெட்டிக் கறீங்க. பக்கத்துலயே செல்லாராம் ஜவுளிக்கடையில் வேஷ்டி சட்டை வாங்கி உடுத்திக்கிட்டு வர்றீங்க. அப்பத்தான் வேட்பாளர்களை அறிவிக்கும்போது உங்க பேரைப் படிப்பேன்" என்று சொன்னாராம். அதன் படியே சீட் கிடைத்து அமோக வெற்றியும் கிடைத்தது.



*1972-ல் கலைஞர் தலைமையில் திருமணம். 75-ல் மிசாவில் கைது. 77 தேர்தலில் அதே பொங்கலூர்த் தொகுதியில் தோல்வி. அரசியல் பிரவேசம் காரணமாக விவசாயத்தைக் கவனிக்காததால் ஏகப்பட்ட கடன். உடனே விவசாயத்தைக் கவனித்ததோடு, சினிமா விநியோகம், பிரிண்டிங் பிரஸ், சிமெண்ட் தொழிற்சாலை என்று வியாபாரத்திலும் கவனம் செலுத்தினார்.*

*தாம் வியாபாரத்தில் தீவிரமாயிருந்ததால் 89, 91 தேர்தல்களில் தமது மனைவியைப் போட்டியிடச் செய்ய, இரண்டிலுமே தோல்வி. 96-ல் தொழில்களெல்லாம் ஓரளவு நிலை பெற்றுவிட-அவற்றைத் தமது மகன் கவனித்துக் கொள்ள முடியும் என்கிற நிலையில் மீண்டும் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி. இப்போது அமைச்சர்!*

## காலேஜ் கார்னர் - 6

### "நீங்க என்னபடிக்கணும்னு ஆசைப்பட்டீங்க? இப்போ என்ன படிக்கிறீங்க?"

**ராணி (பி.ஏ. சரித்திரம் மூன்றாம் ஆண்டு, வைஷ்ணவா கல்லூரி குரோம்பேட்டை):**

நான் பி.காம் இல்லன்னா பி.ஏ. எக்கனாமிக்ஸ் படிக்கணும்னு ஆசைப்பட்டேன். பொருளாதாரத்தைப் பத்திப் படிக்க ரொம்ப விருப்பம். ஆனா, கிடைக்கலை. ஹிஸ்டரிதான் கிடைச்சது. எது கிடைச்சாலும் நல்லாப் படிக்கணும்கிற எண்ணம் மட்டும் இருக்கு. இனிமே எம்.ஏ. முடிச்சுட்டு டீச்சராகணும். இல்லைன்னா வக்கீலுக்குப் படிக்கணும்.

*அண்மையில் எல்லா எம்.எல்.ஏக்களுக்கும் கலைஞர் அளித்த 'பிராகரஸ் ரிப்போர்ட்'டில் 'பெரும்பாலும் தொகுதியில் இருந்த அமைச்சர்' என்று வந்திருப்பதில் ஏகப்பட்ட மகிழ்ச்சியில் இருக்கிறார் அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி!*

சந்திப்பு: **கா.சு. வேலாயுதன்**

## காலேஜ் கார்னர் - 7

### சீனியர் மாணவர் சாம் அலெக்ஸாண்டரிடம் "உங்கள் கல்லூரிப் (பெயர் வேண்டாமே) பேராசிரியர்களுக்குச் செல்லப் பெயர்கள் ஏதும் உண்டா?" என்று கேட்டோம்.

*மிரிண்டா கைஸ் (Mirinda guys)- வழுக்கைத் தலையோடு வலம் வருபவர்கள்.*

*பாம்ப் ஸ்குவாடு (Bomb squad)- கல்லூரிக்கு சூட்கேஸுடன் வருபவர்.*



*ஆட்டுத்தாடி - குறுந்தாடி வளர்ப்பவர்.*

*குவார்டர் கோவிந்தன் - அவ்வப்போது கொஞ்சமாய் தண்ணியடிப்பவர்.*

*கோல்கேட் ஜெல் - ஜொள்ளு விடுபவர்கள்*

*மிக்கி (Micky)- கார்ட்டூன் பொம்மை மாதிரி பார்த்தவுடன் சிரிக்கத் தூண்டும் முகம்.*

*டோரி கண்ணன் - திருட்டு முழி முழிப்பவர்*

ஜெய்ஹிந்த்! கர்னல் நட்ராஜுக்கு இறுதி மரியாதை செலுத்த வந்த கூட்டத்தை பேப்பர்ல பார்த்தீங்களா? பாலிடீஷியன்ஸ் லேருந்து சாதாரண பொது மக்கள் வரைக் கும் எங்கெங்கேருந்தோ ஆயிரக்கணக்கா வந்து குவிஞ்சதும் ஆத்மார்த்தமா அஞ்சலி செலுத்தினதும் இன்னும் கண்ணுலேயே நிக் குது. ஆயிரம் கோஷ்டி, லட்சம் பாலிடிக்ஸ் இருந்தாலும் பொதுவா, கன்ட்ரிக்கு ஒரு ப்ராப்ளம்னா, மக்கள் சேர்ந்து திரண்டுடு வாங்கன்றதுக்கு இது ஒரு மறைமுகமான எக்ஸாம்பிள்.

பை த வே, நம்ம மன்ற உறுப்பினர் களெல்லாம் கார்கில் யுத்தத்துக்குக் கை நிறைய அள்ளிக் குடுத்திருப்பீங்கன்னு நம்பறேன். குடுத்த மறு செகண்ட் கண் ணாடி முன்னால நின்னு பாருங்க. என்னை மாதிரியே ஒரு பிரமாத மான தேஜஸ் எல்லாருக்கும் வந்திருக் கும்.

* * *

குர்-ஆன் படிச்சிட்டிருக் கேன், கொஞ்ச நாளா. கிட்டத் தட்ட ஆயிரம் பக்கங்கள்ல மூல மும் (அரபி) தமிழ் மொழி பெயர்ப்புமா நல்ல பேப்பர் + பைண்டிங்ல முகமது ஜான் டிரஸ்டு (92 பவளக்காரத்தெரு, சென்னை - 1) கொண்டு வந் திருக்காங்க.

எவ்ளோ அருமையா இருக்கு தெரியுமா? ஒரு குழந் தையை உட்கார வெச்சு அம்மா பாடம் சொல்லிக் குடுக்கறது மாதிரி அப்படி ஒரு இணக்கம் - லேங்வேஜ்ல.

"அவனே என் இறைவன். அவனைத் தவிர வேறு நாயகன் எவரு மில்லை. அவன் மீதே நான் முழுமையாக நம்பிக்கை வைத்திருக்கிறேன். அவ னிடமே என் மீட்சியும் இருக் கிறது!" (ருகூஃ4)

ஸ்ரீ வைஷ்ணவர்கள் சொல்ற சரணாகதித் தத் துவம்தான் இஸ்லாத்துக்கும் ஆதார சுருதியா இருக்கு.

"நீங்கள் சன்மார்க்கத்தை நிலை நிறுத்துங்கள். நீங்கள் அதில் பிரிந்து விடாதீர்கள்" (அஷ் ஷுஹூரா)

வள்ளலார் தெரியலை?

"ஒரு சமூகத்தார் பிறிதொரு சமூகத்தா ரைப் பரிகாசம் செய்ய வேண்டாம். ஏனென்றால் அவர்கள் இவர்களை விட மேலானவர்களாக இருக்கலாம்.... உங்களில் ஒருவருக்கொருவர் பழித்துக் கொள்ளாதீர் கள். ஒருவரை ஒருவர் பட்டப் பெயர்களால் அழைக்காதீர்கள். எவர்கள் இவற்றிலிருந்து மீளவில்லையோ, அவர்கள் அநியாயக்காரர் கள் ஆவார்கள்" (அல் ஹுஜுராத்)



மத நல்லிணக்கத்துக்கு இதைவிட உரக்கக் குரல் கொடுக்க முடியுமா?!

* * *

'**நா**கஸ்வராவளி'ன்னு ஒரு ராகம். அழகா பிரனவுன்ஸ் பண்ணலைன்னா ஏமாத்தி விட்டுடும். பாடறதும் அதே மாதிரி சாலஞ்சிங். இந்த ராகத்தை டி.கே. ஜெயராமன் காஸெட்ல ரீசன்டா மறுபடியும் கேட்டேன். ரொம்ப வருஷம் முன்னாடி, ஒரு கச்சேரியில பாடினதை லைவ் ரெகார்டிங்கா ஏவிஎம்ல போட்டது.

ஜாதிப் பூ கொடியை விலக்கி விலக்கிப் பார்த்தா அரும்பரும்பா ஒளிஞ்சிக்கிட்டிருக்கறது தெரியும். அந்த மாதிரி நாகஸ்வராவளில ஹிடன் பியூடீஸை அப்படியே பிரிச்சுப் பிரிச்சு அந்த ஆலாபனைல கொடுத்திருக்கார் டி.கே.ஜே.

அது முடிஞ்சதும், அதே நாகஸ்வராவளி வயலின்ல வரும். ஜெயராமன் பறிச்சுத் தந்த ஜாதிமல்லி அரும்பையெல்லாம் மாலையா

**பா**யின்ட்-டு-பாயின்ட், எக்ஸ்பிரஸ், சூப்பர் டீலக்ஸ்னு மூணு அடைமொழிகளோட, பளபளன்னு ரோடுல நிறைய மாநகரப் பேருந்துகள் ஓட ஆரம்பிச்சிருக்கு. மவுண்ட் ரோடுலேருந்து தாம்பரத்துக்கு ஏழு ரூபா சார்ஜ் பண்றாங்க. அது பிரச்னை இல்லைன்னுதானே அந்த வண்டில ஏறுறாங்க? LSSன்னு பேர் வெச்சிக்கிட்டு, கார்ப்பரேஷன் லாரி கணக்கா இருவதடிக்கு ஒரு தரம் நின்னு ஜனத்தை ஏத்தி, புளி அடைக்கறது என்ன நியாயம்? பாரிஸ்லேருந்து தாம்பரம் போற ரூட்ல எல்.ஐ.சி.யை விட்டா அடுத்த ஸ்டாப்பிங் டி.எம்.எஸ். அதை விட்டா சைதாப்பேட்டைதான் – கணக்குப்படி.

ஆனா டிவிஎஸ்லேயும் எஸ்ஐஈடிலேயும் நந்தனத்துலேயும் கூட நிறுத்தி, சமூக சேவை பண்றதை ரீஸன்டா பார்த்து, அனுபவிச்சேன்.

கண்டக்டர்கிட்ட, "இது நியாயமா சார்?"னு கேட்டா, "நான் என்னங்க பண்ண முடியும்? புதுசா இந்த ஸ்டாப்பிங்லேயெல்லாமும் நிறுத்தச் சொல்லி ரூல் வந்திருக்கு"ங்கறாரு.

## சுமி சூப்பர்மார்க்கெட்




கட்டி அவருக்கே போட்டா மாதிரி ஒரு வாசிப்பு. ஹூ எல்ஸ் பட் அனதர் ஜெயராமன்?!

லால்குடி அந்த நாகஸ்வராவளி ஆலாபனைக்காக டி.கே.ஜே.கிட்டே எத்தனை பலே வாங்கியிருக்கார்னு கவுன்ட் பண்ணிப் பார்க்கறதுக்கே இன்னொரு தடவை அந்த காஸெட்டைக் கேக்கப் போறேன்.

காஸெட் தயாரிக்கறவங்க இந்த மாதிரி லைவ் ரெகார்டிங்ஸ் நிறைய வெளியிடலாம். ஸ்டுடியோ ரெகார்டிங்கைக் காட்டிலும் ரொம்ப நல்லாருக்கு.

* * *

அப்புறம் எதுக்கு LSSபோர்டு? அப்புறம் எதுக்கு ஏழு ரூபா சார்ஜ்?

"வேணும்னா நீங்க போயி கம்ப்ளெயின்ட் குடுங்க. ரை ரை"ன்னு ஸ்டாண்டர்ட் பதில்.

பஸ்ஸை விட்டு இறங்கினதும் யாரும் போய் கம்ப்ளெயின்ட் குடுத்துட்டிருக்கப் போறதில்லைங்கற தைரியத்துலதானே இந்தப் பேச்சு?

"ரூலும் இல்லை, ஒண்ணும் இல்லை. கலெக்ஷனைப் பொறுத்துத்தான் இவங்க பேட்டா"ன்னார் ஒரு சக பயணி.

சூப்பர் டீலக்ஸ் ஊழல்!

— சுமி




**கா**ஷ்மீர், கார்கில், டார்ஸ் என்கிற பெயர்கள் இன்று ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளுக்குக் கூடத் தெரியும்; ஆட்டோ ஓட்டுபவர் முதல், விமான பைலட் வரை, இன்று கார்கில் பற்றிப் பேசுகிறார்கள்!

இப்போது எனக்கு இரண்டாவது உலக யுத்தம் (1939-45) நினைவுக்கு வருகிறது. ஊரிலிருந்து, என் அண்ணனும், எங்களுக்குத் தெரிந்த இன்னொரு குடும்பத்து இளைஞனும் பர்மா போர் முனைக்கு அனுப்பப்பட்டனர்!

அக்காலத்தில் தொலைக்காட்சி கிடையாது. எல்லோர் வீட்டிலும் ரேடியோ கூட இல்லை. எங்கள் வீட்டில் மட்டும் ஒரு பெரிய 'பிலிப்ஸ்' ரேடியோ இருந்தது. அது பேட்டரிகள் மூலம் இயங்கியது.

திடீரென்று ஒருநாள் என் அண்ணனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில், தான் இந்திய ராணுவத்தில் கேப்டனாகத் தேர்வு பெற்று விட்டதாகவும், உடனடியாக பர்மா முனைக்குக் (14வது ராணுவம்) கிளம்புவதாகவும் எழுதி இருந்தான். அந்தக் கடிதம் வந்து மூன்று ஆண்டுகள் வரை அவனிடமிருந்து எங்களுக்கு ஒரு தகவலும் இல்லை.

என் தந்தை பிரிட்டிஷ் அரசாங்கத்தில் பணியில் இருந்தார். அதனால் வீட்டில் 'தி மெயில்' என்ற தினசரி பத்திரிகையைத் தான் வாங்குவார்.

என் அம்மா, என்ன செய்வதென்று தெரியாமல், கடவுளிடம் சரணடைந்தாள். தன் பிள்ளை மட்டுமல்ல; 'உலக யுத்தமே வேண்டாம்; எத்தனை தாய்மார்கள் என்னைப் போல் தவிக்க வேண்டுமோ! எத்தனை குடும்பங்களில் கணவன்மாரும், பிள்ளைகளும், யுத்தத்திற்குச் சென்றிருக்கிறார்களோ! தாயே, இந்தியாவைக் காப்பாற்று' என்று வாய் ஓயாமல் கடவுளிடம் மன்றாடுவாள்.

சாயந்திரம் தினமும், ஆறு மணிக்கு ரேடியோவில், போர் முனையில் இறந்தவர்களின் பட்டியல் படிக்கப்படும். அதைக் கேட்கும்முன் என் தாய் பூஜை அறையில் விளக்கேற்றிவிட்டு, கூப்பிய கரங்களுடன் ரேடியோ முன்னால் வந்து உட்காருவாள். பாவம், அவள் மனம் என்ன கஷ்டப்பட்டதோ! எங்களுக்குக்கெல்லாம் புரியாத புதிர்! பண்டிகை நாட்களில், இலையின் முன் உட்கார்ந்து, "அவன் எங்கிருக்கிறானோ! அவனுக்கு வடை, பாயசம் என்றால் பிடிக்கும்" என்பாள். முள்ளங்கி சாம்பார் வைத்தால், அவனை நினைத்துக் கொள்வாள். சதா கடவுளை வேண்டிக் கொண்டேயிருப்பாள்.

**க**டைசியாக, ஒருநாள் சண்டை முடிந்து விட்டது என்று ரேடியோவில் அறிவித்தார்கள். அகதிகள், பர்மாவிலிருந்து நடந்து, மலைகளையும் கொடூர ஐராவதி நதியையும் கடந்து வந்த வண்ணமாக உள்ளனர் என்ற செய்தி. பல குடும்பங்கள் வழியில் நடக்க முடியாமல், சாப்பாடு இல்லாமல் இறந்தனர். அவர்களுக்கெல்லாம் ஈமக் கிரியைகள் கூட ஏதும் இல்லை. இப்படி கூட்டம் கூட்டமாக, இந்தியர்கள், அகதிகளாக வந்த வண்ணமாயிருந்தனர். அவர்களையெல்லாம், பர்மாவிலிருந்து அனுப்பும் மகத்தான தொண்டை இந்திய ராணுவம் செய்து கொண்டிருந்தது.

இதெல்லாம் ஒரு வழியாக முடிந்ததும், என் அண்ணனிடமிருந்து தந்தி வந்தது- "ஊருக்கு வருவதாக! ஊரில் ஒரு வரவேற்பு இல்லை! அவன் படித்த பள்ளியில் (தலைமுறையாக எங்கள் குடும்பத்தினர் படித்த பள்ளி) பெருமை கொள்ள யாரும் இல்லை. அவன் போர் முனையில் பட்ட துன்பங்களை நிதானமாக எங்களுக்கு விளக்கினான். அதைக் கேட்டபோது எங்கள் அம்மாவுக்கு கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. எங்கள் அப்பாவுக்கு ஒரே பெருமை!

இவையெல்லாம் நடந்தபோது, நாம் சுதந்தர இந்தியாவில் இல்லை. கம்ப்யூட்டர்களும் இத்தனை தொலைத் தொடர்பு வசதிகளும் இல்லை. அன்றும் பல இந்திய இளைஞர்கள் தங்கள் உயிரை நாட்டிற்காகக் கொடுத்தனர். இன்றும் பல இளைஞர்கள் நமது நாட்டிற்காகத் தங்கள் இன்னுயிரைக் கொடுக்கிறார்கள். ஒரே வித்தியாசம், இன்றைக்கு நமது வீரர்கள் பற்றிய ஒவ்வொரு செய்தியும் உடனுக்குடன் நமக்குக் கிடைத்துக் கொண்டிருக்கின்றது என்பதுதான்!

'நமது இமயத்தின் பனிமலையுச்சிகளில் எங்களுக்காகப் போராடும் இந்திய வீரனே! உனக்கு வெற்றி கிட்டட்டும்' என்று என் தாயைப் போல் நானும் கடவுளை பிரார்த்திக்கிறேன்!

— **கிரிஜா கார்த்திகேயன்**

# நெருப்பினிலே...

தொடர்ந்து காதலுக்கு 'மரியாதை' செய்து அலுத்துப் போய், வன்முறைக்குச் சூடு போட வந்திருக்கிறார் விஜய்.

ஊரெங்கும் கடன்பட்டு குன்றிப் போயிருக்கும் அப்பா, பாசமான அம்மா, கல்யாண வயதில் தங்கை, இந்த சின்னக் குடும்பத்தை கரையேற்ற, கடல்தாண்டி துபாய் செல்ல முடி வெடுத்து மும்பை வருகிறார் விஜய். போலி ஏஜெண்டிடம் பணத்தைப் பறிகொடுத்துத் தவிக்கிற விஜய்க்கு, ஒரு நண்பனின் உதவியால் புது வேலை கிடைக்கிறது; கூலிக்கு ஆட்களைக் கொலை செய்கிற அடியாள் வேலை! அந்தக் கூட்டத்தை விட்டுப் போனால் நண்பன் உயிர் போகும் நிர்ப்பந்தம் ஒருபுறம். வறுமை மற்றொரு புறம். இரண்டும் ஒன்றுசேர விஜய்க்கு அடியாள் வேலை நிரந்தரம் ஆகிறது.

இதற்கிடையில் நாயகி இஷா கோபிகருடன் காதல். காதல் காரணமாக அடியாள் வேலையை உதறிவிட்டு இஷாவுடன் மும்பையிலிருந்து தப்பித்துச் சென்னை வரும் விஜய், தம்மைக் கொல்ல வருகிற வில்லனின் அடியாட்களை (சக அடியாட்கள்தான்) திருத்தி அனுப்புகிறார். மெயின் கதையை ஆரம்பத்திலிருந்து மெல்ல மெல்ல நகர்த்தி 'செக்மேட்' செய்திருக்கிறார் டைரக்டர் எஸ்.ஏ. சந்திரசேகர்.

சண்டை, நடிப்பு, டான்ஸ் என்று அத்தனை அம்சங்களிலும் தூள்கிளப்பியிருக்கிறார் விஜய். முகபாவங்களில் முதிர்ச்சி தெரிகிறது. ஈடு கொடுத்து நடித்திருக்கிறார் இஷாகோபிகர். 'நட்புக்காக' என்று டைட்டிலில் காண்பித்து, சில்க் ஸ்மிதா டைப்பில் ஒரு பாட்டுக்கு ரோஜாவை ஆடவிட்டிருக்கிறார்கள்.

படத்தோடு ஒட்டாமல் இருப்பது, தமிழ் சினிமாவில் ஒரு சடங்குமாதிரி ஆகி விட்ட காமெடியும் பாடல்களும். 'மனசே மனசே குழப்பமென்ன' தவிர வேறு எந்தப் பாடலின் டியூனும் நினைவில் நிற்க வில்லை. இருந்தாலும் படத்தில் அவ்வப்போது பின்னணியில் ஒலிக்கிற ஹிந்துஸ்தானி ஹம்மிங், அடடா...! தேவாவுக்குப் பாராட்டு.

அழுத்தமான திரைக்கதையில் நம்மைத் தொந்தரவு செய்வது பாடல் வரிகள் மட்டுமே. ஒரு பாடலில் விஜயை 'மன் ஏஜ் கவர்மெண்டின் சீப் மினிஸ்டர் நீ' என்கிறார்கள்! பரவாயில்லை. ரோஜா ஆடுகிற பாடல், ஒவ்வொரு உடல் உறுப்புக்கும் ஒவ்வொரு மாநிலமாக ஏலம்விட்டு, 'உன் கட்டுமஸ்து உடம்புக்கு காஷ்மீரைப் புடிச்சிக்கோ', 'இதயத்தைக் கொடுத்திடு இந்தியாவே உனக்குத்தான்' என்று எழுதியிருக்கிறார் பாடலாசிரியர். கேட்பதற்கே அருவருப்பாக இருக்கிறது.

வயிற்றுப் பிழைப்புக்காக வன்முறைக்கும் பயங்கரவாதத்துக்கும் துணை போகும் ஒரு இளைஞனின் கதையை அட்டகாசமாய்ப் படம் பிடித்திருக்கிறார் எஸ்.ஏ. சந்திரசேகர். வித்தியாசமான கேரக்டரில் அசத்தும் விஜய்க்கு இந்தப்படம் ஒரு வெற்றிப்படம். எஸ்.ஏ. சந்திரசேகரும், விஜய்யும் இணைந்து ஒரு ஜுகல்பந்தி நடத்தியிருக்கிறார்கள். கச்சேரி களைகட்டியிருக்கிறது.

— கே.பி.எஸ்



# நடக்குமென்பார்

## அக்னிசர்மா பக்கம்

## ஜூலை 7 முதல் 13 வரை



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் நீங்க எதிலும் கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும். பெரிய திட்டங்கள் எதுவும் இப்ப வேணாம். உறவுக்காரங்க, நண்பர்கள் யாருமே உங்களுக்கு உதவ முடியாத சூழ்நிலைல இருக்காங்க. வீடு, மனை வாங்கறதோ, வெளியூர்ப் பயணமோ வேணாம். எதிர்பார்த்த விஷயங்கள் பல நடக்காம போகலாம். நேரம் அப்படி. நீங்க பொறுமையாகவும் கோபமோ எரிச்சலோ படாமலும் இருக்க வேண்டிய காலகட்டம் இது.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

சின்னச் சின்னதா நூறு பிரச்னைகள் உங்களுக்கு இருக்கு. அதுதான் உங்களை மலை மாதிரி அழுத்தும். ஆனா, எதுக்கும் சோர்ந்து போயிடாத உறுதி உங்களுக்கு உண்டு. எழுத்து, பத்திரிகைத் துறையை சேர்ந்தவங்களுக்கு புகழ் கூடும் வாரம் இது. உங்க எதிரிகளால பொறாமைப் பட முடியுமே தவிர வேற ஒண்ணும் பண்ண முடியாது! ஆபீஸ்ல மேலதிகாரிகளால சிறு பிரச்னைகள் வரும். கடும் சொற்களை உபயோகிக்காதீங்க. வீட்டுல கணவன் மனைவி உறவு திருப்தியாவே இருக்கும். பணப் பிரச்னையும் இருக்காது.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க நல்ல எண்ணங்கள் கண்டிப்பா நிறைவேறும் வாரம் இது. பெரியவங்க ஆசி பரிபூரணமா கிடைக்கும். அரசாங்க அனுகூலம் உண்டு. எதிர்பார்த்த பண உதவியும் கிடைக்கும். சிலருக்கு திடீர் வெளியூர்ப் பயணம் இருக்கும். போற காரியம் நல்லபடியாவே நடக்கும். பெண்களால சிறு பிரச்னைகள் வரலாம். வீட்லே மாமியார் - மருமகள் உறவு அவ்வளோ சுமுகமா இருக்காது. அவங்கவங்க எல்லைல கவனமா நின்னுக்கணும். எல்லை மீறினா போர்தான்! குழந்தைங்க உடல் நலத்துல அக்கறை செலுத்த வேண்டியது அவசியம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சனி, சூரியன், குரு, ராகு – நாலும் உங்களுக்கு 'இப்ப எதிர்க்கட்சில இருக்கு. உங்க நடவடிக்கைகள்ல ரொம்ப கவனமா இருக்க வேண்டியது அவசியம். எதிலும் அகலக்கால் வைக்காதீங்க. ஆபீஸ்ல யாரைப் பத்தியும் விமர்சனம் பண்ணாதீங்க. பொதுவாவே எங்கேயும் வாயைத் திறக்காம இருக்கறது நல்லது. பண விஷயத்துல எச்சரிக்கை அவசியம். பிக்பாக்கெட்காரங்க கிட்ட உஷாரா இருங்க. இருட்டு நேரத்துல வெளில போகாதீங்க. நாய்க்கடி அபாயம் உண்டு.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க சுயபலம் மேலோட்டமா இருக்கற வாரம் இது. எடுத்த காரியத்தை முடிக்காம விடமாட்டீங்க. எதிர்பாராத பெரிய மனிதர்களோட சகாயமும் கிடைக்கும். வேலை தேடறவங்களுக்கு ஆர்டர் வீட்டுக்கு வரும். பெண்களுக்குக் காதல் அனுபவங்கள் குளு குளுன்னு இருக்கும். சட்டம், காவல் துறையினருக்கு எல்லா கேஸ்லயும் வெற்றி தேடித்தரும். அரசாங்க அலுவலர்களுக்குப் பழைய பாக்கிகள் வந்து சேரும். குழந்தைகள் படிப்பில் சக்கை போடு போடுவாங்க.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம்,சித்திரை 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் உங்களுக்கு ஒரு திடீர் அதிர்ஷ்டம் அடிக்கப் போகுது. எதிர்பாராத பண வரவோ, வெளிநாடு சான்ஸோ, ஏதோ ஒண்ணு. புதிய தொழில் தொடங்கறவங்களுக்கு லாபமா அமையும். சினிமாக்காரர்களுக்குப் புகழும் பணமும் கூடும். விருது சான்ஸ் கூட இருக்கும். கணக்கு வாத்தியார்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது. வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. பெண்களுக்குப் புடைவை சரிகார் யோகம் உண்டு. சில பேர் வீட்டு உபயோகப் பொருள்களா வாங்கித் தள்ளுவாங்க. தலைவலி, லேசான ஜுரம் மாதிரி சிறு உடல் உபாதைகள் இருக்கும் – சிலருக்கு மட்டும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

பிரமாதமான நேரம்! தயங்காம எந்தக் காரியத்தையும் தொடங்கலாம்! எதிர்பார்த்த உதவிகள் தாராளமா கிடைக்கும். சமூக

சேவைல நாட்டமுள்ளவர்களுக்கு, அவங்க கஷ்டப்பட்டு சாதிக்கறாப்பல, சவாலா ஒரு வேலை காத்திருக்கும். வேலைக்குப் போற பெண்களுக்கு ஆபீஸ்ல, பதவி உயர்வு கிடைக்கலாம். வயசானவங்க, உடல் நலத்துல அக்கறை செலுத்த வேண்டியது அவசியம். ஆன்மீகம், விளையாட்டுத் துறையினருக்குப் புகழ் கூடும் வாரம் இது.

**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



உடல் நலன்ல அக்கறை தேவை. உணவு விஷயத்துல கட்டுப்பாடா இருங்க. பணப் பிரச்னையும் இருக்கும். யாருக்கும் ஜாமீன் கையெழுத்தெல்லாம் போடாதீங்க. வீட்டுல சிறு பிரச்னைகள் வரலாம். வாழ்க்கைத் துணைவரோட எதிலும் ஒத்துப் போங்க. சகோதரர்களுக்குள்ள சண்டை வரலாம். ஆனா, கலைத் துறையினருக்கு மட்டும் புகழும் பணமும் தாராளமா வரும். மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. அரசியல்வாதிகளுக்குச் சில எதிர்

## நடக்கும்!

பாராத பிரச்னைகள் வரலாம். உஷார்!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



உங்க அந்தஸ்து, மதிப்பு, கௌரவம், குப்புனு உயரும் வாரம் இது. வாழ்க்கை வசதிகள் உயரும். தேக ஆரோக்கியம் சீரா இருக்கும். நல்லவங்க தொடர்பால பல நன்மைகள் நடக்கும். பொருளாதார ரீதிலேயும் நல்ல அபிவிருத்தி கிடைக்கும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் வாங்கல் எதிலும் ஆதாயம்தான். மாணவர்களுக்குப் படிப்புல இருந்த மந்தநிலை நீங்கி, நல்லா படிக்க ஆரம்பிப்பாங்க. கலைத் துறையினருக்குப் பலன் ஓஹோ! கணவன் - மனைவி உறவும் சுமுகமா இருக்கும். ராணுவ வீரர்கள் செயற்கரிய சாதனை செய்ய நேரம் கூடி வந்திருக்கு.

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*



எதிர்ப்புகள் இருக்கும்னாலும் உங்க திறமையால எதையும் சுலபமா ஊதித் தள்ளிடுவீங்க. போட்டி, பந்தயங்கள்ல வெற்றி உங்களுக்கே. வழக்குகளும் உங்களுக்கு



கும்பராசிக்காரரான நடிகை இந்துவுக்கு குதூகலம் ஏற்படுகிற மாதிரி குடும்பத்தில் சில சம்பவங்கள் நடக்குமாம்!

சாதகமாவே தீர்ப்பாகும். இயந்திரப் பணியாளர்களுக்குப் பதவி உயர்வு நிச்சயம். அரசியல்வாதிங்க செல்வாக்கும் நிலையும் உயரும். நிர்வாகத் துறையினருக்குச் சில பிரச்னைகள் வரும். எதிர்பார்த்தபடி ஊழியர்கள் ஒத்துழைக்க மாட்டாங்க. யூனியன் காரங்களுக்கும் சில சங்கடங்கள் வரலாம். மத்தபடி தனிப்பட்ட பாதிப்புகள் பிரமாதமா இருக்காது.

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



தேக ஆரோக்கியம் பிரமாதமா இருக்கும். மனசுல குதூகலம் ஏற்படறாப்பல சில சம்பவங்கள் குடும்பத்துல நடக்கலாம். சில புதிய நண்பர்கள் கிடைப்பாங்க. வேற மொழிக் காரங்களால சில எதிர்பாராத நல்லது நடக்கலாம். வெளியூர் இடமாறுதல்கள் சிலருக்கு இருக்கும். பெற்றோர் உடல் நலன் கொஞ்சம் கவலைப் படும்படி இருக்கும். சகோதரர்களுக்குள்ள சிறு ஊடல்கள் வரும். வெளியூர்ப் பயணங்கள், குறிப்பா இரவுப் பயணங்களைத் தவிர்க்கிறது நல்லது.

**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

இந்த வாரம் விருந்துகளில் கலந்துக்கற வாய்ப்பு இருக்கும். கூடவே வயிற்று உபாதையும் இருக்கும். சிலருக்கு பிரமோஷன் வந்து குஷிப்படுத்தும். பொருளாதார ரீதில அபிவிருத்தியைக் கண்டிப்பா எதிர்பார்க்கலாம். நல்லவங்க தொடர்பால சில நன்மைகள் நடக்கும். கலைத் துறையினருக்கு இது சுமாரான வாரம்தான். ரொம்ப பந்தாவா நடந்துக்கறவங்க மூக்கு உடைபடறாப்பல ஏதாவது சம்பவம் நடக்கலாம். கல்வித் துறையினருக்கும் மத போதகர்களுக்கும் இது ஆதாயமான கால கட்டம். ●

# முதல்வர் மகள்

## 4

சீதா ரவி

"யாரும் பார்க்க மாட்டாங்கன்னு நினைச்சாங்களோ இல்லை எப்படியும் அகப்பட்டுக்கப் போறோம்னு முடிவு பண்ணினாங்களோ தெரியலை... இரண்டு பேரும் ஏரிக்கரையில ஜீப்பை நிறுத்தி உள்ளே உட்கார்ந்துக்கிட்டிருந்திருக்காங்க..."

– பத்மா விவரிக்க அப்பா சிரிப்பும் அவநம்பிக்கையுமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

"தமிழ்ச் செல்வியோட துப்பட்டா முனை, கதவிடுக்குல மாட்டிக்கிட்டு இரண்டு இஞ்ச் நீளத்துக்கு வெளியே நீட்டிட்டிருந்திருக்கு. கஸ்தூரி கண்ணுல அது பட்டதும் பேயறைஞ்சாப்புல ஓடி வந்தா, பாவம்! அப்புறம் நடந்ததெல்லாந்தான் பேப்பர்ல விவரமா வந்துடுச்சேப்பா..."

"ஆமாமாம். போலீஸ் போய் ஜீப்பை சூழ்ந்துகிட்டப்போ அவங்க ரொம்ப காஷுவலா இறங்கினாங்களாமே! மணிமாறனைப் பார்த்து போலீஸ் முழி தெறிச்சுப்போனது; அப்புறம் நிதானத்துக்கு வந்து கைது செய்யப் பார்த்தது; அந்தப் பொண்ணு குறுக்க விழுந்து தடுத்து 'அவரொண்ணும் என்னைக் கடத்தலே, நானேதான் விரும்பி அவர் கூட போனேன்னு சொன்னது – ரஹ்மான் கால்ஷீட் தரவேண்டியதுதான் பாக்கி. முதல்ல ஆறு சாங் ரெகார்ட் பண்ணணும். அப்புறம் ஆறு மாசம் ஷூட்டிங். ரீரிகார்டிங், டப்பிங் எல்லாம் முடிஞ்சு எப்படியும் தமிழ்ப்புத்தாண்டுக்கு ரிலீஸாயிடும் பாரு படம் - 'முதல்வர் மகள்'. நியூமராலஜிக்காக வேணுமானா டைட்டிலோட ஆச்சர்யக்குறி சேர்த்துக்கலாம்!

"கிண்டல் பண்ணாதீங்கப்பா. சினிமா வேற வரணுமா! இப்போவே விஷயம் சிரிப்பாய் சிரிக்குதே. தமிழோட பிளஸ் டூ க்ரூப் போட்டோவிலயிருந்து அவ முகத்தை மட்டும் என்லார்ஜ் பண்ணிப் போட்டு மணிமாறன் படத்தைப் பக்கத்துல வைச்சு, 'முதல்வர் மகளின் காதல் லீலைகள்', 'இன்பமாக ஒரு நாள்' – இன்னும் என்னென்னவோ தலைப்பு, உபதலைப்பு போங்க! இத்தனைக்கும் எந்தப் பத்திரிகை நிருபரும் அன்னிக்குக் கொடைக்கானல் வந்து சேர முடியலை. எஸ்.பி. ரவீந்தரன் கூட சில்வர் காஸ்கேட் வரை ஜீப்ல ஏறி வந்து டிராஃபிக் ஜாம்ல மாட்டிக்கிட்டார். அப்புறம் பக்கத்துல இருந்த எஸ்டேட் பங்களாவிலே போய் ஒரு பைக்கைக் கேட்டு வாங்கிக்கிட்டு மேல அவர் வந்து சேர்றதுக்கும் தமிழ்ச் செல்வியை நாங்க கண்டு பிடிக்கறதுக்கும் சரியாய் இருந்தது."

"நாளைக்கு நீ காலேஜ் போனா பாடம் நடத்த விடாம இதே பேச்சாத்தான் இருக்கும்..."

"எல்லா பெண்களுமே கொஞ்சம் அரண்டு போயிருக்காங்க. சாதாரணமா அதுங்க பேசறதக் கேட்டா உலகத்துல லவ் தவிர வேற விஷயமேயில்லைங்கற மாதிரியிருக்கும். ஆனா நேருக்கு நேரா அதை சந்திக்கறப்போ, அது எவ்வளவு சிக்கலான விஷயம்னு புரியறப்போ மழையில நனைஞ்ச கோழிக் குஞ்சுகளாட்டம் எல்லாம் ஒடுங்கி நடுங்கிப் போயிடுதுங்க! பாவம், தமிழ்ச் செல்வி! ஒரு நிமிஷ சலனத்துல யோசிக்காம தப்புப் பண்ணிட்டா..."

"நீ அவளைச் சொல்றியா?" அப்பா கொஞ்சம் கடுமையாகவே கேட்டார்.

பத்மாவிடம் பதில் இல்லை. என்ன சொல்வது? துக்க சமுத்திரம் அவளைத் தனது அந்தகார ஆழத்துக்குள் இழுத்துக் கொண்டதைச் சொல்வதா?

"இதோ பாரு..." அப்பா மெள்ள அவள் கை தொட, நிமிர்ந்தாள்.

"துக்கமும் சந்தோஷமும் ஒண்ணுதான்னெல்லாம் நான் தத்துவம் பேசப் போறதில்லே. வாழ்க்கையில ஆறாத

காயங்கள் சில ஏற்படத்தான் செய்யும். ரொம்ப கஷ்டப்பட்டு அதை ஜெயிச்சுட்டதா நினைக்கற நேரத்துல திரும்பவும் வந்து நம்மைத் துன்புறுத்தும். ஆனா அதைத் தாங்கிக்கிட்டு நம்ம பொறுப்புகளை நிறைவேத்தற சக்தியையும் இயற்கை நமக்குக் கொடுத்திருக்கும்மா; அந்த சக்தியை நம்பு."

"அவரை மறக்க முடியலியேப்பா."

"முத்துக்குமாரை மறந்துட முடியாது பத்மா. என்னாலயே முடியலை. கஷ்டப்படறேன். சாமான்யமான மரணமா அது! ஆனா நம்ம துக்கம் எத்தனை பெரிசானாலும் அதோட துளிகூட சம்பந்தப்படாத மத்தவங்களை அது பாதிக்க நாம விட்டுடக் கூடாதில்லையா?"

"நியாயம்தான்."

"செயின் ரியாக்ஷன் மாதிரி எத்தனை குழந்தைகள் அன்னிக்குத் தவிக்கப் போய், போலீஸையெல்லாம் வேரோட பிடுங்கி, கொடைக்கானலையே கவிழ்த்து, நல்ல காலமா தமிழ்ச் செல்வி ரொம்பத் தெளிவா ஸ்டேட்மெண்ட் கொடுத்ததாலே உனக்கோ போலீஸ் அதிகாரிங்களுக்கோ வேலை போகலை. ஆனால், நீ மட்டும் அன்னிக்குக் கவனமாயிருந்திருந்தால் அந்தக் குழந்தைக்கு இவ்வளவு அபகீர்த்தி வந்திருக்காது.

"ஐயோ, அப்பா!"

- குலுங்கி அழுதவளின் தலையில் ஆதரவாகக் கை வைத்தார்.

**த**மிழ்ச் செல்வி 'நியாயக்குரல்' பத்திரிகையைப் பார்த்து குலுங்கி குலுங்கிச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"வயித்தெரிச்சலைக் கிளப்பாதே! என்ன வக்கிரமா எழுதியிருக்கான். போஸ்டர் வேற - 'லேடி டாக்டரிடம் போனாரா?'ன்னு. எல்லாம் என் தலையெழுத்து!"

"என்னம்மா நீங்க! மூணாந்தர பத்திரிகைல வந்த நாலாந்தர விஷயத்துக்கு இப்படி அப்செட் ஆகலாமா?"

"எனக்குத் தெரியும் என் மகளைப் பத்தி. ஆனா ,,ஊர் உலகமெல்லாம் அப்படியா நினைக்கும்?' உங்கப்பா வேற மூணு நாளா சோறு தண்ணியைக் கண்ணால கூட பார்க்காமயிருக்கார். 'கட்சிக்காரங்களே கண்ட மேனிக்குப் பேசறாங்க மீனாட்சி'ன்னார் நேத்து ராத்திரி. இந்த முப்பத்தஞ்சு வருஷத்துல அவர் அழுது இப்பத்தான் பார்க்கறேன்."

தமிழ்ச் செல்வியின் தாமரை முகம் வாடியது. இரண்டு நாள் பரிபூரண சுதந்தரத்துக்



குப் பின் இப்போது கொடூரமான தண்டனை. கொடைக்கானலிலிருந்து திரும்பியது முதல் அப்பா அவளிடம் முகம் கொடுத்துப் பேசவில்லையென்பது தண்டனையின் ஒரு பகுதிதான். அவளுடைய ஏ.ஸி. அறையின் வாசலில் சதா இரண்டு கான்ஸ்டபிள்கள் நிற்கிறார்கள். கதவைத் திறந்தால், நாசூக்காகத் தடுக்கிறார்கள். 'உள்ளேயேயிருங்க பாப்பா. அப்பா சொல்லிருக்காங்க.'

"அம்மா, கொஞ்சம் நான் சொல்றதைக் கேளுங்க. நான் சின்னக் குழந்தையில்லே. எனக்குப் பதினெட்டு வயசாகப் போகுது...."

'பதினெட்டு முடிந்திருந்தால் அன்றைக்கே மணிமாறனுடன் போயிருப்பேன்' என்று சொல்ல நினைத்தவள் மிகவும் பிரயத்தனப்பட்டு தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

"இப்பவே, இன்னைக்கே மணிமாறனும் நானும் கல்யாணம் செஞ்சுக்கணும்னு நினைக்கலை. ஆனா, தனியா இருக்க ஒரு சந்தர்ப்பம் கிடைச்சப்போ எங்க இரண்டு பேராலேயும் அதைப் பயன்படுத்திக்காம இருக்க முடியலை. நீங்களும் அப்பாவும் காதலிச்ச நாட்கள்ல எப்படியெல்லாம் சந்தோஷமாயிருந்திருப்பீங்க..! எங்க கதியைப் பாருங்க. ஏதோ பாவ காரியம் செஞ்ச மாதிரி தமிழ் நாடே இரண்டு படுது."

மீனாட்சி மகளைச் சேர்த்தணைத்து உச்சி மோந்தாள். அவள் மார்புச் சேலை நனையும் வரை கேவித் தீர்த்த தமிழ்ச் செல்வி மெள்ள அடங்கினாள். மூக்கை உறிஞ்சி, கண்ணைத் துடைத்துக் கொண்டவளைப் பார்க்க பார்க்க நெஞ்சு வெடித்து விடும்போலிருந்தது மீனாட்சிக்கு.

"நீங்க இப்போ அழ ஆரம்பிச்சுடாதீங்கம்மா. இந்த அசிங்கத்துக்கு ஒரு தீர்வுதான் இருக்கு. சீக்கிரமா எங்களுக்குக் கல்யாணத்தைப் பண்ணி வையுங்க."

"கல்யாணமா! நான் கட்டையில போன பிறகுதான் இப்படியொரு கல்யாணம் நடக்கும்."

முதல்வர் மூன்று நாட்களாகச் சேர்த்து வைத்த சீற்றத்தையெல்லாம் தமிழ்ச் செல்வி மேல் பொழிந்து கொண்டிருந்தார்.

அவரை தமிழ்ச் செல்வியின் அறைக்குத் தருவிக்க மீனாட்சி ஒரு தவ முயற்சி செய்ய வேண்டியிருந்தது. அந்தச் சோர்விலேயே அவள் பேச்சற்றுப் போய் ஒரு மூலையில் சுருண்டிருக்க, அப்பாவும் மகளும் மோதிக் கொண்டிருந்தார்கள்.

"பத்திரிகைக்காரங்க வாயை அடைக்கணும்னா வேற வழி கிடையாது."

"எனக்குத் தெரியாதா அவனுங்களை... வேற ஏதாவது கிடைக்கற வரைக்கும் இதைப் பிடிச்சுக்கிட்டுத் தொங்குவானுங்க. நாளைக்கே தேர்தல்னு வரும்போது அவங்க தயவு நமக்கு வேணும் - இல்லாட்டி வழக்குப் போட்டு நாறடிச்சுட மாட்டேன்! அதை விடு, பத்திரிகையில இப்படியெல்லாம் எழுத நாங்கன்றதுக்காக நான் அந்த துரோகியோட சம்பந்தம் பண்ணிக்க முடியுமா?

"அப்படி என்ன துரோகம் பண்ணிட்டாரு மாமா உங்களுக்கு...?"

"மாமாவா! கொலை விழும்!"

கையை ஓங்கியவரை மீனாட்சி அவசரமாக எழுந்து வந்து தடுக்க வேண்டியிருந்தது.

"வளர்ந்த புள்ளை மேல கையை ஓங்காதீங்க."

"விடும்மா! அடிச்சா அவர் கோபம் ஆறும்னா அடிச்சுட்டுப் போகட்டும். ஆனா பாருங்க, மணிமாறன் அப்பாவும் இதையே தான் சொல்றாங்க. நீங்க அவங்களுக்குத் துரோகம் பண்ணிட்டீங்கன்றாங்க. ஒரு துரோகத்துக்கும் இன்னொரு துரோகத்துக்கும் சரியாப் போச்சு!"

"வாயை மூடு!"

"என்னைத்தான்பா மிரட்ட முடியுது உங்களால. கட்சியில ஒரு உபதலைவர் மட்டத்துக்கு அவர் வந்ததை உங்களைச் சுத்தியிருந்தவங்களாலே சகிச்சுக்க முடியலை. உங்க இரண்டு பேரையும் பிரிச்சுவிட வேலை செஞ்சாங்க. கோள் சொல்றதுக்கும் புறம் பேசறதுக்கும் க்யூவுல நின்னவங்களைப் பார்த்துத்தான் நான் வளர்ந்திருக்கேன். அவங்க வாயையெல்லாம் அப்போ உங்களாலே மூட முடியலியே!"

"............................"

"தப்பித் தவறி நாளைக்கு நான் அரசியலுக்கு வந்தா எதையெல்லாம் நம்பக் கூடாது, பொருட்படுத்தக் கூடாதுன்னு நல்லா தெரிஞ்சுகிட்டிருக்கேன். ஐ மே ஈவன் பி எ பெட்டர் பொலிடிஷியன் தன் யூ."

"இவ்வளவு சட்டம் பேசறியே, புகழேந்தி பிரிஞ்சு போய் தனிக்கட்சி ஆரம்பிச்சது மட்டும் உனக்குத் தப்பாத் தோணலை...?"

"ஹா! அதுதான் உங்க அரசியல் உலகம். இன்னிக்கொரு நியாயம்; நாளைக்கொரு நியாயம்! நீங்க மட்டும் என்ன கல்தோன்றி மண்தோன்றா காலத்துக் கட்சியிலயா இருக்கீங்க...? தாய்க் கட்சியிலயிருந்து திடீர்னு ஒரு நாள் பிரிஞ்சு வந்தவர்தானே!"

இதற்குத் தான் தமிழ்ச் செல்வியைப் பார்ப்பதையே தவிர்த்து வந்தார் மூன்று நாட்களாக. இப்படித் தர்க்கம் செய்தே தன்னை இளக்கிவிடுவாள் அவள் என்பதை எதிர்பார்த்ததால்.

தமிழ்ச் செல்வி அவரிடம் பதில் எதிர் பார்க்காமல் வெடித்தாள்.

"அதெல்லாம் கிடக்கட்டும்! நீங்களும் அம்மாவும் காதலிச்ச காலத்துல இந்த மாதிரி பத்திரிகைங்க, டி.வி, வெப்ஸைட் மாகஸீனெல்லாம் இல்லைன்றதையே மறந்துட நீங்க..."

முதல்வரின் கோபம் இலே சாகத் தணிவதை உணர்ந்தவள் அதே மூச்சில் தொடர்ந்தாள்.

"அப்பா! மணிமாறனை எனக்குப் பிடிச்சிருக்கு. ரொம்ப ரொம்ப பிடிச்சிருக்கு. அவருக்கும் என்னைப் பிடிச்சிருக்கு. இந்த ஒரு காரணம் மத்த எல்லாத்தைக் காட்டிலும் முக்கியமில்லையா?"

அறையின் ஓரத்தில் கிடந்த ஒற்றைக் கட்டிலில் தளர்ந்து உட்கார்ந்தார் அருணாசலம். தமிழ்ச்செல்வி அவர் காலருகே தரையில் சரிந்து அமர்ந்தாள்.

மௌனம் அந்த அறையின் குளிர்ச்சியை வெப்பமாக்கியது.

மெள்ள எழுந்து போய் ஜன்னலின் திரைச்சீலையை விலக்கி வெளியே பார்த்துப் பேசினார் அருணாசலம்.

"இதிலே ஒரு பெரிய அபாயமிருக்கு தமிழ்ச் செல்வி." - அவர் குரல் மிகவும் கம்மியிருந்தது.

"சொல்லுங்கப்பா."

"புகழேந்தி ஊருக்கு ஊர் குடித்தனம் வைச்சிருக்கான். அதைத் தப்பாவோ குற்றமாவோ நினைக்கற குடும்பமில்லே அவனுடையது. அந்தச் சூழ்நிலைதான் மணிமாறன் வளர்ந்து ஆளாகியிருக்கான்றதை நீ மறந்துட்டே. நாளைக்கு அவனும் அப்பனாட்டம்..."

தமிழ்ச் செல்வி சிறியெழுவாள் என்று அஞ்சி, தயங்கியவர் திகைத்துப் போனார். முதுகுப் பக்கமாக வந்து அவரைக் கட்டி அணைத்துக் கொண்டு அழுதாள். அவள் முகம் பார்க்கத் திரும்பி, அணைத்து அமரச் செய்தார்.

"இப்போதான் நீங்க ஒரு அப்பாவா பேசறீங்க தெரியுமா?" நீண்ட நேரம் அவள் கண்ணீர் நிற்காமல் பெருகிற்று.

அழுது ஓய்ந்ததும் ஒரு புதிய தெம்பு பிறந்தாற்போல் பேசினாள்.

"நீங்க கவலைப்படற விஷயத்தைப் பத்தி எனக்கும் தெரியும். ஆனா மணிமாறனையும் எனக்குத் தெரியும் - பத்து வயசுலேருந்து தெரியும். இன்னிக்கு நாங்க விரும்புறது சத்தியம். நாளைக்கு நீங்க நினைக்கற மாதிரி எதுவும் நடக்காது. 'ஒரு வேளை நடந்தால்?'னு கேட்பீங்க. அப்படி நடந்துச்சுன்னா அப்போ அதை சமாளிக்கற அறிவும் நெஞ்சுரமும் உங்க பொண்ணுக்கு இருக்காதாப்பா?"

உள்ளத்தின் பூரிப்பு அருணாசலத்தின் முகத்தில் புன்னகையாகப் படர்ந்தது. தமிழ்ச் செல்வியின் பக்கத்தில் உட்கார்ந்தவரின் கைகள் பழக்க தோஷத்தில் செல்போனுக்காகத் துழாவுவதை கவனித்து அதை எடுத்து வந்து கொடுத்தாள் மீனாட்சி.

அவர் எண்களை அழுத்த அதன் குட்டித் திரையில் விளக்கெரிந்தது - 4824242 என்று தோன்றிய எண்களைக் கூர்மையாய் கவனித்த தமிழ்ச் செல்வி அவசரமாய் அந்த அழைப்பை ரத்து செய்து மீண்டும் டயல் செய்து கொடுத்தாள்.

"அந்த நம்பர் மாறிப் போச்சுப்பா. இப்போதைய புது நம்பர் போட்டிருக்கேன்..."

மணிமாறனின் தொலைபேசி எண்களைப் பார்க்கவே அவளுக்கு மகிழ்ச்சியாயிருந்தது.

(முற்றும்)



யார் இப்படி? கதவைத் திறப்பதற்குள் என்ன அவசரம்? லேசாய் வந்த கோபத்துடன் கதவைத் திறந்தேன். ஆனந்தத்துடன் கூடிய அதிர்ச்சி காத்திருந்தது. அண்ணா நின்றிருந்தான். அண்ணாவை நான் எதிர்பார்க்கவில்லை. அதோடு அண்ணாவுக்கு என் வீடு தெரிந்தது ஆச்சர்யம்தான். அண்ணாவின் முகத்தைப் பார்த்தேன், எங்கே கோபமாய் இருக்கிறானோ என்று. இல்லை. முகத்தில் புன்னகை மலர்ந்திருந்தது.

"வாண்ணா" என்றழைத்தேன்.

"உள்ள கூப்பிடுவோமா வேணாம்மான்னு யோசிக்கிற மாதிரி இருக்கு" என்று கூறிச் சிரித்தான்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லேண்ணா. உன்னைப் பார்த்ததும் கையும் ஓடல, காலும் ஓடல. வீட்டுல எல்லோரும் சௌக்கியமாண்ணே?"

அப்படிக் கேட்கவே எனக்குக் கூச்சமாய் இருந்தது. எப்படி சௌக்கியம் இருக்கும். நான் பண்ணின காரியத்தால். ஆனாலும் நலம் விசாரிக்கத்தானே வேண்டும்.

"ம்..." என்றான்.

"எங்கே சுந்தர்?" என்று கேட்டான்.

"பரவாயில்லையே... பெயர் கூட ஞாபகம் இருக்கிறதே" என்று நினைத்துக் கொண்டேன். பேச்சு சப்தம் கேட்டு சுந்தர்– கைலியை கட்டிக் கொண்டு ஹாலுக்கு வந்தார்.

"இது என் அண்ணா" என்றேன்.

"வாங்க" என்று கைகுலுக்கினார் சுந்தர்.

"காப்பி கொடுத்தியா?" என்று சுந்தர் கேட்டார். 'இதோ' என்று அடுக்களைக்குள் நுழைந்தேன்.

அண்ணா பார்வையால் வீட்டை அளந்தான். தங்கை எப்படியான வாழ்க்கை வாழ்கிறாள் என்று பார்க்கலாம். எனக்கு உண்மையிலேயே ஆச்சர்யமாய்த்தான் இருந்தது அண்ணா வந்தது. என் மீதான கோபம் எல்லாம் போய்– அண்ணனின் மனசு அதற்குள் சமாதானமாகி விட்டதா? என் காதல் மணத்தை எப்படி அவனால் அதற்குள் ஜீரணித்

அழைப்பு மணி ஒலித்தது. கண் விழித்தேன். மணி பார்த்தேன். ஏழே கால். நேரமாகிவிட்டது. பக்கத்தில் சுந்தர் குழந்தையைப் போல் சுருண்டு படுத்திருந்தார். குழந்தை தான். மீசை வைத்த குழந்தை. செல்லமாய் அவர் கன்னத்தைக் கிள்ளி விட்டு எழுந்தேன். எழுந்து வாசற் கதவை திறப்பதற்குள்ளாக– திரும்பத் திரும்ப அழைப்பு மணி சப்தம்.



# நீண்ட காத்திருப்பு... உறவுகள்...

யோகி

உன் பயம்னா- அந்த பயம் அவசியமே இல்லை. அது பத்தி சுந்தர்ட்ட பேசினேன். அதனால் என்ன- என் சம்பளப் பணத்தில் முக்கால்வாசிய இங்க கொடுக்கச் சொன்னார்ம்மா!' என்றேன்.

'எங்களை பிச்சைக் காரங்கன்னு நினைச்சியா?' என்று அண்ணா பாய்ந்தான். 'இப்படி ஜாதி விட்டு ஜாதி கல்யாணம் பண்ணிட்டா குடும்பக் கௌரவம் என்னாறது?' என்றாள் அண்ணி.

'அம்மா... ஒரு நயா பைசா வரதட்சணை இல்லம்மா உனக்கு. நல்ல மருமகன் கிடைக்கிறதுக்கு நீ சந்தோஷப்படணும். நிறைய சம்பாதிக்கிறார்- குறைவா சம்பாதிக்கிறார்னு கூடப் பேச வேணாம். ரொம்ப நல்லவர்ம்மா. நல்ல குணம். இந்த குணம் எத்தனை பவுன் போட்டுத் தேடினாலும் கிடைக்காதும்மா!' என்றேன். எதுவும் எடுபடவில்லை.

அம்மாவை எப்படியாவது சமாதானப்படுத்த முயன்றேன். முடியவில்லை. கடைசியாகச் சொன்னேன். 'அம்மா... நீ சம்மதிக்கல, நானே கல்யாணம் பண்ணிப்பேன்.'

நான் சொன்ன மாதிரியே நடந்து விட்டது. சில காரணங்களால் உடனடியாகத் திருமணம் செய்தாக வேண்டிய நிலை. இரண்டே நாளில் வீடு பார்த்து- நண்பர்கள் முன்னிலையில் திருமணத்தை முடித்து- இதோ குடித்தனத்தை தொடங்கியாயிற்று. பதினைந்து நாளாயிற்று- கல்யாணமாகி.

அம்மாவை, தம்பி, தங்கையைப் பார்க்கவில்லை. பார்க்க வேண்டும் போல் இருக்கும். அம்மா கோபப் படுவாள் என்பதால் போகவில்லை. கொஞ்ச நாள் போகட்டும். அதிசயமாய் அண்ணா பார்க்க வந்து விட்

துக் கொள்ள முடிந்தது?

சுந்தரை காதலிப்பதை, அவரை மணக்க விரும்புவதைச் சொன்னதும்- வீட்டில் பூகம்பமே ஏற்பட்டு விட்டது. அப்பா இல்லாத வீடு. என் வருமானம்தான் பிரதானம். அண்ணாவுக்கு நிரந்தர வேலை இல்லை. கல்யாணம் வேறு ஆகிவிட்டது. பின்னால் ஒரு தம்பி, ஒரு தங்கை.

'நீ எவனையாவது கல்யாணம் பண்ணிட்டுப் போனா- இந்த புள்ளைங்கள யாரு பார்த்துக்கறது' என்று அம்மா புலம்பினாள். 'ஓ! இதுதான்



## காலேஜ் கார்னர் – 8

# "வருகிற எலெக்ஷனில் எந்தக் கட்சி ஆட்சிக்கு வரும்?"

**கணேசன் (சென்னை, பல் மருத்துவக் கல்லூரி):**

"பி.ஜே.பிதான். இந்தியாவை உலக நாடுகளில் தலை நிமிருகிற அளவுக்கு அணு ஆயுத சோதனை நடத்தியிருக்காங்க. கார்கில் பிரச்னைல நல்ல ஸ்டெப் எடுத்திருக்காங்க. காங்கிரஸ்ல நல்ல லீடர் இல்லை. அவங்களுக் குள்ளேயே அடிச்சுக்கிட்டு இருக்காங்க. அதுனால நிச்சயமா பி.ஜே.பிதான் வரும்!"



• கணேசன்



**லோகேஷ், விக்னேஷ், செந்தில், ஹரிஹரன் எல்லோரும் இதே காரணங்களைச் சொல்லி பி.ஜே.பிதான் ஆட்சிக்கு வரும் என்றார்கள்.**

டான். என்னதான் கோபம் என்றாலும் பாசம் விட்டு விடுமா?

அண்ணாவுக்குக் காப்பி கொடுத்தேன். அண்ணாவையே பார்த்தேன். "என்ன பார்க்கிறே?" என்று கேட்டான்.

"என் மேல் உனக்கு எவ்வளவு பிரியம். ஆனா நா உன்னைப் பல தடவை சிறுமைப் படுத்தி இருக்கிறேன். ஸாரிண்ணா" என்றேன்.

அண்ணா சிரித்து கொண்டான். கலர் டீ.வி., காஸ், மிக்ஸி என்று சகலமும் இருப்பதை அண்ணா பார்த்தான். "பரவாயில்லே... ஒரு வாரத்துல எல்லாம் வாங்கிட்டீங்க."

"எனக்கு சித்ரா மாதிரி குடும்ப பொறுப்புகள் இல்லாததால்- சம்பாதிக்கிற பணத்தை எல்லாம் பேங்கில்தான் போட்டு இருந்தேன். அதான் உடனே எல்லாம் வாங்க முடிஞ்சது" என்றார் சுந்தர். அண்ணாவுடன் நன்றாக நெருங்கிவிட்டார். சந்தோஷமாய் இருந்தது. இப்படியே சேர்ந்து விட்டால் நல்லது. பழைய மாதிரி இருந்தால் நல்லது. அம்மாவை, தம்பி, தங்கையைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. "எல்லோரும் சௌக்கியம்தானேண்ணா?"

"சுந்தருக்குக் காப்பி கொடுக்கலயா?" என்று அண்ணா கேட்டான்.

"அண்ணனும் தங்கையும் என்னை மறந்துட்டீங்க" என்று கேலியாய்ச் சுந்தர் சொன்னார்!

"ஆமா மறந்துட்டேன். அண்ணா சாப்பிட்டுத்தான் போகணும். பூரி செய்யப் போறேன்!" என்றவள் சுந்தர் பக்கம் திரும்பி "இதோ காப்பி கொண்டு வரேன்" என்று கூறி கிச்சனுக்குள் சென்றேன். அண்ணாவும் பின்னாலேயே வந்தான். அன்னியன் போல் ஹால் சோபாவி லேயே உட்கார்ந்து விட்டுப் போகாமல்-கிச்சன் வரை உரிமையுடன் வந்தது- மகிழ்ச்சியைத் தந்தது.

காப்பி டிகாக்ஷனைக் கலந்து கொண்டிருந்தபோது அண்ணா சொன்னான்- "கல்யாணம் ஆனாலும் முக்கால்வாசி சம்பளத்தை எங்களுக்கே கொடுக்கறதாச் சொல்லியிருந்தே. சம்பளம் ஒண்ணாந்தேதி வாங்கி இருப்பே. இன்னிக்கு தேதி அஞ்சு. அம்மா வாங்கிட்டு வரச் சொன்னா. அதுக்காகத்தான் வந்தேன்" என்றான்.

'அதுக்காகத்தான் வந்தேன்' என்ற வார்த்தை காய்ச்சிய இரும்பைக் காதில் ஊற்றிய மாதிரியிருந்தது.



கார்கில் நிவாரண நிதி திரட்டுவதற்காக, மூப்பனார், கடந்த வெள்ளியன்று பாண்டிபஜாருக்கு வந்தார். மாலை ஐந்து மணிக்கு பாண்டிபஜார் ஹனீபா டெக்ஸ்டைல்ஸ் அருகே ஆரம்பித்து, தி. நகர் பஸ் நிலையம் வந்தடைந்தபோது இரவு மணி எட்டே கால். கூடவே சென்ற நமது நிருபரின் கண்ணில் பட்டவை...

# குமரிஅனந்தனை அழைத்துக் கொண்ட மூப்பனார்!

● ஹனீபா டெக்ஸ்டைல்ஸ் அருகே தீரர் சத்திய மூர்த்தியின் புதல்வி லட்சுமி கிருஷ்ண மூர்த்தி, டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி இருவரும் நன்கொடை வழங்கியதும், சிறிது தூரம் நடந்து வந்த மூப்பனார், நாகேஷ் தியேட்டர் அருகில் திறந்த ஜீப்பில் ஏறிக் கொண்டார். அவர் முன்னே 'கார்கில் போர் வீரர்கள் நிவாரண நிதி' என்று எழுதப்பட்ட, மூவண்ண உண்டியல்.

● 'காப்போம் காப்போம்; தேசம் காப்போம்! விரட்டுவோம், விரட்டுவோம்; பாகிஸ்தானை விரட்டுவோம்! தருவீர், தருவீர்; நிதியைத் தருவீர்!' ஆகிய கோஷங்கள் எழுப்பப்பட்டன!

● ஒலிபெருக்கியில், 'வந்தே மாதரம், என்று தணியும்' போன்ற தேசபக்தி (சினிமா) பாட்டுக்களைப் போட்டது, பொது மக்களை நிவாரண நிதிக்கு நன்கொடை தரும் மூடுக்குக் கொண்டு வந்தது.

● கைகளைக் கூப்பி வணக்கம் சொல்லிக் கொண்டே, நன்கொடைகளையும் வாங்கி, உண்டியலுக்குள் போட்டுக் கொண்டே வந்தார் மூப்பனார். வாய் பாக்கை மென்று கொண்டே இருந்தது.

● பத்து, இருபது, ஐநூறு ரூபாய் நோட்டுகள் தவிர, செக் கொடுத்தவர்களும் கணிசம்.

● பூக்கடைகள் இருந்த இடத்துக்கு வந்ததும், ஒருவர் மூப்பனாருக்கு மாலை போட வந்தார். ஆனால், அதைக் கையில் வாங்கி, பக்கத்தில் கொடுத்து விட்டார் மூப்பனார். இன்னும் கொஞ்ச நேரம் கழித்து, இன்னொருவரும் பூமாலையுடன் வந்தபோது, மாலையை வாங்கி, அந்தப் பூக்காரரின் கழுத்திலேயே போட்டு அனுப்பி விட்டார்.

● ஜூஸ் கடைக்காரர், பெரிய கிளாஸில் ஜூஸ் கொடுத்தபோது, முதலில் மறுத்தவர், வற்புறுத்தலுக்கு இணங்கி, ஜூஸை வாங்கி, கொஞ்சம் குடித்து விட்டு, திருப்பிக் கொடுத்து விட்டார்.

● பெரிய கடைக்காரர்கள்தான் என்று இல்லாமல், பிளாட்பாரக் கடைக்காரர்கள், ரிக்ஷா, ஆட்டோ ஓட்டுனர்கள் தெருவில் நின்று கொண்டிருந்த ஆண்கள், பெண்கள், பொடிசுகள் என்று பலதரப்பினரிடமிருந்தும் நல்ல ரெஸ்பான்ஸ்.

● பனகல் பார்க் அருகே பத்து ரூபாய் கட்டு ஒன்றை உண்டியலில் போட்ட மாற்றுக் கட்சித் தலைவர் ஒருவரையும் மூப்பனார், சட்டென்று ஜீப்பில் ஏற்றிக் கொண்டார். அவர்? குமரிஅனந்தன்!

● ஒரு முதியவர் நன்கொடை தர விரும்புகிறார் என்று சொன்னவுடன், ஜீப்பை விட்டு இறங்கி வந்து, உண்டியலை அந்தப் பெரியவரிடம் நீட்டி, நன்கொடையைப் பெற்றுக் கொண்டார் மூப்பனார்.

● பாண்டிபஜார் மற்றும் ரங்கனாதன் தெருவில், பல முஸ்லிம்கள் நன்கொடை தந்தது குறிப்பிடத்தக்கது.

● கட்சி சார்பில்தான் இந்த நன்கொடை சேகரிப்பு நடத்தப்பட்டது என்றாலும், கட்சி வாசனையே இல்லாமல் தேசபக்திபூர்வமாக நடத்திய மூப்பனாருக்கு ஸ்பெஷல் பாராட்டுக்கள்!

— கௌதம்

படம் : சௌந்தர்ராஜன்

ஏதோ சில குப்பைப் புத்தகங்களைப் படித்தபோது அவற்றிலே சில பகுதிகளை மொழி பெயர்த்து இருப்பான்.

மொத்தத்தில் சிறு குழந்தைகளுக்கு ஏற்கும். நான் அதை நல்லதாக்க முடியுமா என்று பார்த்தேன்.

என் இதயத்தில் உருவான பீதியினால் அன்று, கடைசிச் சேவையாக!

திருப்பிக் கொடுத்து விடலாம் என்று யோசித்தேன். தேவியின் முகவரி கட்டுரையில் இருந்தது. அதிலும் ஒரு விசேஷம்.

வெறும் தேவி என்றுதான் முதலில் யோசித்து எழுதியிருக்கிறான். பிறகு அதை அடித்து மிஸ். தேவி என்று எழுதியிருக்கிறான். தேவி கல்யாணம் ஆகாதவள் என்று பத்திரிகை அலுவலகத்தில் உள்ளவர் அறிய வேண்டும் அல்லவா?

நான் மிஸ் என்ற வார்த்தையை அடித்தேன். இங்க்கை உதறி அதைக் கறுப்பாக்கினேன். கடைசிச் சேவகம்!

எல்லாம் முடிந்து விட்டது.

அல்லது இனியும் தொடருமா?

தொடரும். மனிதன் ஒரு மிருகம். காதல் மிகவும் கொடுமையான ஓர் அனுபவம்.

நான் தேவியைக் காதலிக்கிறேன்.

இது சட்டென்று வந்த ஒரு சிந்தனை.

இரவு மணி ஒன்பதோ பத்தோ ஆயிருக்க வேண்டும்.

நான் அறையில் தனிமையில் இருந்தபடி எழுதிக் கொண்டிருந்தேன். சட்டென்று தன்னை அறியாமல் தேவி ஞாபகம்.

தேவி அரை



# ஒரு காதல் டைரி 18

குறை உடையோடு நிற்கிறாள். அந்த விம்மும் மார்பகங்கள். மதுவின் வெறியூட்டும் ஒரு மயக்க சக்தி. தேவி என்னை அழைப்பது போல, விரும்பி இச்சிப்பது போல...



எனக்கு செயலற்ற ஒரு களைப்பு தோன்றியது. தேவியின் பீதியின் ஆசையும். அவள் பயந்திருக்கிறாள்.

ரகசியம் பலருக்குத் தெரிந்து விட்டது. ஆறுதல் சொல்ல நான் துடித்தேன்.

"என்னைப் பார்க்க வேண்டாம். எனக்கு எழுத வேண்டாம்" என்றாள்.நான் எழுதினேன்.

கடிதத்தை எங்கே அனுப்புவது?

வீட்டில் அவள் இல்லை என்றால்? அல்லது கல்லூரியில் இருந்து லீவ் எடுத்துக் கொண்டு இருந்தாள் என்றால்?

கடிதத்தோடு நான் நடந்தேன். பிரஸ்ஸுக்குப் போனேன். கிருஷ்ணன் நாயர் சொன்னார்.

"சில கம்யூனிஸ்ட் இளைஞர்கள் பேசிக் கொள்வதாகக் காதில் விழுந்தது. நீங்கள் ஒரு நாயர் யுவதியின் உபாசகன் ஆய்விட்டீர்களாமே! வாஸ்தவம்தானா?

நான் சொன்னேன், "வாஸ்தவம்" விவரம் ஏதும் சொல்லவில்லை. இந்த நிலையைப் பலர் அறிந்திருக்கக் கூடும். தேவி மேலும் அதிகமாகத் துக்கம் அடைவாள்.

இரவு, தேவியின் சில சகாக்களைப் பார்த்தேன். நான் எழுத ஒப்புக் கொண்ட நாடகத்தைப் பற்றிச் சொன்னேன்.

"நாடகம் எழுத சௌகரியம் இல்லை. வீட்டிற்குப் போகிறேன். தங்கைக்குக் கல்யாணம். அங்கே போனால் வசதிப்படுமோ இல்லையோ? விவரத்தைத் தேவிக்குச் சொல்லி விடுங்கள். தேவி காலேஜுக்கு வருகிறாளா?"

வருகிறாள். அன்றும் போய் இருந்தாள்.

அப்போது என்னை ஏமாற்றத்தான் சொல்லி இருக்கிறாள். லீவ் எடுக்கப் போகிறேன் என்று. அல்லது லீவ் எடுக்க வேண்டாம் என்று நான் சொன்னதாலா?

நாடகம் எழுத இயலவில்லை என்று தேவியின் அண்ணனிடமும் அறிவித்து இருந்தேன். இருந்தாலும் கல்லூரித் தோழர்களிடமும் சொன்னேன்.

நாடகம் எழுதி அனுப்புங்கள் என்று அவர்கள் சொன்னார்கள். அனுப்புவேன் என்று தேவியிடம் சொல்லப் போவதாகக் கூறினார்கள்.

விருப்பப்படி செய்து கொள்ளுங்கள் என்று கூறி விடை பெற்றுக் கொண்டேன்.

இருட்டிய பிறகு தேவிக்கு எழுதிய கடிதத்தை அஞ்சல் நிலையத்தில் சேர்த்தேன்.

யாருடைய பெயரிலும் அல்ல.

சும்மா ஒரு கடிதம். பிரதி இதுதான். தைரியம் கடைப் பிடிக்கவும். தைரியம். உறுதியாக.

இதயத்தினுடையதும், உடம்பின் உடையதுமான ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவும் துக்கப்பட வேண்டாம்.

சொந்த மனத்தில் உள்ள தனித்துவத்தை

**வைக்கம் முகம்மது பஷீர்**

**தமிழில் : வையவன்**



**''நர்ஸ்! அந்த பேஷண்ட் நரை மீசையோடு அட்மிட் ஆனாரு; இப்ப கருகருன்னு இருக்குதே, டை அடிச்சாரா?''**

**''இல்லை டாக்டர். ஜுரம் அதிகமாகி அனலா மூச்சு விடப்போக மீசையே கருகிப் போயிடுச்சு!''**

**– தாரமங்கலம் மகேஷ்**

முன்னோக்கிக் கொண்டு வருக. முன்னோக்கி எல்லோருக்கும் முன்னால் நல்ல பெயர் எடுக்க முயல வேண்டாம்.

மற்றவர்கள் உன்னைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்று கவனிக்காதே. எது வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டு போகட்டும்.

அரும்பே, வாசனையை வரவழைத்துக் கொண்டு மலரு!

பயப்படாதே! புன்னகை செய்.

உறுதியாக.

தைரியம் கடைப்பிடிக்கவும். தைரியம்.

தேவி ஞாபகம் இரவில் வந்தது. ஒரு புதிய ரிகார்ட் வாங்கினேன்.

"உன் நினைவு வரும்போது என் கண்களில் நீர் நிரம்புகிறது" என்று தொடங்கும் பங்கஜ் மல்லிக்கின் பாட்டு. ஒரு கத்தி. ஒரு கண்ணாடி ஆகியவற்றையும் வாங்கினேன்.

**கா**லையில் எழுந்தேன். ஷேவிங், குளியல் முடித்தேன். ஒன்பதரை மணிக்கு தேவியைப் பார்க்கப் போனேன். இறுதியான சந்திப்பு! வழியில் பல பெண்கள் ஆவலோடு என்னைப் பார்த்தனர். நானும் பார்த்தேன்.

எனக்கு ஆச்சரியமாய் இருந்தது.

இந்த வயசான காலத்தில் பெண்கள் என்னிடம் என்ன காண்கிறார்கள்? தித்திப்புப் பலகாரத்தை காக்கை ஏறு கண்ணால் பார்ப்பது போல. நான் நடந்தேன். மனம் வறண்டிருந்தது. முற்றிலும் காதல் இல்லை.

தேவி பத்து மணிக்கு வருவாள். ஒன்பதரைக்கு சந்திக்கும் இடம் சேர்ந்து விட்டேன். இன்னும் அரை மணி நேரம் காலத்தை எப்படிக் கொல்வது? யோசித்தேன். ஆனால் நான் போனவுடன் தேவி வந்து விட்டாள். வெள்ளை உடையோடு. வண்டியில்.

என்னைக் கண்டதும் வண்டி வேகம் குறைந்தது. நான் சென்றேன்.

தேவி புன்னகை செய்தாள். ஒரு சிறு குழந்தை போல. அவள் மிகவும் எளிமையாகவும் அழகியாகவும் மாறி இருந்தாள். தலை முடியைக் கட்டி வைக்கவில்லை.

நாங்கள் இருவரும் இதயம் திறந்து சிரித்தோம். எல்லாம் மறந்து சிரித்தோம். தேவி என்னிடம் கேட்டாள்.

"ஏன் நாடகம் எழுதப்பபோறது இல்லேன்னு சொன்னீங்க?"

"கேட்டவர்கள் லீவ் எடுக்கப் போவதாகச் சொல்கிறார்கள். யாருக்காக எழுதணும்?"

"நான் லீவ் எடுத்தா என்ன?"

"லீவ் எடுக்கப் போறியா?"

"இல்லே."

"எழுதறேன்."

"என் கடிதம் எங்கே?"

"அதை மட்டும் தரமாட்டேன்."

"சும்மா அசாத்தியமான காரியத்திலே... அவள் தொடரப் போனாள். நான் குறுக்கிட்டேன்."

"டோன்ட் யூ லவ் மீ?"

"இல்லேன்னு நெனச்சுக்குங்க" எனக்காக தேவி இயத்திலே தேனை வைத்துக் கொண்டு வாயிலே இல்லையென்று சொல்வது போலப் பேசினாள்.

"நான் போய் எழுதறேன்" என்றேன்.

"பதில் எழுத மாட்டேன்."

"அப்போ போக மாட்டேன்."

தேவி சிரித்தாள்.

"கட்டுரையைப் பாத்தீங்களா?" நான் கேட்டேன்.

"பதில் வீட்டுக்கா காலேஜுக்கா?"

"காலேஜுக்கு."

நான் இன்னிக்குப் போறேன். ஒரு புது ரெகார்ட் வாங்கி இருக்கேன்.

பேனா எடுத்து புதிய கிளிப்பைக் காட்டினாள்.

தேவி மிகவும் மனோரம்யமாக இருந்தாள். அகங்காரம், சதிவேலை, குறுக்குப் புத்தி எல்லாம் போய்விட்டது போல.

"நான் போகட்டுமா?"

"ங்ஹோ."

"நான் போறேன்."

நாங்கள் புன்னகை செய்தோம். வண்டி திரும்பியது. நான் நடந்தேன். கடிதம் அனுப்பிய செய்தியைச் சொல்ல மறந்து விட்டேன். நான் இந்த ஊரை விட்டுக் கிளம்பப் போகிறேன். இனி என்று தேவியைக் காண்பது?

என்று?

தேவி நினைவோடு நான் ஊருக்குச் சென்றேன் பத்து நாள் இருந்துவிட்டுத் திரும்பி வந்தேன். அதற்கிடையே அவளுக்கு எழுதிய கடிதங்கள் பின் வருவன.

அன்பே தேவி,

நலம்தானே? இன்று தேதி இருபத்திரண்டு. நான் நேற்று இங்கே வந்தேன். இன்று காலையிலேயே எழுதலாம் என்று யோசித்தேன். ஆனால் முடியவில்லை.

பழைய நண்பர்களும் பழைய எதிரிகளும். இப்படி கலாட்டாக்களுக்கு நடுவில்.

இந்த ஊர் முழுவதும் ஓடித் திரிந்தேன். இடையில் பத்து ரெகார்டுகள் வாங்கினேன். அங்கிருந்து கடைசியா வாங்கிய ரெகார்ட், யாத் ஆயேகி ந ஆயே தும்ஹாரியை வண்டியில் இருந்து பாடவிட்டுக் கேட்டேன்.

இனி நாம் என்று பார்ப்போம்?

சில மாதங்களுக்கு முன்பு நான் அங்கே வந்தபோது என் இதயத்தில் இந்த வேதனை இல்லை. யாருக்குத் தெரியும் வாழ்வில் இப்படி ஒரு நபர் வருவார் என்று?

என் தேவி இதற்குள் என்னை மறந்து விட்டிருக்கலாம் என்று நம்புகிறேன். மிகவும் மகிழ்ச்சி!

படித்து வேகமாகப் பாஸ் ஆக வேண்டும். எனக்கு முற்றிலும் மனம் கெட்டு விட்டது. நான் இன்றோ நாளைக்கோ வீட்டிற்குப் போவேன்.

இங்கே வசிக்க சரியான ஒரு இடம் கிடைக்கவில்லை. அடுத்த கடிதத்தில் விளக்கமான விவரம் எழுதுகிறேன். இது ஒரு வறண்ட கடிதம். என் மனசிற்கு நேர்ந்த பிளவு இது.

வேறு பலரும் இங்கே உண்டு. போக்கிரிகளான இளைஞர்கள் தான் அதிகம். இலக்கியவாதிகளும் உண்டு. எல்லோரும் சேர்ந்து என்னைக் கிண்டல் செய்கிறார்கள்.

என் வழுக்கைத் தலையை வர்ணிக்கிறார்கள். அப்புறம் நான் காலையில் எழுந்து யாருக்கு இந்தக் கடிதத்தை எழுதுகிறேன் என்று அவர்கள் தெரிந்து கொள்ளத் துடிக்கிறார்கள். கடிதத்தைக் கொண்டு அஞ்சல் நிலையத்தில் போட பலர் முந்தி வருகிறார்கள்.

கடிதத்தை நானே கொண்டு போய்ப் போடுவேன்!

'ஆசிரியக்குடிமகன்' நூல் திருப்பிக் கொடுக்க வேண்டிய ஒன்று. தேவை முடிந்ததும் திருப்பியனுப்பி வைக்கவும். வேறு விசேஷம் ஒன்றுமில்லை. நலம்.

நலன் வேண்டி வாழ்த்துக்கள்

உன் பஷீர்.

இது இரண்டாவது கடிதம்.

பிரியமுள்ள தேவி.

நான் நேற்று இங்கே என் வீட்டிற்கு வந்தேன். ஒரே ஆள் கூட்டம். கிராமபோன் இந்த குக்கிராமத்தில் ஒரு விசேஷ சம்பவம்.

நான் வந்ததுமே எல்லோருக்கும் பாட்டு கேட்கத் தோன்றி விட்டது. என் அம்மா,

---

காலேஜ் கார்னர்: 9

## "உங்க காலேஜ் கேண்டீன்ல என்ன ஸ்பெஷல்?"

**முருகானந்தம் (பி.எஸ்ஸி, பைனல், எஸ்.ஐ.வி.இ.டி. கல்லூரி, கௌரிவாக்கம்) :**

"ஒவ்வொரு காலேஜ்ல விதம் விதமா மெனு வச்சிருக்காங்க. எங்க கேண்டீன்ல எப்பவும் ஒரே மாதிரி ஐட்டங்கள்தான். காலைல பூரி, பொங்கல், வடை. மத்யானம் பிரிஞ்சி (எப்பவாவது தயிர் சாதம்). கூல்டிரிங்ஸ் கூட கிடையாது. சிகரெட் விக்கறாங்க. கேர்ள்ஸ்லாம் கேண்டீன் பக்கமே வரமாட்டாங்க. வந்தா அதிசயம். கேண்டீன்ல இப்போ லேட்டஸ்டா சுண்டல் போட ஆரம்பிச்சிருக்காங்க. கேண்டீன்ல உட்கார்ந்து சாப்பிடக் கூட இடம் இல்லே. ரெண்டு பெஞ்ச், ரெண்டு டெஸ்க், ஒரு ஃபேன் பத்தாததுக்கு வெளிச்சமா இருக்கணும்னு அந்தா பாருங்க குண்டு பல்பு!"

பேட்டிகள் : **கே. பாலசுப்ரமணியன்**

படங்கள் : **சண்முகம்**

---

சகோதரிகள், சகோதரர்கள் எல்லோருக்கும்.

பிறகு அக்கம் பக்கத்தார் முதலில் வைத்த பாட்டு 'ஜப் சாந்த் மேரா நிக்கலா" முடிவில் "யாத் ஆயே கி ந ஆயே தும்ஹாரி."

பாட்டுகள் எல்லோருக்கும் பிடித்தன.

அர்த்தம் என்னவென்று மட்டும் யாருக்கும் தெரியாது.

(தொடரும்)





Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi

Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.

Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)

Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

ஸ்ரீ:

ஸ்ரீமந் நடனகோபால நாயக்யை நம:




"ராணி சாரீஸ்"

"RANEE SAREES"

MADURAI

SPECIAL QUALITY

COLOURS ARE GUARANTEED

FOR DHOBI WASH

COPY RIGHT REGD. A-52846/95

சேலைகளின்
நிறம்
அது நிரந்தரம்
அதுவே...
ராணி சாரீஸ்
தரம்!

மதுரை **ராணி சாரீஸ்** சுங்குடிப் புடைவைகளுக்கு

## சென்னையில் நிரந்தர தனி ஷோரூம்

- 5.40 மீட்டர் முதல் 9.20 மீட்டர் வரை ராணி சாரீஸ் கிடைக்கும்.
- மதுரை Special cotton Sundhar Sarees, பெங்கால் காட்டன், பாலி காட்டன், நெகமம், வேங்கடகிரி, கோடம்பாக்கம், அனைத்துரக பேன்ஸி காட்டன் மற்றும் அனைத்து ரக சுங்குடி சேலைகள் கிடைக்கும்.
- சல்வார், சூடிதார் மெட்டீரியல்ஸ் கிடைக்கும்.
- திருமண விசேஷங்களுக்கான உயர்தர வேஷ்டிகள் கிடைக்கும்
- சென்னையில் ஒரிஜினல் ராணி சாரீஸ் இங்கு மட்டுமே உண்டு.

மற்றவை நம் தயாரிப்பல்ல

## ராணி சாரீஸ் எக்ஸ்குளுஸிவ் ஷாப்பி

கோல்டு கிரஸ்ட் காம்ப்ளக்ஸ் முதல் மாடி

54 & 55 வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், பனகல் பார்க்,

(ஸ்ரீ சாரதா வித்யாலயா பள்ளி எதிரில்)

சென்னை – 17 Ph: 8225778

SNC MDY

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka